தமிழ் இலக்கிய இலக்கண ஆய்வுகள்

# பல்கலைத் தென்றல்

இ. பேச்சிமுத்து
பா. நாகலட்சுமி
பதிப்பாசிரியர்கள்

# பல்கலைத் தென்றல்

(தமிழ் ஆய்வுக் கட்டுரைகள்)

*பதிப்பாசிரியர்கள் :*


**இ. பேச்சிமுத்து**

**பா. நாகலட்சுமி**



*வெளியீடு :*

**தமிழியற்புலம்**

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை-21.

## பதிப்பு விவரங்கள்

பதிப்பாசிரியர்கள்

**இ. பேச்சிமுத்து**

**பா. நாகலட்சுமி**

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | பல்கலைத் தென்றல். |
| பொருள் | : | தமிழ் ஆய்வுக் கட்டுரைகள் |
| முதற்பதிப்பு | : | சூன், 2001 |
| பக்கங்கள் | : | 124 + 10 =134 |
| படிகள் | : | 1000 |
| விலை | : | ரூ. 50 |
| வெளியிடுவோர் | : | தமிழியற்புலம்<br>மதுரை காமராசர் பல்கலைக்கழகம்<br>மதுரை- 625 021. |
| அச்சு | : | விஜயா பிரிண்டர்ஸ்<br>மதுரை |

---

கட்டுரைகளில் கூறப்படும் கருத்துக்கள் கட்டுரையாளர்களுடையவை. அவை பதிப்பாசிரியர்களையோ தமிழியற்புலத்தையோ சாரா.

---

**பேராசிரியர் மு. சாலிகு,**
துணைவேந்தர்

# வாழ்த்துரை

எம் பல்கலைக்கழகத் தமிழியற்புலம் பல ஆக்கபூர்வமான பணிகளைச் செய்து வருகிறது. கற்பித்தல், ஆய்வுசெய்தல், நூல்கள் வெளியிடுதல், கருத்தரங்குகள் நடத்துதல், ஆய்வாளர்களை உருவாக்குதல், ஆய்வாளர்களை நூல் வெளியிடத் தூண்டிச் செயற்படுத்தல் என்று பல பரிவாணங்களில் செயற்பட்டு வரும் தமிழியற்புலத்தின் பன்முக வளர்ச்சி பாராட்டிற்குரியது. அதன் அடுத்த கட்ட வளர்ச்சியாக இப்போது, ஆசிரியப்பணி மேம்பாட்டுத் திட்டத்தில் முழுநேர ஆய்வாளர்களாகத் தமிழியற்புலத்திற்கு வந்த கல்லூரிப் பேராசிரியர்கள் ஒன்றுசேர்ந்து, தத்தம் ஆய்வுப் பொருள் தொடர்பாக ஆய்வுக் கட்டுரை எழுதி அதை ஆய்வுமன்றத்தில் படித்து, விவாதித்து, செப்பஞ் செய்து, இப்போது 'பல்கலைத்தென்றல்' என்னும் பெயரில் ஆய்வு நூலாகக் கொண்டு வந்துள்ளனர். தமிழியற்புலத்தின் வரலாற்றில் இது புதிய சாதனை. இதற்காக இவர்களைப் பாராட்டுவதும் போற்றுவதும் நம் கடமையாகும், அத்துடன் இத்தகு ஆய்வு வெளியீடுகளை அனைவரும் வாங்கி ஆதரிப்பதன் மூலம் தொடர்ந்து இத்தகைய நூல்கள் வெளிவர நாம் உதவலாம்.

ஆசிரியப்பணி மேம்பாட்டுத் திட்ட ஆய்வாளர்களாக வரும் பேராசிரியர்கள், ஆய்வுப்பணியுடன், நூல்வெளியீட்டுப்பணியையும் செய்திருப்பது பாராட்டிற்கு உரியதாகும். இந்நூலில் ஆய்வுக் கட்டுரைகள் படைத்துத் தமிழ் விருந்தளித்துள்ள ஆசிரிய நண்பர்களையும் இதன் பதிப்பாசிரியர்களையும் நான் உளமாரப் பாராட்டுகிறேன். இதற்குக் காரணமாக இருந்து, இந்த ஆய்வாளர்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து நெறிப்படுத்திவரும் தமிழியற்புல ஒருங்கிணைப்பாளர் நண்பர் பேராசிரியர் சு. வேங்கடராமன் அவர்களையும், இப்பணியில் அவருக்குத் துணை நின்ற பேராசிரியர் இ. முத்தையா அவர்களையும் நான் வாழ்த்துகிறேன்.

# அணிந்துரை

வாரந்தோறும் புதன் கிழமையன்று தமிழியற்புல ஆய்வாளர்கள் பிற்பகலில் புதன் வட்டமாகக் கூடி ஆய்வுக் கட்டுரைகள் படித்து விவாதிப்பர் ; பரல்கள் என்ற பெயரில் நூலாகவும் வெளியிடுவர். தமிழியற்புலத்தில் கடந்த 25 ஆண்டுகளாக இது நடைபெற்று வரும் நிகழ்வாகும். கல்லூரியில் ஆசிரியர்களாகப் பணியாற்றிவருவோர், நிதி நல்கைக் குழுவின் நிதியுதவியுடன் ஆசிரியர் பணிமேம்பாட்டுத் திட்டத்தில் தம் ஆய்வை முடிக்கத் தமிழியற்புலத்திற்கு வந்ததும், புதன்வட்டத்தில் பங்கு பெற்றனர். அவர்களையும் தத்தம் ஆய்வுப்பொருள் தொடர்பாக ஆய்வுக்கட்டுரை படிக்கவும் விவாதிக்கவும் வைத்ததுடன், ஆய்வுக் கட்டுரைகளைத் தொகுத்து நூலாக வெளியிடுமாறு நாங்கள் கூறினோம். அதையேற்று ஆசிரிய ஆய்வாளர்கள் செயற்பட்டு இப்போது 'பல்கலைத் தென்றல்' என்ற பெயரில் நூலாக ஆக்கி உள்ளனர். பாராட்டிற்குரிய சாதனை இது. தமிழியற்புல வரலாற்றில் பணிமேம்பாட்டுத் திட்ட ஆசிரிய ஆய்வாளர்கள் இவ்வாறு ஆய்வு நூல் கொண்டு வருவது முதன் முறையாக இப்போது நிகழ்ந்துள்ளது. ஆக்க பூர்வமான தமிழியற்புலத்திற்குப் பெரும் புகழைச் சேர்ப்பதான இம்முயற்சியை நாங்கள் மனமாரப் பாராட்டுகிறோம். எங்கள் கனவை நனவாக ஆக்கிய பதின்மூன்று ஆசிரிய ஆய்வாளர்களைப் பாராட்டி மகிழ்கிறோம்.

இக்கட்டுரைகள் தொல்காப்பியம், சங்க இலக்கிய அகமரபு, தனிப் பாடல்கள் உணர்த்தும் பெண்மை, வள்ளலாரின் உயிர் இரக்கக் கோட்பாடு, இரட்சண்ய யாத்திரிகத்தில் எதிர் நிலைமாந்தர், வைரமுத்து கவிதைகளில் தேசியம், நடைச்சித்திரம் அமைப்பும் அழகும், அந்நியமாதலும் தொடர்ந்து வாழ்தல் பிரச்சினையும், சிவசங்கரி நாவல்களில் குழந்தை-பெற்றோர் உறவு முறைகள், குற்றவியல் நாவல்கள், தன்முன்னேற்றச் சிந்தனைகள், வாழ்க்கைப் பயணச் சடங்குகள்-வகைகள், மதிப்பீடு என்னும் பல்வேறு கோட்பாடுகள், அணுகுமுறைகள் கொண்டு

வளர்ந்து வரும் தமிழ் ஆய்வு உலகம், அடிப்படையான இலக்கண-இலக்கிய அனுபவம் தரும் படிப்பை மறந்துவரும் சூழலில், இதைப் போன்ற பல்துறைக் கட்டுரைத் தொகுப்பு முயற்சிகள் வரவேற்கவும் பாராட்டப்படவும் வேண்டும். அவ்வகையில் எம் புல ஆசிரிய ஆய்வாளர்களின் கூட்டு முயற்சியின் விளைவாக உருவாகியுள்ள 'பல்கலைத் தென்றல்' நூலைத் தமிழ் உலகம் வரவேற்றுப் போற்றுவதாக. தமிழியற்புலத்தின் ஆக்க பூர்வ முயற்சியாக அமையும் இந்த ஆய்வுக் கட்டுரைகளைப் படைத்த ஆசிரிய நண்பர்களையும் இந்த நூலின் பதிப்பாசிரியர்களையும் மனமார வாழ்த்துகிறோம்.

21-06-2001 (சு. வேங்கடராமன்)

(இ. முத்தையா)

# பதிப்புரை

பல்வேறு இடங்களில் பாங்குறப் பூத்து நின்ற மலர்கள் ஒருசேர இணைந்து மாலையாவது போல் இச்சிந்தனை மலர்கள் இங்குச் சேர்ந்திருக்கின்றன. வேறு வேறு திசையில் வீசிய தென்றலைச் சிக்கெனப் பிடித்து, பல்கலைக் கழக வளாகத்திலிருந்து பதம்பார்த்துப் புறப்படச் செய்யுமாறுபோல இவ்வாய்வுத் தென்றல் ஒல்லும் வாயெல்லாம் உவப்பூட்டப் புறப்பட்டு வருகின்றது.

'பல்கலைத் தென்றல்' எனும் இந்நூல், ஆசிரியர் பணிமேம்பாட்டுத் திட்டத்தின்கீழ் மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியற் புலத்தில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்டுள்ள ஆய்வாளர்கள் புதன் வட்டக் கருத்தரங்குகளில் பாடித்தளித்த கட்டுரைகளின் தொகுப்பாகும். 2000-2001 கல்வியாண்டில் இக்கருத்தரங்குகள் நடைபெற்றன.

முழுநேர ஆய்வாள மாணவர்கள் பங்கு பெறும் நோக்குடன் இக்கருத்தரங்கு பல ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. முதன்முதலாகக் கடந்த கல்வியாண்டில் 'ஆசிரியர் பணிமேம்பாட்டுத் திட்ட' ஆய்வாளர்களும் இக்கருத்தரங்கில் கட்டுரை வாசிக்கலாமே எனத் தமிழியற்புலத் தலைவரும் ஒருங்கிணைப்பாளருமான முனைவர் திரு. சு. வேங்கடராமன் அவர்களும், கருத்தரங்கப் பொறுப்பாளர் முனைவர் திரு. இ, முத்தையா அவர்களும், ஏனைய பேராசிரியப் பெருமக்களும் எண்ணினர். எண்ணம் செயலானது, கட்டுரைகள் படித்தளிக்கப்பட்டன.

இந்நூலில் இடம்பெறும் கட்டுரைகள் சங்க இலக்கியத்திலிருந்து இன்றைய புதுக்கவிதை, உரைநடை வரையிலான தமிழ் இலக்கியத்தின் பல்வேறு மரபுகளைத் தொட்டும், இலக்கணத்தை எட்டியும் அமைகின்றன.

இந்நூலுக்கு அருமையான அணிந்துரை அளித்துள்ள மதிப்பிற்குரிய மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணை வேந்தர் திரு. கு. சாலிகு அவர்களுக்கு எங்களது மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறோம்.

'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே' என்ற வாயுரை-நாவுக்கரசரின் நயமிகு கவிதை உறை நெஞ்சில் நிழலாடுகிறது. ஆம்! இந்நூல் வெளிவருவதற்கு வெறும் கருவிகளே நாங்கள்; கருத்தாவாக இருக்கும் பெருமை முழுமையாகத் தமிழியற்புலத் தலைவர் திரு. சு. வேங்கடராமன் அவர்களையும், கருத்தரங்கப் பொறுப்பாசிரியர் திரு. இ. முத்தையா அவர்களையுமே சாரும். அவ்விருவரும் இக்கட்டுரைகள் நூல் வடிவம் பெற வேண்டும் எனப் பெரிதும் விழைந்தனர். அவர்கள் தந்த ஊக்கத்தில் இக்கட்டுரைகள் நூல் வடிவம் பெற்றுள்ளன. அன்னார் அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றியை நவில்கின்றோம்.

எங்களுக்குள் இருந்து ஆய்வுப் பணியில் எங்களுக்கு வழிகாட்டி, கட்டுரையாக்கத்திற்குக் கை கொடுத்த நெறியாளர் நெஞ்சங்களுக்கு நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவிக்கின்றோம். கருத்தரங்குகளில் கலந்து கொண்டு எங்களுடைய அறிவுத் தேடலுக்கு உறுதுணையாக இருந்த தமிழியற்புலப் பேராசிரியப் பெருமக்களுக்கு எங்கள் உளங்கனிந்த நன்றி.

இந்நூலினை நன்முறையில் அச்சிட்டு உரிய நேரத்தில் வெளியிட உதவிய விஜயா பிரிண்டர்ஸ் உரிமையாளர் 'மனிதத் தேனி' சொக்கலிங்கம் அவர்களுக்கும், அச்சக ஊழியர்களுக்கும் எங்கள் நன்றி.

பதிப்பாசிரியர்கள்

**இ. பேச்சிமுத்து**
**பா. நாகலட்சுமி**

## கட்டுரையாளர்

1. இ. பேச்சிமுத்து, எம்.ஏ., எம். ஃபில்., பி.எட்., பி.எல்.,
தியாகராசர் கல்லூரி, மதுரை - 9.

2. மு. பெர்னாட்சா, எம்.ஏ., எம்.ஃபில்.,
ச. வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி, மதுரை.

3. கெ. செல்லத்தாய், எம்.ஏ., எம்.ஃபில்.,
எஸ்.பி.கே. கல்லூரி, அருப்புக்கோட்டை.

4. சே. புனிதகுமாரி, எம்.ஏ., எம். ஃபில்.,
எம்.வி.எம். அரசினர் மகளிர் கலைக் கல்லூரி, திண்டுக்கல்.

5. சு. சக்திவேல், எம்.ஏ., எம்.ஃபில்.,
தியாகராசர் கல்லூரி, மதுரை-9.

6. க. ஜோஸ்பின் மேரி, எம்.ஏ., எம். ஃபில்.,
பாத்திமா கல்லூரி, மதுரை.

7. அசன் பாத்திமா, எம். ஏ., பி. எட்., டி.ஜி.டி.,
எஸ். எஃப். ஆர். மகளிர் கல்லூரி, சிவகாசி.

8. எ.மே. கொலாஸ்டிக்கம்மாள், எம்.ஏ., எம்.ஃபில்.,
ஜெயராஜ் அன்ன பாக்கியம் மகளிர் கல்லூரி, பெரியகுளம்.

9. வெ. சரோஜினி, எம்.ஏ., எம்.ஃபில்.,
அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

10. பா. நாகலட்சுமி, எம்.ஏ., எம்.ஃபில்.,
வே.வ. வன்னியப்பெருமாள் கல்லூரி, விருதுநகர்.

11. கி. லோகேஸ்வரி, எம்.ஏ., எம்.ஃபில்.,
அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி, பழனி.

12. மி. ஆரோக்கிய மேரி, எம்.ஏ.,
ஜெயராஜ் அன்னபாக்கியம் மகளிர் கல்லூரி, பெரியகுளம்.

13. பு. சித்திரைவேல், எம்.ஏ., எம்.ஃபில்.,
சேதுபதி அரசு கலைக் கல்லூரி, இராமநாதபுரம்.

# உலவும் தென்றல்...

# புலவி - ஊடல் - துனி

இ. பேச்சிமுத்து

உயிர்களுக்கெல்லாம், குறிப்பாக மனிதர்களுக்கெல்லாம் இயல்பாக அமைந்த உணர்ச்சிகள் மானுடத்தின் மனவளர்ச்சியினால் கருத்துருவாக்கம் பெற்று, பண்புருவாக்கமாகி இலக்கண வரையறைகளுக்கு உட்பட்டுள்ளன. அவ்வாறு வரைமுறைப் படுத்தப்பட்ட உணர்வுக் கூறுகளில் அகவுணர்வின் இன்பியல் கூறாக அமைந்த ஊடல் என்பதும் ஒன்று.

ஒரு பொருளை அடையும், காணும் அல்லது அறியும் முயற்சியில் சிறு தடையும், மறைப்பும், மறுப்பும் அம்முயற்சியில் வேகத்தையும் மிகு விழைவையும் தோற்றுவிக்கும். குறிப்பாக அகவுணர்வுச் சூழலில், பாலியல் வேட்கையில் இப்பண்பு மிகுந்து காணப்படுவதை அறியலாம். இத்தகைய இயல்புணர்ச்சியை மையமிட்டே 'ஊடல்' உணர்வு அறியப்படுகிறது. காம இன்பம் எனும் இயல்புணர்ச்சியின் அடித்தளத்தில் எழுப்பப்பட்ட அழகிய மாளிகையே ஊடல் எனலாம். இந்த இயல்புணர்ச்சியைப் பண்பாட்டு நிலையில் வரையறுத்த நம்முன்னோர் அதற்குப் புலவி, ஊடல், துனி என்று பெயரிட்டு அழைத்தனர். அத்தகு ஊடல் அறிவுநிலையில் இருந்து வெளிப்படுவது போன்று இருந்தாலும் 'அடிப்படை உணர்ச்சி' என்ற நிலையிலேயே பண்டை இலக்கணிகள் காணுகின்றனர். அதனால்தான் 'மருதத்தின் உரிப்பொருள் ஊடல்' என்று வரையறுப்பதை அறிகின்றோம்.

## ஆய்வு நோக்கம்

அகவாழ்வில் ஈடற்ற மகிழ்ச்சிக்கு உறுதுணையாய்த் திகழ்வது ஊடல். அவ்வூடல் இடமறிந்து, காலமறிந்து, அளவறிந்து வெளிப்படுத்தினால் இன்பநிலை தானே வந்தெய்தும். அவ்வாறன்றி இடம், காலம், அளவு அறியாது ஊடல் கொண்டாலும் அல்லது அறவே ஊடலின்றி அகவாழ்க்கை நடந்தாலும் அவ்வக வாழ்க்கை சுகமின்றிப் போகும்; ஏன் வாழ்வே தடம்மாறிப் போகவும் கூடும். இல்லறத்தில் - அகவாழ்வில் ஏற்படுகின்ற மனச்சிதைவு அகவாழ்வில் சிக்கலை ஏற்படுத்துவதோடு புறவாழ்வின் செயல்பாட்டையும் புறந்தள்ளிவிடும். தனிமனிதச் சிக்கல் சமூகச் சிக்கலாகவும் பெருகும். எனவே எந்த ஒரு

சிக்கலும் 'நோய் முதல் நாடிச்' சீர்படுத்தப்பட வேண்டும் என்கிற தன்மையில் ஊடற் சிக்கலும் அறியப்பட வேண்டும்.

பண்பாட்டு மானுடவியல் ஆய்வின் அடிப்படையில் மாந்தரின் - குறிப்பாகத் தமிழரின் அகற்ற முடியாத பண்பாட்டுக் கூறாகத் திகழும் இவ்வூடல் குறித்து ஆய்வு செய்து, அகவாழ்வில் ஊடலுக்குரிய பங்கை வெளிப்படுத்துவது தேவையாகின்றது.

ஊடல் குறித்துத் தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களிலும், சிலப்பதிகாரம் போன்ற இலக்கிய நூல்களிலும், வாழ்க்கையின் வரையறைகளும் இலக்கியப் பண்பும் ஒருங்கே கொண்டு திகழும் திருக்குறள் போன்ற நூல்களிலும் பலவாறு அமைந்த செய்திகளை அறியமுடிகின்றது.

இலக்கியப் பாடுபொருளில் ஊடலின் பங்கு குறித்தும், ஊடல் என்ற சொல்லோடு தொடர்புற்று அமைகின்ற 'புலவி', 'துனி' ஆகிய சொற்பொருள் வரையறை குறித்தும், இயல்பு வாழ்க்கையில் அவ்வூடலின் நோக்கும் போக்கும் குறித்தும் அறியப்பட வேண்டியது அவசியம் என்பதை ஆய்வு நோக்கமாகக் கொண்டு 'அவ்வூடல்' குறித்த ஆய்வு நிகழ்த்தப்பெறுகின்றது.

### ஊடல் படைப்பின் பின்னணி

மருத நிலத்தின் வளமும், அதனால் உருவான செல்வச் செழிப்பும் சமுதாயத்தின் மிதமிஞ்சிய இன்ப வேட்கைக்கு வித்திடுகிறது. பரத்தையர் ஒழுக்கத்தை மருத நிலத்திற்கே உரியதாகப் படைத்திருப்பது நாடக வழக்காக முற்றிலும் கொள்ளாமல் பெரும்பான்மை கருதிப் படைத்திருப்பதாகவே கொள்ள வேண்டும்.

செல்வச் செழிப்பு மிக்க மருதநிலப் பகுதியிலேயே அதாவது நீர்வளமிக்க பகுதியிலேயே குடிப்பெருக்கமும், அதனால் அமைந்த நகரமும் தோன்றியுள்ளன. அங்குத்தான் 'அரசு முறையும்' நிலைபெற்றுக் கோலோச்சி உள்ளது. இத்தகைய பின்னணியில் பார்க்கும்போது, சங்க இலக்கியங்கள் ஊடலுக்குரிய நிலைக்களனாகப் பெரும்பாலும் பரத்தையர் பிரிவையே பேசுவதன் காரணம் புலப்படுகின்றது.

தொல்காப்பியரும் தமக்கு முந்தைய காலத்தின் இலக்கிய மரபாக மேற்குறித்த கருத்தையே படம் பிடிக்கின்றார். ஆனால் பரத்தையர்

ஒழுக்கத்தை வன்மையாகக் கண்டித்த வள்ளுவரோ ஊடலுக்குரிய நிலைக்களனாகப் பரத்தமையைச் சுட்டாதது சிந்தித்தற்குரியது. அவர் முந்தைய மரபுகளை மீறியும், சமகால இயல்பு வாழ்க்கையை உற்று நோக்கியும் இலட்சிய நோக்கில் ஊடலுக்கான நிலைக்களனைப் படைத்திருக்கின்றனர்.

## ஊடலுக்குக் காரணம் தேவையா?

பரத்தமை மட்டும்தான் ஊடலுக்கு நிலைக்களன் என்பது முற்றிலும் பொருத்தமற்றதாகும். ஊடலுக்கான காரணங்களுள் பரத்தமையும் ஒன்று என்பதுதான் பொருத்தமுடையதாக இருக்கும். இந்த இயல்பின் பின்னணியில், உள்ளதில் சிறப்பற்றதாகிய பரத்தமையை விட்டுவிட்டு, மென்மையான உணர்வுக் களங்களை ஊடலுக்கான காரணங்களாகக் காட்டியுள்ளார் திருவள்ளுவர். ஏன்? ஊடலுக்குக் காரணமே வேண்டியது இல்லை என்கிற நிலைப்பாட்டையும் மேற்கொண்டு, காரணமின்றியும் ஊடுகின்ற அகவுணர்வுக் களங்களை அருமையாகப் படைத்து மொழிகிறார். இதனை,

*புல்லா திராஅப் புலத்தை அவர்உறும்*
*அல்லல்நோய் காண்கம் சிறிது.* (1301)

*இல்லை தவறவர்க் காயினும் ஊடுதல்*
*வல்லது அவர்அளிக்கு மாறு* (1321)

*தவறில ராயினும் தாம்வீழ்வார் மென்றோள்*
*அகறலி னாங்கொன் றுடைத்து* (1325)

என்ற குறட்பாக்களில் தலைவி கூற்றினால் சுட்டுகின்றார்.

வள்ளுவரின் படைப்பாக்கத்தில் அமைந்த ஊடற் களங்கள்தாம் எக்காலத்திற்கும் எவர்க்கும் பொருத்தமுடையதாக அமைந்து உவகையூட்டுகின்றன என்று கூறுவது சாலப்பொருந்தும்.

கலிங்கத்துப் பரணியில் கடை திறப்பு எனும் ஒரு பகுதி முழுவதும் இவ்வூடலை மையப்படுத்தி மிகவும் அகச்சுவைபட விளக்குவதை அறிகின்றோம். இங்கு ஊடலுக்கான காரணம் 'போர்மேற் சென்று திரும்பிய தலைவன் தாமதித்து வந்ததே' என்று காட்டப்படுவது நினைத்ததற்குரியது. இப்பரணி பரத்தையர் பிரிவினைச் சுட்டாது,

முழுக்க முழுக்க இயல்பான அகவாழ்வில் நடந்த சுவையான நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்குவது குறிப்பிடத்தக்கது.

**சொற்பொருள் வரையறை**

திருவள்ளுவரின் இறுதிக் குறளுக்கு விளக்கவுரை தருகின்ற பரிமேலழகர்,

> *முதிர்ந்த துனியாயவழித் துன்பம் பயத்தலானும், முதிராத புலவியாயவழிக் கலவியின்பம் பயவாமையானும், இரண்டற்கும் இடையாகிய அளவறிந்து நீங்குதல்...*

ஆகிய 'அரிதான ஊடல்' வழியே இன்பம் பயக்கும் என்கிறார். இங்குப் புலவி, ஊடல், துனி ஆகிய மூன்று சொற்களுக்கும் பொருள்வரையறை செய்திருப்பதை அறிகின்றோம். ஆனால் திருவள்ளுவர் இப்பொருள் வரையறையை மேற்கொள்ளவில்லை என்பதை அவர் குறள்வழி அறிய முடிகின்றது. சான்றாக, புலவி அதிகாரத்தில் ஊடியவரை, துனியும், ஊடலின், ஊடல் என்றும், புலவி நுணுக்கம் அதிகாரக் குறள்களில் 'ஊடியிருந்தேமா', 'ஊடினாள்' என்றும் ஊடல் எனும் சொல் ஆளப்பட்டுள்ளது. அதேபோன்று ஊடலுவகை அதிகாரத்தில் 'புலத்தலின்', 'புலவியுள்' என்றும் புலவி எனும் சொல் ஆளப்பட்டுள்ளது.

பரிமேலழகர்கூட வேறு குறள்களுக்குப் பொருள் காணும் போது இவ்வரையறையைப் பின்பற்றவில்லை. துனிசெய்து எனும் இடத்தில் 'அவர் தவறுநோக்கி முன் புலவியை உண்டாக்கி' என்றே பொருள் எழுதுகின்றார். புலவியும் ஊடலும் ஒருபொருள் குறித்த பல சொல்லாக அமைகின்றது. ஆனால் துனி எனும் சொல் பலபொருள் குறித்த ஒரு சொல்லாக அமைந்து புலவி, ஊடல் ஆகிய பொருளையும், முதிர்ந்த ஊடல் எனும் பொருளையும், வெறுப்புக்கலந்த ஊடல், வெறுப்பு, கோபம் எனும் பொருள்களையும் சூழலுக்குத்தக்கப் பொருள் தந்து நிற்பதை அறியமுடிகிறது. சான்றாக, தொல்காப்பிய உவமையியலில் (30) துனியுறு கிளவி எனும் இடத்தில் 'துன்பம் தோன்ற வரும் சொல்' எனும் பொருள் காணப்படுகின்றது. 1294, 1306 ஆகிய குறள்களில் புலவி, ஊடல் எனும் பொருளில் வருகின்றது. படைமாட்சி எனும் அதிகாரத்தில் 769ஆவது குறளில் 'மனத்தினின்றும் நீங்காத வெறுப்பு' என்று பரிமேலழகர் உரை தருகின்றார். நம்பியகப்பொருளில்... 'வயங்கு துனி' (1-99) என்று

வருமிடத்தில் 'இல்வாழ்க்கை சிதையவரும் வெறுப்புக் கலந்த ஊடல்' என்று பொருள் தரப்படுகின்றது.

மேற்கண்ட சான்றுகளை வைத்துப் பார்க்கின்ற பொழுது, துனி எனும் சொல், ஊடல் எனும் காமம் சார்ந்த பொருள்தன்மையில் ஆளப்பட்ட நிலை அருகியே காணப்படுகிறது, முதிர்ந்த ஊடல் எனும் நிலையைச் சுட்ட நம்பியகப் பொருள் 'தீர்ப்பில் ஊடல்' (5-34) 'தீதுடைப்புலவி'(1-99) 'வாடா ஊடல்' (1-105) என்று பயன்படுத்தப் படுவதை அறியமுடிகின்றது. 'துனி'ப்பொருள் 'படைத்துக்கொண்ட தலைமக்கட்கு' ஆகாத குணம் என்று கருதியே தொல்காப்பியம் கற்பியலில் (9) 'உணர்ப்புவயின் வாரா ஊடல்' என்றும், 'நம்பியகல் பொருள்' (5-34) பெருந்திணை என்றும் பாகுபடுத்தியதையும் அறிகின்றோம்.

சிலப்பதிகாரத்தில்,

*'கலவியும் புலவியும் காதலற்கு அளித்து' (4-32)*

*'கூடலும் ஊடலும் கோவலற்கு அளித்து' (6-110)*

என்று வருமிடங்கள் புலவி, ஊடல், என்பவற்றை ஒரு பொருள் பட ஆளப்படுவதை அறிய முடிகின்றது. அதோடு, புலவி, ஊடல் என்பவற்றை ஒருபொருள்பட ஆளப்படுவதை அறிய முடிகின்றது. அதோடு, புலவி, ஊடல், துனி என்பவற்றிற்குச் சரியான ஒரு பொருள் வரையறையை இளங்கோவடிகள்,

*'புணர்ச்சி உட்பொதிந்த கலாம்' (8-98)*

என்ற அடியின்மூலம் வழங்குகின்றார். அதாவது, 'புணர்ச்சி விருப்பத்தை மனதில் உட்கொண்டு நிகழ்த்தப்படும் ஒரு பொய்யான சண்டை அல்லது கோபம்' என்பதாகக் கொள்ளலாம். இப்பொருள் வரையறைக்குப் பொருந்தாது பல இடங்களிலும், பொருந்தி மிகச் சில இடங்களிலும் 'துனி' கையாளப்பட்டு, பின்வந்த இலக்கிய வழக்கில் முற்றிலும் பொருந்தாது விலகிவிட்டதை அறியமுடிகின்றது.

## ஊடற்குரியோர்

தலைவியும் தலைவனுமே ஊடற்குரியவர்களாக இலக்கணங்கள் வரையறை செய்கின்றன. தலைவன் தலைவி புணர்ச்சி நோக்கித் தோழியும்

ஒரிரு சூழலில் ஊடுவதாகத் தொல்காப்பியத்தால் அறியப்படுகின்றது (22-18). காமக்கிழத்தியும் காதல் பரத்தையும்கூட ஊடலுக்கு உரியவர்களாகத் தொல்காப்பியத்தாலும், சிலப்பதிகாரத்தாலும் சுட்டப்பட்டுள்ளார்கள். (22-10), (7-24).

தலைவன், களவில் செய்குறி பிழைத்தபோதும், கற்பில் உணர்ப்புவரை இறந்தபோதும் ஊடல் கொள்கிறான் என்பதாகத் தொல்காப்பியம் சுட்டுகிறது (22-15). இறையனார் உணர்ப்புவரை இறத்தலை மட்டுமே சுட்டுகிறார் (50). ஆனால், நம்பியகப்பொருள் மேற்காட்டிய இரண்டனோடு தோழி சேட்படுத்திய நிலையில் ஆற்றாது புலக்கும் மற்றொரு சூழலையும் விளக்குகிறது (2-28, 44).

தலைவியின் ஊடலுக்கான களங்கள் பலபட விரித்துப் பேசப்படுகின்றன. தோழி, காமக்கிழத்தி, காதற்பரத்தை ஆகியோரின் ஊடற்களமும் சுட்டப்படுகின்றன.

## இளங்கோ படைத்த ஊடல்

ஊடலுக்கான சூழல்கள் உணர்ச்சியின் அடிப்படையில் பலவாகக் காட்டப்பட்டாலும், அவை தனியிடத்தில் பொலிதலே சிறப்புடைத்து, இதனை இளங்கோவடிகள் சிறப்பாக உணர்த்துகின்றார். பலரும் கூடியிருக்கும் அவையிலோ, பலரும் காணும் பொது இடத்திலோ ஊடல்கொள்வது பொருத்தமற்றது என்பதாகக் காட்டுகின்றார். இதனை,

*'மன்னும்ஓர் குறிப்புண்டு இவன்தன்னிலை மயங்கினான்என*
*கலவியால் மகிழ்ந்தாள்போல் புலவியால் யாழ்வாங்கி (7-24)*

என்றும்,

*'மடல்அவிழ் கானல் கடல்விளை யாட்டினுள்*
*கோவலன் ஊட கூடாது ஏகிய*
*மாமலர் நெடுங்கண் மாதவி ......' (8-14-16)*

என்றும் பலரும் காண ஊடிப் பிரிந்த கோவலன் மாதவி நிலையின் வாயிலாகப் படைக்கின்றார். அதேபோன்று,

*'கூடல் மகளிர் ஆடல் தோற்றமும்*
*பாடற் பகுதியும் பண்ணின் பயங்களும்*
*காவலன் உள்ளம் கவர்ந்தன என்றுதன்*

*ஊடல் உள்ளம் உட்கரந்து ஒளித்து*
*தலைநோய் வருத்தம் தன்மேல் இட்டு*
*குலமுதல் தேவி கூடாது ஏக' (16 : 131-136)*

என்று பலரும் கூடிய அவையில் பாண்டிமாதேவி ஊட, கொற்றம் வீழ்ந்த நிலையைக் காட்டுகின்றார்.

## ஊடலின் கால அளவு

ஊடல், நின்று நீங்கும் கால அளவைக் கொண்டு இரண்டு வகைப்படுத்தப்படுகிறது. இந்த வகைப்பாட்டைத் தொல்காப்பியர் தனியாக விளக்காமல் குறிப்பாகச் சுட்டிச் செல்கிறார் (22-9). இறையனாரும் விரிவாகப் பேசாமல் அதன் வகைப்பாட்டைச் சுட்டியே செல்கிறார். ஆனால் நம்பியகப்பொருள் ஆசிரியர் தொல்காப்பியம் சுட்டிக் காட்டிய வகையை, 'உணர்த்த உணரும் ஊடல்' என்றும் 'உணர்த்த உணரா ஊடல்' என்றும் வகைப்படுத்தி இதற்கான சூழலை மிக விரிவாகப் பேசுகின்றார். (3-6, 7, 8)

ஊடல் நிற்கும் கால அளவை எந்த இலக்கணமும் சுட்டவில்லை. வள்ளுவர் மட்டுமே அதன் கால அளவை மிக நுட்பமாகப் பேசுகின்றார். இதனை,

*'உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது*
*மிக்கற்றால் நீள விடல்' (1302)*

என்ற குறட்பாவால் அறிகின்றோம்.

## ஊடல் தேவையில்லையா ?

ஊடல் நிகழ்த்த விரும்பாத புணர்ச்சிக் களங்களும் வள்ளுவரால் படைக்கப்படுகின்றன. அவை,

1. புணர்ச்சி வாய்க்காதோ என்கின்ற தலைவியின் அச்ச நிலையும்.
2. காலத்தை வீணாக்க விரும்பாத தலைவியின் புணர்ச்சிவேட்கை மிகுந்த நிலையும் ஆகும். இந்நிலைகளை,

*'ஊடலின் உண்டாங்கோர் துன்பம் புணர்வது*
*நீடுவ தன்றுகொல் என்று' (1307)*

*'அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்*
*புலந்தாரைப் புல்லா விடல்' (1303)*

*'ஊடி யவரை உணராமை வாடிய*
*வள்ளி முதலரிந் தற்று' (1304)*

என்று புணர்ச்சி நீடாதோ, வாய்க்காதோ என்று அஞ்சிய தலைவியின் உள்ளத்தைக் காட்டி,

*'நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் புலத்தகை*
*பூஅன்ன கண்ணா ரகத்து' (1305)*

*'நீரும் நிழற்கண் இனிதே புலவியும்*
*வீழுநர் கண்ணே இனிது' (1309)*

என்று வருந்தும் தலைமக்களின் வருத்தத்தைப் புலப்படுத்து கின்றார். இதனால் ஊடலுக்குத் தலைவன் தலைவியின் ஒருமித்த அன்பே அடிப்படை என்பதை உணர முடிகின்றது. இருவரில் ஒருவர் அன்பு குறையினும் அங்கு ஊடல் என்பது துன்பம் தரும் ஒன்றாக அமைந்து விடுகிறது.

*'ஊடுதல் காமத்திற்கு இன்பம்' (1330)*

என்றும்

*'துனியும் புலவியும் இல்லாயின் காமம்*
*கனியும் கருக்காயும் அற்று' (1306)*

என்றும் ஊடலின் ஒப்பற்ற பயனை அறியமுடிந்தாலும், அன்பில்வழி அதுவே துன்பமாக மாறிவிடுவதையும் அறிய முடிகின்றது.

அடுத்து, 'நெஞ்சோடு புலத்தல்' எனும் அதிகாரத்தை விளக்க வந்த பரிமேலழகர்,

*'காரணம் உண்டாய வழியும் புலக்கக் கருதாது,*
*புணர்ச்சி விதும்புகின்ற நெஞ்சுடனே தலைமகள்*
*புலத்தலும் தலைமகன் புலத்தலும் ஆம்'*

என்று கூறுகின்றார். இங்கு ஊடல் வேண்டாமைக்கான இரண்டாவது காரணம் காட்டப்படுகிறது. இதற்கு,

*'தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்*
*காமம் நிறைய வரின்.' (1282)*

*'புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்*
*கண்ணன்ன கேளிர் வரின்' (1267)*

*'ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து*
*கூடற்கண் சென்றது என் நெஞ்சு' (1284)*

*'புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்*
*கலத்தல் உறுவது கண்டு' (1259)*

*'நிணம்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ*
*புணர்ந்தூடி நிற்பேம் எனல்' (1260)*

போன்ற குறள்கள் சான்றாக அமைகின்றன.

## ஊடல் தீர்க்கும் வாயில்கள்

ஊடல் தலைவனால் தீர்க்க இயலாத நிலையில், பலர் தலைவியின் ஊடல் தீர்த்துத் தலைமக்களின் இன்ப வாழ்க்கைக்கு இன்துணை ஆகின்றனர். இவர்களை,

*'கொளைவல் பாணன் பாடினி கூத்தர்*
*இளையர் கண்டோர் இருவகைப் பாங்கர்*
*பாகன் பாங்கி செவிலி அறிவர்*
*காமக் கிழத்தி காதற் புதல்வன்*
*விருந்து ஆற்றாமை என்றிவை ஊடல்*
*மருந்தாய்த் தீர்க்கும் வாயில்கள் ஆகும்'* (1-18)

என்று நம்பியகப்பொருள் காட்டுகின்றது.

## இன்றைய சூழலில் ஊடல்

இதுவரை மரபு நிலையிலிருந்து அறிந்த ஊடலை இன்றைய சூழலோடு சிறிது ஒப்பிட்டுக் காணலாம்.

வெளி உலகக் கலாச்சாரம் தமிழர்கள் வாழ்வில் கலப்புற்று இன்பமான அகவாழ்வில் சிக்கலைத் தோற்றுவிக்கும் நிலை உருவாகியுள்ளது. டாக்டர் மாத்ருபூதம் போன்றவர்கள் 'புதிரா புனிதமா' என்கிற வினாவை எழுப்பிக் கொண்டு, அகவாழ்வின் மென்மையான பகுதிகளைக் கீறி, சிகிச்சை என்கிற பெயரில் வடுக்களை ஏற்படுத்த வழி சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள். 'சொல்லித் தெரிவதில்லை என்றிருந்த அகவாழ்வின் அழகுணர்ச்சியைச் சொல்லிச் சொல்லியே சொரணையற்றுப் போகச் செய்துவிடுவார்களோ என்ற எண்ணம் வருகிறது. மலரினும் மெல்லிதான காமத்தைச் சிலரதன் செவ்வி தலைப்பட்ட நிலை மாற்றிப் பலரும், ஏன்? அனைவரும் அதன் தலைப்படும் நிலையைச் சிந்தித்தால் நல்லதுதானே!

பண்டு அகவாழ்வில் காம இன்ப இடையீட்டின் களத்திலோ, காம இன்ப எழுச்சிக்குத் துணைசெய்யும் வகையிலோ ஊடல் அமைந்திருந்தது. இன்று அதன் களங்கள் மாறி, சில காரியங்களைச் சாதித்துக் கொள்ளவேண்டும் என்ற நோக்கிலும் ஊடல் தோன்றுவதாக அறிய முடிகின்றது. சிறுகதை, நாவல், திரைப்படம் முதலான படைப்புத் தளங்கள் இதற்குச் சான்று காட்டுகின்றன. அகநிலையில் இருந்த ஊடற்களம் புறநிலையிலும் விரிந்து சென்றிருப்பதை அறிய முடிகிறது.

## மனிதர்களிடம் மட்டுமா ஊடல்?

மானிடர்களுக்கும் மட்டுமின்றி ஏனைய சில விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் கூட இவ்வூடல் உணர்வு இருப்பதாக விலங்கியல் அறிஞர்கள் காட்டுகின்றனர். நம்மனைகளில் வளர்க்கும் பெட்டைக் கோழி, சேவற்கோழி தொட்டவுடன் பட்டதாக அறியமுடியவில்லை. ஓடி, மறுப்பது போன்று பின் இணங்குவதாகவே அறிகின்றோம். இதனை ஊடல் என்று சொல்ல இயலாது போனாலும், காட்டிய விலங்கியல் அறிஞர்களின் கருத்தோடு ஒப்புநோக்கி அறிய வாய்ப்பிருக்கிறது எனலாம்.

## தொடர்ந்த ஆய்வுக்காக,

இவ்வூடல் குறித்த தொடர்ந்த ஆய்வினை உளவியல் அடிப்படையிலும், கால வரிசைப் படுத்தியும் விரிவாக ஆய்வுசெய்ய இடமிருக்கிறது.

**பார்வை நூல்கள்**

1. தொல்காப்பியம் தெளிவுரை : முனைவர் ச.வே. சுப்பிரமணியன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, சூலை 1999 (மூன்றாம் பதிப்பு)

2. திருக்குறள் பரிமேலழகர் உரை : புலியூர்க்கேசிகன் (பதிப்பாசிரியர்) பூம்புகார் பதிப்பகம், சென்னை, டிசம்பர் 1986 (நான்காம் பதிப்பு)

3. சிலப்பதிகாரம் : எஸ். ராஜம் பதிப்பு, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, நவம்பர் 1978 (இரண்டாம் பதிப்பு)

4. இறையனாரகப்பொருள் விளக்கம் : நக்கீரனார் (உரையாசிரியர்) கழக வெளியீடு, சென்னை, 1969.

5. அகப்பொருள் விளக்கம் : நாற்கவிராசநம்பி, கா.ர. கோவிந்தராச முதலியார் (பதிப்பாசிரியர்) கழகவெளியீடு, சென்னை, 1969.

# பத்துப் பாட்டில் முல்லைத்திணை

மு. பெர்னாட்சா

பத்துப் பாட்டினுள் முல்லைப் பாட்டினை அகத்திணைக்கும், நெடுநல்வாடையினைப் புறத்திணைக்கும் உரித்தாக்கித் தமிழ்கூறு நல்லுலகம் கூறிய போதிலும் இவ்விரு பாட்டிலும் முல்லைத் திணையொழுக்கமே விரித்துரைக்கப்பட்டுள்ளது.

முல்லைப்பாட்டைப் பொறுத்தவரை அதன் பெயரே முல்லைத்திணையொழுக்கத்தை வலியுறுத்தி நிற்கிறது. இதனை,

" .... தலைவியை ஆற்றியிருக்கச் சொல்லுதலும், தலைவி ஆற்றியிருத்தலும் என்ற முல்லைக்கு உரிய உரிப்பொருள் முக்கியமாக அமைந்திருத்தலால், இது முல்லைப்பாட்டு எனப்பட்டது" என்ற வை.மு.கோ.-வின் கூற்று அரண் செய்யும்.

நெடுநல்வாடையிலும், போர்வயின் பிரிந்த தலைமகன் வெற்றியோடு வருமளவும் தலைவி ஆற்றியிருக்கும் முல்லைத் திணையொழுக்கமே பெரிதும் விரித்துரைக்கப்பட்டுள்ளது. எனினும், இதனைப் புறப்பாட்டில் சேர்த்தமைக்கான காரணத்தை, 'வேம்பு தலையாத்த நோன்காழ் எஃகம்' என்று பாண்டியனுடைய அடையாள மாலையாகிய வேப்பமாலையைக் குறிப்பிடும் தொடர் வருவதால் இஃது அகப்பாட்டு ஆகாமல் புறப்பாட்டு அயிற்று' என்று தமிழறிஞர்கள் கூறுகின்றார்கள்.

'நூற்று எண்பத்தியெட்டு அடிகள்' கொண்ட நெடுநல்வாடையில், ஒரேயொரு இடத்தில் வேம்பு எனும் சொல் இடம் பெற்றுவிட்டதால், இப்பாட்டை முல்லைக்குரிய அகத்தில் சேர்க்காது புறத்தில் சேர்த்தனர் என்றால், உரிப்பொருள் மயக்கம் வந்தால் எளிதில் விட்டு விடுவார்களா?

'உரிப்பொருள் அல்லன' மயங்கலாம், ஆனால் உரிப்பொருள் மயங்குதல் இல்லை என்பதே தொல்காப்பிய விதி.

'நோக்கொன்றி இல்லிருத்தல் முல்லை' எனவே ஆற்றியிருக்கும் முல்லையில் ஆற்றாது கண்ணீர் உகுத்தல் இல்லை. கண்ணீர்

உகுத்துவிட்டால் அது நெய்தல் .' இரங்கிப் போக்கோர் நெய்தல்' என்பது சங்கத்தமிழ் கண்ட நெறி.

ஆற்றியிருக்க வேண்டிய தலைவி ஆற்றாது கண்ணீர் உகுத்தாற்போன்ற ஒரு தோற்றம் முல்லைப் பாட்டுத் தலைவியிடத்தும், நெடுநல்வாடைத் தலைவியிடத்தும் காணக் கிடைக்கின்றது.

'பூப்போல் உண் கண் புலம்பு முத்துறைப்பக்' (முல்23) காட்சி தருகின்றாள் முல்லைப் பாட்டின் தலைவி.

'செவ்விரல் கடைக்கண் சேர்த்திச் சிலதெறியா' (நெடு.165) அரிவையாகக் காட்சி தருகின்றாள் நெடுநல்வாடையின் தலைவி.

'இவ்விரு தலைவியரிடத்தும் காணப்படும் பண்பு முல்லையா?' நெய்தலா? என்பதே இங்கு மேற்கொள்ளப்படும் ஆய்வு.

## முல்லைப் பாட்டில் "புலம்பு முத்துறைத்த" தலைவி!

போர்வயின் பிரிந்த தலைவனை நினைத்து ஆற்றாது தவிக்கும் தலைவிக்கு ஆறுதலாகவும் தேறுதலாகவும் பற்பல காரணங்களைக் காட்டிப் பெருமுது பெண்டிர், 'பருவரல் எவ்வம் களைமாயோய்' என வேண்டினர். எனினும் தலைவி 'புலம்பு முத்துறைப்பக்' கண்ணீர் உருத்து விடுகின்றாள்.

*"காட்டவும் காட்டவும் காணாள் கலுழ்சிறந்து*
*பூப்போல் உண்கண் புலம்பு முத்துறைப்ப" (முல்.22-23)*

என்று படம் பிடித்துக் காட்டுகின்றார் நப்பூதனார்.

"ஆற்றியிருப்பதே முல்லை; 'புலம்பு முத்துறைத்துவிட்டால்' அது நெய்தல்" எனும் தெளிவு நச்சினார்க்கினியர் உள்ளத்திலும் ஆழமாகப் பதிந்துள்ளது. எனவேதான் இப்பாட்டின் வரிகளை அவர் பலவாறாகச் சிதைத்து கொண்டு கூட்டுமுறையில் பொருள் கூறிச் செல்கிறார்." [3]

மேலும், 'இங்ஙனம் பொருள் கூறாமல் (ஆற்றொழுக்காகப்) பொருள் கூறியக்கால் நெய்தற்குரிய இரங்கற் பொருட்டன்றி முல்லைக்குரிய இருத்தற் பொருட்டாகாமையுணர்க' [4] என்று விளக்கமும் தருகின்றார்.

எனவேதான், 'காட்டவும் காட்டவும் காணாள் கலுழ்சிறந்து' எனும் அடிக்குப் பெருமுது பெண்டிர் ஏதுக்களை எடுத்துக்காட்டி வற்புறுத்தவும் என்று கூறாது, "தலைவன் புகழும் மானமும் எடுத்துக்காட்டி வற்புறுத்தவும் தோன்றல் சான்ற மாற்றோர் பெருமை கூறிக் காட்டி வற்புறுத்தவும் அன்பு மிகுதியாற் கலக்கமிக்கு இவை அரசற்கு வேண்டுமென்று மனதிற் கருதாதவள்"[5] என்று வலிந்து உரைத்துச் செல்கின்றார்.

ஆனால் தமிழ்கூறு நல்லுலகம் இதனை ஏற்கத் தயக்கம் காட்டுவதைப் பின்வரும் சான்றுகள் அரண் செய்யும்.

".... மாயோனை வணங்கி நற்சொல் கேட்டுவந்த பெருமுது பெண்டிர் தலைவியை யாற்றுவிக்கக் கூறவும் தலைவி தேறுதலையடையாது கண்ணீருகுப் பாளாயினளென்க.... (இங்கு நச்சினார்க்கினிய .... ருரைப்படி உரை கூறப்படவில்லை)"[6] என்பார் வை.மு.கோ. இவர் நச்சினார்க்கினியரை அடியொற்றியே உரை வகுத்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.

"(பெருமுது பெண்டிர்) ... ஏதுக்கள் காட்டித் தேற்றாதிற்க, காண மாட்டாதவளாய்க் கலங்கி பூப்போலும் கண்கள் தனித்து விழுகின்ற முத்துப் போலும் துளியைத் துளியா நிற்ப"[7] என உரைத்துச் செல்கிறார் எம். நாராயண வேலுப்பிள்ளை.

'முல்லைப்பாட்டு' ஆராய்ச்சி செய்த மறை மலை அடிகளும், "முல்லையொழுக்கமே பயின்று வரும் இப்பாட்டின்கண் 'பூப்போல் உண் கண் புலம்பு முத்துறைப்ப' என்னும் இரங்கற்குரிய அழுகையினைக் கூறுதல் பொருந்தாதாம். பிறவெனின்; நன்று கடாயினாய். முன்னும் பின்னுமெல்லாம் முல்லையொழுக்கமே தொடர்ந்து வரும் இச்செய்யுளின் அகத்து இடையே தோன்றிய அவ்விரங்கற் பொருள் பற்றி ஈண்டைக்கு வரக்கடவதாம் இழுக்கு ஒன்றுமில்லை. முழுவதுஉந் தொடர்ந்து அவ்விரங்கற் பொருள் வருமாயினன்றே அது குற்றமாம்"[8] என்று அமைதி காண முற்படுதலையே காண்கிறோம்.

*'காட்டவும் காட்டவும் காணாள் கலுழ்சிறந்து*
*பூப்போல் உண் கண் புலம்பு முத்துறைப்ப'*

எனும் அடிகளுக்கு ஆற்றொழுக்காகப்பொருள் கொண்டால், முல்லைத் திணைக்குரிய 'ஆற்றியிருத்தல்' ஒழுக்கம் மாறி நெய்தலுக்குரிய

'இரங்கல்' ஒழுக்கம் வந்துவிடும் என்ற நச்சினார்க்கினியரின் கூர்த்த மதியை மறுப்பதற்கில்லை. அதே நேரம், முல்லையொழுக்கம் வருதற்காக முல்லைப்பாட்டை நச்சினார்க்கினியர் சிதைத்துப் பொருள் கொள்வதையும் ஏற்றுக்கொள்ளத் தமிழுலகம் தயக்கம் காட்டுகின்றது. இதற்குத் தீர்வுதான் என்ன?

'காட்டவும் காட்டவும் காணாள் கலுழ்சிறந்து' எனும் அடிகளுக்கு நச்சினார்க்கினியர் கூறிய உரை ஆய்விற்குரியதாக இருப்பினும், இவ்வடியில் அமைந்துள்ள 'காணாள் கலுழ்சிறந்து' எனும் சொற்களை 'கலுழ்சிறந்து காணாள்' என இடம் மாற்றிவைத்துப் பொருள் உரைத்திருப்பது நோக்கற்பாலது.

'காட்டவும் காட்டவும் காணாள், கலுழ்சிறந்து புலம்பு முத்துரைத்தாள்' எனப் பொருள் விரிப்பின் அது நெய்தற் பொருளாகிவிடும். மாறாக 'கலுழ்சிறந்து காணாள்' எனப்பொருள் கொள்ளும் போது,

"பெருமுது பெண்டிர் 'நின் தலைவர் இன்னே வருகுவர்' என ஏதுகாட்டி வற்புறித்திக் கூறவும் கலக்கம் மிகுந்திருந்த தலைவி மிகுதியான துன்பத்திலிருந்து விடுபட்டுத் துயர் குறைத்தாள்" எனும் பொருள்படக் காண்கிறோம்.

'கலுழ் காணாள்' என்னாது, 'கலுழ்சிறந்து காணாள்' என்றதும் நோக்கற்பாலதே.

'கலுழ் காணாள்' எனின், 'தலைவி துயரிலிருந்து விடுபட்டாள்' எனப் பொருளாகும்.

'கலுழ்சிறந்து காணாள்' எனும் போது, 'மிக்கிருந்த தலைவியின் துன்பம், பெருமுது பெண்டிரின் ஏதுகாட்டிய தேறுதல் மொழிகளால் ஆற்றியிருக்கும் அளவிற்குக்குறைந்தது' எனும் பொருள் வரக் காண்கிறோம்.

'கழுழ்சிறந்து காணாள்' எனும் வழியிலேயே, 'பூப்போல் உண் கண் புலம்பு முத்துறைப்பக் காணாள்' என்று கொண்டு பொருள் உரைக்கும் போது, "பூப்போல் உண் கண் காணாள், புலம்பு முத்துறைப்பக் காணாள்" என விரியும்.

'தலைவனைப் பிரிந்திருப்பதால் மையுண்ட கண்களைத் தலைவி பெறவில்லை; பெருமுது பெண்டிர் தேறுதல் மொழியால், கண்களிலிருந்து முத்து முத்தாய் துளிர்க்கும் கண்ணீர் முத்துக்களையும் காணாதவளாக ஆற்றியிருந்தாள்' எனும் பொருள் கிட்டும். மேலும் இதன் தொடர்ச்சி, 'இன்துயில் வதியுநன் காணாள்....' (முல்.80) எனும் அடியோடும் மாட்டேறு முறையில் மிகப் பொருத்தமாக இயையும்

*'..................................முரசு முழங்கு பாசறை*
*வதியுநன் இன்துயில் காணாள்..................................'* (79-80)

எனும் அடிகளுக்கு "பாசறை வீட்டிலே.......முன்னாளில் தூங்காது சிந்தை கொண்டிருந்த தலைவன் பிற்றை நாளில் வென்றமையாற் கவலையெல்லாம் நீங்கி இன்துயில் கொள்ளலாயினன் ........"[9] என்று வை.மு. கோ.வும்,

"................பாசறைக் கண்ணே இனிது துயில்கின்றவனாகிய தன் தலைவனுடைய வருகையைக் காண மாட்டாதவளாய் ..............."[10] என்று நாராயண வேலுப்பிள்ளையும் உரை வகுத்த போதிலும் நச்சினார்க்கினியரின் உரையே பாடற்போக்கிற்குச் சிறந்ததாகத் தோன்றுகின்றது.

இவ்வடிகளுக்கு, "தன்னிடத்தே தங்குகின்றவனை இனியதுயில் கொள்ளுதலைக் காணாளாய்"[11] என உரை வகுத்துள்ளார் நச்சினார்க்கினியர். இவர்உரையைப் பின்பற்றி உரைக்கும் போதுதான்,

"பெருமுது பெண்டிர் ஏதுக்களைக் காட்டவும் காட்டவும், கலுழ்சிறந்து காணாளாக, புலம்பு முத்துறைப்பக் காணாளாக, ஆற்றியிருந்த தலைவி, பாசறைக்கண் தலைவன் வதியுநன் ஆதலின் இன்துயில் காணாளாகவும் இருந்தாள்" என்று பொருள் கூற இயலும்.

எனவே முல்லைப் பாட்டின் தலைவி 'புலம்பு முத்துறைத்த' தலைவியாகக் காட்சி தராமல், 'புலம்பு முத்துறைப்பக் காணாத்' தலைவியாக, முல்லைத்திணை ஒழுக்கத்தை ஏற்று ஆற்றியிருந்த தலைவியாகவே நம் கண் முன் காட்சி தருகின்றாள்.

## நெடுநல் வாடையில் கடைக்கண் சிலதெறியாத் தலைவி

"தலைவியின் துயர் தீர வேண்டி, தலைவனின் பாசறைத் தொழில் இனிதாக முடிவு பெறக் கொற்றவையை வழிபடும் செவிலித் தாயின் கூற்றாக ......"[12] அமைந்த நெடுநல் வாடையில் 'கடைக்கண் சில தெரியாத்' தலைவியைப் படம் பிடித்துக் காட்டுகின்றார் நக்கீரர்.

தலைவனைப் பிரிந்த தலைவி 'புனையா ஓவியம்' போல் கட்டிலில் கிடக்கிறாள். அவள் கண்களில் "'உரோகிணி சந்திரனோடு கூடியிருப்பது போல் வரையப்பட்ட ஓவியம் தென்படுகின்றது. உடனே ".....உரோகிணி தன் காதலனாகிய சந்திரனைப் பிரியாது உறைதல் போலத் தானும் தன் கணவனோடு பிரியாது உறையும் வாழ்க்கையைப் பெறவில்லையே' என்று வருந்திப் புலம்பினாள். அவளுடைய கண்கள் நீரைப் பெருக்கின."[13]

நக்கீரர் தீட்டும் ஓவியம் இதோ,

*"விண்ணூர்புதிரிதரும் வீங்கு செலல் மண்டிலத்து*
*முரண் மிகு சிறப்பிற் செல்வனோடு நிலைஇய*
*உரோகிணி நினைவனள் நோக்கி நெடிதுயிரா*
*மாயிதழ் ஏந்திய மலிந்து வீழ் அரிப்பனி*
*செவ்விரல் கடைக்கண் சேர்த்திச் சிலதெறியாப்*
*புலம்பொடு வதியும் நலங்கிளர் அரிவை........" (நெடு. 161-166)*

இப் புனையா ஓவிய அடிகளில், 'நெடிதுயிரா' என்றும் 'சில தெறியா' என்றும் இரு எதிர்மறைச் சொற்கள் பயின்று வந்துள்ளன. இவற்றை உடன்பாட்டு எச்சமாகக் கொண்டு நச்சினார்க்கினியர் உள்ளிட்ட உரையாசிரியர்கள் அனைவரும் உரை வகுத்துள்ளனர்.

இவர்கள் 'நெடிதுயிரா' என்பதற்கு 'நெடிதுயிர்த்து' என்றும், 'தெறியா' என்பற்குத் 'தெறித்து' என்றும் பொருள் கொண்டு உரை வகுத்திருப்பதினால், முல்லையொழுக்கம் நிகழ வேண்டிய இடத்தில் நெய்தல் ஒழுக்கம் நிகழக் காண்கிறோம்.

"....... உரோகிணியைப் போல யாமும் பிரிவின்றியிருத்தலைப் பெற்றிலேமேயென்று நினைத்து அவற்றைப் பார்த்து நெட்டுயிர்ப்பு கொண்டு........ நீலப்பூ விரும்பின கண் தன் கடைக்கண்ணிடத்தேவர மிக்குச் சுமந்த ஐதாகிய நீரிற் சிலவற்றைச் சிவந்த விரலைச் சேர்த்தித்

தெறித்து ............மிகவுமழாமல் மல்கின நீரைத்தெறித்தென்றார்" [14] என்று நச்சினார்க்கினியரும்.

"பிரிவுத் துயரால் கண்களினின்று வழியுஞ் சொற்பமான கண்ணீரைத் தலைவி கைவிரலால் தெறிக்கின்றனளென்க" [15] என்று வை.மு.கோ.வும் உரை வகுத்துச் சென்றுள்ளனர்.

'மிகவும் அழாமல் மல்கினநீர்' என நச்சினார்க்கினியரும், 'சொற்பமான கண்ணீர்' என வை.மு.கோ.வும், 'அமைதி' கூறிச் சென்றாலும், இப்பகுதி ஆய்விற்குரியதே, எனவே, இவ்வுரைகளை மறந்து சற்றே, 'புனையா ஓவியப்' பாட்டின் வரிகளுக்குள் நுழைவோம்.

'விண்ணூர்பு' திரிதரும் தொடங்கி 'அரிவை' வரையிலான ஆறு அடிகளையும் ஒரு தொடராகக் கொண்டு உரையாசிரியர்கள் உரை வகுத்திருக்கக் காண்கிறோம். நாம் இதனை ஈரடியாகப் பகுத்துப் பொருள் காண்போம்.

*"விண்ணூர்பு திரிதரும் வீங்கு செலல் மண்டிலத்து*
*முரண்மிகு சிறப்பிற் செல்வனோடு நிலைஇய*
*உரோகிணி நினைவனள் நோக்கி ................................*
*.........................................................................*
*புலம்பொடு வதியும் நலங்கினர் அரிவை......"*
*என்றும் (161-163-166)*

*"................................................... நெடிதுயிரா*
*மாயிதழ் ஏந்திய மலிந்துவீழ் அரிப்பனி*
*செவ்விரல் கடைக்கண் சேர்த்திச் சிலதெறியாப்*
*புலம்பொடு வதியும் நலங்கிளர் அரிவை........"*
*என்றும் (163-166)*

பகுத்துக்கொண்டால், முதல் மூன்று அடிகளுக்கு,

"திங்களோடு திரியாமனின்ற உரோகிணியைப் போல யாமும் பிரிவின்றி இருத்தலைப் பெற்றிலேமேயென்று நினைத்து ஏக்கத்துடன் அவற்றைப் பார்த்து........ தனிமையோடு கிடக்கும் அன்பு மிகுகின்ற அரிவை" என ஏனைய உரையாசிரியர்கள் வழியே நாமும் பொருள் கொள்ளலாம்.

அடுத்த மூன்று அடிகளை உரையாசிரியர்கள் வழிநின்று கொண்டு கூட்டாமல்,

*"மாயிதழ் ஏந்திய நெடிதுயிரா அரிப்பனி*
*கடைக்கண் மலிந்து வீழ் சில தெறியா செவ்விரல் சேர்த்தி*
*புலம்பொடு வதியும் நலங்கிளர் அரிவை......"*

என்று கொண்டு கூட்டிப் பொருள் கொண்டால்,

"கறுத்த இதழ்களையுடைய நீலமலர் தாங்கிய நெடிதுயிராத நுண்ணியதாகிய பனி நீர் போலக் கடைக்கண்ணிடத்தே நெருங்கி வீழும் சிலவாகிய நீர்த்துளிகளும் தெறியாத வண்ணம் செவ்விய விரல்களைக் கண்ணிடத்தே சேர்த்துத் துடைத்துத் தனிமையோடு கிடக்கும் அன்பு மிகுகின்ற அரிவை" எனப் பொருள் விரியக் காணலாம்.

*'மாயிதழ் ஏந்திய நெடிதுயிரா அரிப்பனி'* இங்கு

*'கடைக்கண் நெருங்கி வீழும் சில கண்ணீர்த்*
*துளிகளுக்கு உவமை ஆனது.'*

எனவே நெடுதல் வாடையின் தலைவியும் 'கடைக்கண் சில துளிகள் தெறித்த' தலைவியாகக் காட்சி தராமல், 'நெடிதுயிரா அரிப்பனி போன்ற சிறு கண்ணீர்த் துளியும் தெறிக்காத' தலைவியாகவே காட்சியளிக்கின்றாள்.

'முல்லைத் தலைவியும், நெடுதல் வாடைத் தலைவியும் கண்ணீர் உகுத்தார்கள்' என்பது போன்றதோர் தோற்றத்தை உரையாசிரியர்கள் ஏற்படுத்தியுள்ள போதிலும், நூலாசிரியர்கள் இவர்களை முல்லைத் திணைக் கேற்ற ஆற்றியிருக்கும் பாங்கோடுதான் படைத்துள்ளார்கள் என்பதை அறிந்து மகிழ்தல் தமிழ்கூறு நல்லுலகின் கடனாம்.

1. வை. மு. கோ. முல். ப. 1.
2. பத்துப்பாட்டு நாராயண வேலுப்பிள்ளை. எம். ப.82 (II-தொகுதி).
3. பார்க்க. நச். உரை. ப. 276.
4. மேற்படி ... ப. 276.
5. நச். ப. 277.

6. வை. மு. கோ. முல். பக். 687.

7. பத்துப்பாட்டு. முதல் தொகுதி. நாராயண வேலுப்பிள்ளை. எம். பக். 212.

8. முல்லைப்பாட்டு ஆராய்ச்சி, மறைமலையடிகள். பக் 64 & 65.

9. வை. மு. கோ. முல். பக். 17.

10. பத்துப்பாட்டு (முதற் தொகுதி) நாராயண வேலுப்பிள்ளை. எம். பக். 215.

11. நச். உரை. ப. 283.

12. பத்துப்பாட்டு (II-ம் தொகுதி) நாராயண வேலுப்பிள்ளை. எம். பக். 82.

13. மேற்படி. ப. 88.

14. நச். ப. 462.

15. வை. மு. கோ. நெடு. ப. 28.

ஃ மலிதல் - மிகுதல்; நெருங்குதல் - க.த. அகராதி.

# நற்றிணையில் கார்கால நிகழ்வும் காதலர் நிலையும்

செல்லத்தாய்

## முன்னுரை

"ஓர் இனத்தின் பண்பினையும் பண்பாட்டினையும் வடித்தெடுத்து உருவாவதே சீரிய இலக்கியம். தமிழர்கள் உள்ளத்து உணர்ச்சிகளையும், வேட்கைகளையும் உருவாக்கிப் புலப்படுத்துதற்கு இயற்கையினைப் பின்னணியாகக் கொண்டு எழுந்தவை சங்கப்பாடல்கள்" [1] அவ்வகையில் பண்டைக் காலத்து மனிதனுக்கு அமைந்த சூழ்நிலை நம்முடையதினின்றும் மிகவும் வேறுபட்டது. நாம் பெரும்பாலும் செயற்கையின் வயப்பட்டுச் சிறிதளவே இயற்கையின் ஆற்றலுக்கு இடம் தருகின்றோம். "பழங்காலத்தில் மானிடன் பெரும்பாலும் இயற்கையின் வயத்திலேயே தன்னை ஒப்படைத்து வாழ்ந்தவன். அவனுடைய வாழ்க்கை, இயற்கையால் உருவாக்கப்பட்டது என்றே சொல்லலாம். அவனுடைய உலகியல் வாழ்க்கையை மட்டுமின்றி உள்ளத்து வாழ்க்கையையும் இயற்கையே உருவாக்கிற்று. பழங்கால மனிதனின் பழக்கவழக்கங்கள், கொள்கை, குறிக்கோள்கள், இயல்செயல்கள் யாவும் இயற்கைச் சூழ்நிலையால்தான் உருவாக்கப்பட்டன. சங்க இலக்கியப் பாடல்களைப் பயிலுங்கால் இவ்வுண்மை தெளிவாக விளங்குகின்றது. "புறப்பொருட் பாடல்களைவிட அகப்பொருட் பாடல்களே இவ்வுண்மையை மிகவும் வற்புறுத்துகின்றன"[2] என்னும் மு.வ. அவர்களின் கருத்து இங்குக் குறிக்கத்தக்கது. சங்கத் தொகை நூல்களில் ஒன்றான நற்றிணையில் அமைந்த பாடல்களில் குறிக்கப்படும் கார்கால இயற்கைப் பின்னணியில் தலைவன் தலைவி இருவர்தம் காதல் நிகழ்வும், உணர்வும், இவர்தமக்குத் துணை நிற்போர் உணர்வும்,செயலும் இக்கட்டுரையில் எடுத்துக்காட்டப்படுகின்றன.

## அகத்திணைப் பொருட்கள்,

பழந்தமிழப் பாடல்களின் அடிப்படையில் அகப்பொருள் மரபுகளைக் கூறும் போது தொல்காப்பியர், அகப்பொருள் மரபிற்குரிய திணைகள், திணைகளுக்குரிய முதல். கரு, உரிப்பொருள், பற்றிக் கூறும் செய்திகள் காட்டத்தக்கன.

*'முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே*
*நுவலுங் காலை முறை சிறந்தனவே*
*பாடலுட் பயின்றவை நாடுங்காலை (தொல்பொருள்.3)*

எனக் கூறும் தொல்காப்பியர்.

*முதல் எனப்படுவது நிலம்பொழுது இரண்டின்,*
*இயல்பென மொழிய இயல்புணர்ந் தோரே (தொல்பொருள்.4)*

என்பதனால் நிலம், பொழுது, இரண்டும் முதற்பொருள் என்கின்றார்.

காடுறை உலகம், மைவரை உலகம், தீம்புனல் உலகம், பெரும்புனல் உலகம் என்றிவ்வாறு முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலுக்குரியதெனப் பாகுபடுத்தியும் கூறியுள்ளார்.

**பொழுது வகைகள் :**

அகப் பொருள் நிகழ்ச்சிக்குரிய பொழுதை இருவகையாகப் பிரித்து வழங்கியுள்ளனர். அவை பெரும்பொழுது, சிறுபொழுது என்பன. பெரும்பொழுது ஓர் ஆண்டின் கூறுபாடு; சிறுபொழுது ஒரு நாளின் கூறுபாடு ஆகும். கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில், என்பன பெரும்பொழுதுகள், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு, மாலை, யாமம் என்பன சிறுபொழுதுகள்.

பெரும்பொழுதாகிய கார்காலமும், சிறுபொழுதாகிய மாலையும் முல்லைத் திணைக்குரியனவாகக் கூறப்படுகின்றன. பெரும்பொழுதாகிய கார்காலமும் பெரும் பகுதியான சங்க அகப்பாடல்களில் காதலர்களின் காதல் நிகழ்வுகளுக்குப் பின்னணியாகக் கூறப்படுகிறது. தலைவி, தலைவனின், பிரிவை ஆற்றியிருக்கும் பொருள் குறித்த முல்லைப் பாடல்களிலும், தலைவனின் பிரிவால் ஆற்றாதிருக்கும் பொருள் குறித்த பாலைப் பாடல்களிலும் கார்கால நிகழ்வும் காட்சியும் மிகுதியாகக் காட்டப்படுகின்றன. நற்றிணையில் கார்காலப் பின்னணியில் காதலர்களின் காதல் வாழ்க்கை உணர்வுகளைப் பாடுவனவாக 92 பாடல்கள் அமைந்துள்ளன.

### கார்கால நிகழ்வு :

மழை பெய்கின்ற காலம் கார்காலம் ஆகும். ஓராண்டின் பருவங்களில் ஒன்றான கார்காலத்திற்குரியனவாக ஆவணி, புரட்டாசி மாதங்கள் அமையும். "கைபுனைந்து இயற்றாக் கவின் பெறும் வனப்பே இயற்கையழகு. இவ்வியற்கை தரும் காட்சியின்பம் கண்ணையும் மனத்தையும் கவரும். இவ்வின்பங்களையெல்லாம் பெறுவதற்கு அடிப்படை கார்காலத்துப் பொழிவே. தலைவியைச் சிறப்பித்துக் கூறவும், காதல் உணர்வை மிகுவிக்கவும், சுருக்கமாகவும், நுட்பமாகவும், வாழ்க்கைக்குப் பின்னணியாக இக்கார்காலத்தை மானிட வாழ்வுடன் இணைத்துக்காட்டுவர் சங்க காலப் புலவர்கள்."[3]

நற்றிணைப் பாடல்களில் கார்கால வருகை, கார்காலத்தின் சிறப்பு, கார்காலத்து நிகழ்வுகள், கார்காலத்து நிலப் பொழிவு முதலியனவும், கூதிர்க் காலத்து வருகை, நிகழ்வுகள் முதலியனவும் (சில இடங்களில்) கூறப்படுகின்றன. இவற்றில் வினை காரணமாகப் பிரிகின்ற தலைவன், குறித்த பருவத்தில் வருவதாகக் கூறுதல் என்ற நிலையிலும், அப்பருவம் வந்த பொழுதும், தலைவன் வராத நிலையினைக் கூறுதல் நிலையிலும், அப்பருவம் வந்த பொழுதில் தலைவன் வந்த நிலையினைக் கூறுதல் நிலையிலும், அப்பருவம் வரும் முன்னே தலைவன் வந்த நிலையிலும், வினையின் பொருட்டுச் சென்றவர் மீண்டு வரும்பொழுது பாகனிடம் கூறும் நிலையிலும், வரைவின் பொருட்டுப் பொருளீட்டச் சென்றவன் குறித்த பருவத்து வராத நிலையிலும், மழையைக் குறை கூறும் நிலையிலும், சேர்ந்திருப்போர் மழையை வாழ்த்தும் நிலையிலும் தலைவன் கூற்றாகவும் தலைவி கூற்றாகவும், தோழி கூற்றாகவும், பாணன் கூற்றாகவும் நற்றிணைப் பாடல்களில் கார்கால நிகழ்ச்சிகள் கூறப்படுகின்றன.

### கார்காலத்தில் தலைவன், தலைவி சேர்ந்திருத்தல்,

இருபாலரும் இணைந்து வாழும் இயற்கை வகுத்த சட்டத்தை அடிப்படையாகக் கொண்டே அகத்திணையைக் கண்டனர் பழந்தமிழ்ச் சான்றோர். இஃது அவர்தம் நுட்பத்தைக் காட்டுகிறது. மக்களுடைய அகப்புறச் செயல்கள் யாவும் துன்பத்தை விலக்கி இன்பத்தை அடைய வேண்டுமென்ற குறிக்கோளை மையமாகக் கொண்டுள்ளன. "மானிட வாழ்வு என்பது நின்றியங்கிச் செல்லும் சோககீதம் என்பது

வேட்ஸ்வர்த்துக்கு நன்கு தெரியும் (the still sad music of humanity) இனிய பாடல்கள் எனப்படுபவை சோகமிகும் எண்ணங்களைத் தாங்கியுள்ளவை ஆகும். துன்பங்கள் மானிடத்தைத் தூய்மைப்படுத்துகின்றன. "இயற்கையானது ஆன்மவொளி பெற்று இயங்குகிறது"[4] என்னும் கருத்து இங்கு நினைக்கத்தக்கது. அகப்பொருளைப் பொறுத்தவரை இன்ப நாட்டமாகிய புணர்ச்சியே எல்லாவற்றிற்கும் அடித்தளமாக அமைக்கின்றது.

நற்றினைப் பாடல் ஒன்றில் குறிக்கப்படும் முல்லை நிலத் தலைவன் வினைமுற்றித் தலைவியுடன் சேர்ந்திருக்கின்றான். இருவரும் இன்புற்று இருக்கின்ற காலத்தில் மழை பெய்கின்றது, அம்மழையைத் தலைவன் வாழ்த்துகின்றான். அதாவது படுமலை எனும் பண்ணினை எழுப்பினாற் போன்ற ஒலியுடன் மழை பெய்வதால் அது இனிமை தருவதாகவும், என்னைப் போன்று மக்களும் மகிழ்ச்சியுடன் இருக்கக் குன்றின் கொடுமுடிகள் தோறும் பொருந்தி உலாவுவாயாக என்றும், மனித செயலுக்கேற்ப மக்களுக்கு உதவும் வகையில் மழையே நீ இருக்க வேண்டும் என்றும் கூறுகின்றான் தலைவன்.

*"உலகிற்கு ஆணியாகப் பலர் தொழப்*
*பலவியின் நிலைஇய குன்றில் கோடுதோறு*
*ஏயினை உரைஇயரோ பெருங்கலி எழிலி*
*விரவுமலர் உதிர வீசி*
*இரவுப் பெயல் பொழிந்த உதவியோயே" (நற். 139)*

உதவி பெற்றோர் உதவியோரை வாழ்த்துதல் இயல்பு. அதுபோல் இங்குத் தலைவன் மழையை வாழ்த்துகின்றான்.

**தலைவனின் செலவினைத் தோழி தவிர்த்தல்:**

எவ்வகை வினைக்கும் தலைவன் வேனிற்காலத்தில் தலைவியைப் பிரிவதும் கார்காலத்தில் சேர்ந்திருப்பதும் செய்வான். சேர்ந்திருக்க வேண்டிய காலத்துச் சேராதிருப்பின் அவ்விருவருக்கும் பெருந்துன்பமாக அமையும்.

பொருள்வயிற் பிரிவும் தலைவனிடத்துத் தோழி பிரிவில் தலைவியின் துன்பங்கூறி அவனைப் பிரிந்து செல்லாது இருக்கும்படி வேண்டுவாள். செலவினைத் தடுக்கும் தோழி கதிர் காய்தல் நீர்

வற்றியிருத்தல், அனல் காற்று வீசுதல் என்றிவ்வாறு தலைவன் செல்லும் பாலை வழியின் வெம்மைக் கொடுமையையும் கூறுவாள். நெறிமயக்குற்ற தன்மை, வழியின் கடுமை, விலங்குகளலாகும் துன்பம், மறவர் கொடுமை முதலான பாலை நிலத்துக் கொடுமையை விளக்கி, தலைவிக்குக் கார்கால நிகழ்வு தரும் துன்பங்களை எடுத்துரைப்பாள். கார்காலத்தில் தலைவன் தன்னுடன் இல்லாமையை நினைந்து தலைவி வருந்துவாள். அதனால் தலைவியின் உறுப்பு நலன் அழியும், நீவிர் சேர்ந்திருக்க வேண்டிய காலம் பிரிந்திருப்பின் அக்காலமே நம்மை மிகவும் வருத்தும் எனத்தோழி தலைவன் செலவினைத் தடுப்பாள்.

### பிரிவில் தலைவன், தலைவிநிலை:

இளமை மாறாதவனாகிய தலைவன், பொருள் வினை காரணமாகவும், வேந்துவினை காரணமாகவும், தனியனாய் தலைவியைப் பிரிந்திருக்கின்றபோது கார்காலத்தின் துன்பத்தை அவனும் உணர்வான் என்பதையும், அக்கார்காலத்தில் தலைவியைச் சேர நினைவான் என்பதையும் நற்றிணைப் பாடல்கள் குறித்துக் காட்டுகின்றன.

மழை துளிப்ப, ஆடுகள் மழையில் நனைந்தும் அப்படியே நிற்பதுபோல் மழை பெய்தாலும் தலைவி இல்லறத்தை விடுத்து எங்கும் செல்லாமல் இருக்கின்றாள். பருவம் கடந்து கடை நாள் வந்தும் நாம் இன்னும் செல்லாது இருக்கின்றோம் எனத் தலைவன் பிரிவுத் துன்பத்தை ஆற்றாது வருந்தும் தன்மை ஒரு பாடலில் (நற்.142) கூறப்படுகின்றது.

தலைவன் சேர்ந்திருந்த காலத்தில் அவனால் பெற்ற இன்பத்தின் எல்லை கண்ட தலைவி அவன் வருவதாகக் குறித்துச் சொல்லிச் சென்ற காலத்தில் வராது போனால் அவளுறும் துன்பம் மிகுதியாகும். தலைவன் காலம் நீட்டிக்க, நீட்டிக்கத் தலைவியின் துன்பம் தோழியாலும் ஆற்றுவிக்க முடியாது பெருந்துன்பமாய்ப் போகும். இங்ஙனம் தலைவன் கூறிய பருவத்தில் அவன் வராதுபோக வருந்தி யிருக்கும் தலைவியின் துன்பம் நற்றிணையில் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது.

### கார்காலத்தில் தலைவன் வரவின்மை :

மழை பெய்தமையால் தேரைகள் ஒலி எழுப்ப, கொன்றை, முல்லை, தோன்றி மலர, சுனைகள் நிரம்ப, தனித்துறைவோர் உயிர் வாழ்வதற்கியலாத கார்ப்பருவம் வந்தது. தலைவன் குறித்துச் சென்ற

அப்பருவத்தில் மயில்கள் குருந்த மரத்திலிருந்து அகவும், இடையன் முல்லை சூடுவதும், குழலூதுவதும், முகில்களின் முழக்கத்திற்கு எதிராய் மயில்கள் அகவுவதும். பரற்கற்களிடையே நீரை உறிஞ்சிய ஆண்மான் பெண்மானுடன் விளையாடி மகிழ்வதுமாகிய கார்ப்பருவம் வந்தது. ஆனால் கார்காலத்தே திரும்பி வருவேன் எனக் குறித்துச் சென்ற தலைவனோ வரவில்லை. எனக் கார்ப்பருவம் வந்ததால் ஆற்றாதிருக்கும் நிலை பல பாடல்களில் கூறப்படுகிறது.

## தோழி ஆற்றுவித்தல் :

'ஆற்றுவித்தல்' என்பது சங்க அகப்பாடல்களின் வாயிலாக அறியப்படும் தமிழ் மாந்தரின் காதல் வாழ்க்கை தொடர்பான நிகழ்ச்சிக் கூறுகளில் ஒன்றாக அமையும், தோழி எனும் அகப்பொருள் மாந்தரின் செயல்வினை பற்றியது. தலைவன் தலைவியர்க்கு இடையேயான பிரிவுக்காலத்துத் தலைவிக்குரிய பிரிவுத் துன்பத்தை ஆற்றுவித்தல் தோழிக்குரிய செயலாய் வினையாய் அமைகின்றது. காதல் மாந்தரில் தலைவியர் ஆற்றுவிக்கப்படுவோராயும், தோழியர் அவரை ஆற்றுவிப்போராயும் அமைவர். "பெண்ணின் இதயம் ஆணின் அன்பையே நம்பி வாழ்கிறது. ஆணின் இதயமும் தன் அன்பையே நம்பிப் பெண் வாழவேண்டும் என்று விரும்புகிறது. இது உலகியல். தன்னையே சுற்றிவரும் தலைவன் பொருளிற்காகப் பிரியும்போது தன்னை விடப் பொருள் முக்கியமா? என்ற வினாவினை எழுப்பி ஏங்குகின்றது தலைவியினுள்ளம், இவ்வுள்ளத்தை நன்கறிந்தவள் தோழி, அவளை ஆற்ற முயலும் தோழி தலைவனின் அன்பையே முதல் கருவியாகக் கொள்கிறாள்" [5] பிரிவாற்றாமை தலைவர்க்கு உண்டாயினும் அவரை ஆற்றுவித்தல் இல்லை. தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயற் பிரிதல் நிலையிலும், போர்வினைக்காகவும் பொருள் தேடுவதற்காகவும் பிரிகின்ற நிலையிலும், பிரிவாற்றாதிருக்கின்ற தலைவியரைத் தோழியர் ஆற்றுவித்தலாக அமைந்த பாடல்கள் சங்க அகப்பாடல்களில் மிகுதியாக உள்ளன. அத்தகு தோழி கார்ப்பருவ வரவு கூறியும், பருவ வரவை மறுத்துக் கூறியும் ஆற்றுவிக்கின்ற தன்மை நற்றிணைப் பாடல்களிலும் அமைந்துள்ளது.

## கார்ப்பருவ வரவு கூறி ஆற்றுவித்தல் :

கார்காலத்தில் வருவேன் எனப் பிரிந்து சென்றவன் வரவில்லையே என அக்காலத்தில் தலைவி வருத்தமடையும்போது, இது

கார்ப்பருவமன்று, கார்ப்பருவம் இப்பொழுதான் தொடங்குகிறது எனத் தோழி தலைவியை ஆற்றுவிக்கின்றாள்.

*"சூருடை நனந்தலைச் சுனைநீர் மல்கப்*
*பெருவரை அடுக்கத்து அருவி யார்ப்பக்*
*கல்லலைத்து இழதருங் கருவரற் கான் யாற்றுக்*
*கழைமாய் நீத்தங் காடலை யார்ப்பத்*
*தழங்குகுரல் ஏறொடு முழங்கி வானம்*
*இன்னே பெய்ய மின்னுமால் தோழி" (நற்.7)*

இது நல்வெள்ளியார் பாடிய நற்றிணைப் பாடல்களில் ஒன்று. இதில் தோழி தலைவியைக் கார்வரவு கூறியும், தலைவன் தப்பாது வருவான் என்றும், எவ்வளவு விரைவாக இடிஇடித்து விரைந்து மழை பெய்கிறதோ அதுபோல் மிக விரைவாகத் தலைவன் வருவான் எனக் கூறியும் தலைவியின் ஆற்றாமையை ஆற்றுவிக்கிறாள். இப்பாடலில் தலைவன் சொன்ன கார் காலத்து மழை பெய்து தொடங்கும் தொடக்க நிகழ்வு. தலைவன் காலம் தாழ்த்தற்கு அவன் பொருளீட்டாத நிலையில் இருத்தல் என்பன கூறப்படுகின்றன. இவற்றுடன் தலைவியின் புலம்புதல் நிலையும் கூறப்படுகிறது.

தலைவி வருந்தும்பொழுதெல்லாம் தலைவியை ஆற்றுவிக்கும் பணியைத் தோழி மேற்கொள்கிறாள். தலைவனைப் பிரிந்திருக்கின்ற தலைவிக்குக் கார்காலம் தனித்த நிலையில் பெருந்துன்பம் தரும்போது, நின்கூந்தல் போலிருந்த மழை கண்டு இன்னே வருவர் (நற்.197); அவர் குறித்துச் சென்ற கார்ப்பருவம் இதோ வந்தவிட்டது, இப்பொழுதே வருவர் (நற். 387) எனக் கூறியும் பிரிவுத் துன்பத்தால் புலம்பும் தலைவியை ஆற்றுவிக்கின்றாள்.

### பருவ வரவை மறுத்துக் கூறி ஆற்றுவித்தல் :

பருவ காலம் மறந்து கடல்நீர் உட்கொண்ட மேகம் வம்ப மழை பெய்ததால் முல்லை, கொன்றை, காந்தள் போன்றவை மலர்ந்தன. இம்மேகம் அறியாமையுடையது. பொய் முழக்கம் கேட்டு ஆடிய மயில்களும், பூத்த கொன்றையும் பிடாவும் அறியாமையுடையன. தலைவன் முல்லை அரும்பும் கார்காலத்தில் வருவேன் எனச் சென்றவன் வரவில்லை. ஆதலால் இது கார்ப்பருவமன்று, வம்ப மாரியாகும் எனக் கூறித் தோழி தலைவியை ஆற்றுவிக்கின்றாள்.

*"....................மதியின்று*
*மறந்துகடல் முகந்து கமஞ்சூல் மாமழை*
*காரென்று அயர்ந்த உள்ளமொடு தேர்வில்*
*பிடவுங் கொன்றையும் கோடலும்*
*மடவ வாகலின் மலர்ந்தன பலவே" (நற். 99)*

எனவரும் பாடலடிகளால், தோழி, 'இது கார்ப்பருவமன்று, நீருண்ட முகில் மழை பொழிய இம்மலர்கள் அறியாமையால் கார்காலம் என எண்ணி மலர்ந்தன' எனப் பொய் கூறித் தலைவியைத் தேற்றுகிறாள். மழை பெய்தால் நிலம் குளிரும், குளிர்ச்சியடைந்தவுடன் தாவரங்கள் பூப்பது இயல்பு. கார்காலம் தவறாமல் தன் தொழிலைச் செய்கிறது. ஆனால் மானிடர் தவறிவிடுகின்றனர், எனத் தோழி நினைத்தாலும், தலைவியிடத்தில் அறிவில்லாதவை மலர்ந்துவிட்டன, உன் தலைவனோ அறிவுடையவன், அவற்றை நம்பாதே; உன் தலைவனை நம்பு என ஆற்றுவிக்கின்றாள்.

பிரிந்த தலைவன் வருவதாகக் குறித்த கார்ப்பருவம் வந்தும் தலைவன் வராமையால் வந்த கார்ப்பருவத்தை வம்பப் பருவம் என்கின்றாள் தோழி (நற். 248) அது கார்ப்பருவமேயாகவும், தலைவியை ஆற்றுதற்குப் பிறிதொரு வழி காணாமையால் தோழி இங்ஙனம் தம் படைத்து மொழியால் மருட்டித் தலைவியை ஆற்றுவிக்கின்றாள்

முல்லை அரும்பும்பொழுது வருவேன் என்று சொல்லிச் சென்ற காதலர் வருமுன் அரும்பும்படி வம்பமாரி பெய்யத் தொடங்கி இடி இடித்துவிட்டது. ஆதலால் இம்மேகம் அறியாமை உடையது எனவும் கூறித் தோழி ஆற்றுவிக்கும் செயலை அறியலாம் (நற். 316) தலைவன் குறித்த பருவத்து வருவான், பொய் கூறான், சொன்ன சொல் தவிரான் என்ற நம்பிக்கை ஊட்டி ஆற்றுவிக்கிறாள் தோழி.

### தலைவனின் அன்பு கூறுதல் :

சங்கத் தலைவியர் தலைவனின் பிரிவைத் தாங்க முடியாதவர்களே தவிரத் தலைவர் மீது அன்புக் குறைபாடில்லாதவர்கள். சில நேரங்களில் தான் கூறிச் சென்ற கார்ப்பருவத்து வரவில்லை என்றால் தலைவன் வருத்தமடைவதும் உண்டு. அந்த நேரங்களில் தலைவனின் அன்பு

கூறி. அவர்கள் மீது நம்பிக்கை உண்டாகுமாறும் ஆற்றுவிக்கும் தோழியர்களாகச் சங்க அகப்பாடல்களில் அவர்களைப் புலவர்கள் படைத்துள்ளனர்.

நற்றிணையில் பாலைப்பாடல் ஒன்றில் வினையின் காரணமாகச் சென்ற தலைவன் குறித்துச் சென்ற பருவத்தும் வராதது கண்டு வருந்திய தலைவியை நோக்கி,

*"காரெதிர்ந் தற்றாற் காலை காதலர்*
*தவச்சேய் நாட்டர் ஆயினும் மிகப்பேர்*
*அன்பினர்......................" (நற்.115)*

என்கின்றாள். தலைவன் குறித்த பருவத்தில் வராமைக்குக் காரணம், அவன் நீண்ட தொலைவில் உள்ள நாட்டில் இருப்பதால், தூரத்தில் இருந்தாலும் மிகுந்த அன்புடையவர், தவறாது வருவார். வருந்தாதே என்கின்றாள்.

மற்றும் ஒரு பாடலில் வருந்தியிருக்கும் தலைவியை நோக்கி, தலைவன் மிக்க அன்பினன் நின்பால் மிகுந்த விருப்பமுடையவன், மிக்க மென்மை பொருந்தினவன் அவன் சென்ற இடத்தில் ஈட்டுதற்குரிய பொருள் கிடைக்காவிட்டாலும் அதன் காரணமாக அங்கே காலம் நீட்டிக்காது. உடனே மீண்டும் வருவான் என்று தலைவனின் அன்புத் திறத்தைத் தலைவிக்குத் தோழி உணர்த்துகின்றாள். இவற்றிற்கெல்லாம் மேலாக அவர் சென்ற நாட்டிலும் கார்ப்பருவம் நிகழ்வதால் விரைந்த வருவார் எனக் கூறுகிறாள்.

### தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறுதல்:

தலைவியை இல்லின் கண் விட்டு வினைமுடிக்கப் புறப்படும் தலைவன் தான் எண்ணிய வினையினை எண்ணியாங்கு முடிப்பதன்முன் திரும்புதாகக் காட்டுவதுமில்லை.

வினைமுற்றி மீளும் செம்மலாகத் தலைவன் வரும் சூழலில் இயற்கை நல்கும் எழிற் காட்சிகளைக் கண்டு பெறும் நெஞ்ச நெகிழ்ச்சியுடனும், பிரிவின்கண் தனக்காக மாறாக் காதல் நினைவுகளுடன் காத்திருக்கும் தலைவியைக் காணும் மகிழ்ச்சியுடனும் தலைவன் வரவைக் காணலாம்.

கார்ப்பருவம் தலைவனுக்கு முன்னர்க் குறித்துச் சென்ற சொல்லை நினைவூட்டுகிறது. அவன் தலைவியை அடைய விரும்பும் ஆவலைப் பாகனுக்கு உணர்த்துகிறான்.

தலைவன் தலைவியைப் பிரிவானாயினும் பிரிவு என்பது இருவர்க்கும் உரியது தலைவனைப் பிரியும் பிரிவுத் துன்பம் தலைவிக்கு மட்டுமின்றித் தலைவியைப் பிரியும், பிரிவுத் துன்பம் தலைவனுக்கும் உண்டு. ஒன்றிய அன்பினர் பிரிகின்றபோது ஒருவர்க்கு மட்டுமேதுன்பம் எங்ஙனம் அமையும்? தலைவன் கடமையைச் செய்ய வேண்டியவன் ஆயினும் தலைவியைப் பிரிதற்கே அஞ்சுகிறான் அவ்வாறு வினையின் காரணமாகப் பிரிந்து சென்ற தலைவனுக்குக் கார்காலமும் மாலைப் பொழுதும் மிகுந்த துன்பம்தருவனவாக உள்ளன. வினைமுடித்து வரும் தலைவனுக்கு பொழுதுகள் மட்டுமின்றி வருகின்ற வழியில் ஆண்மானும், பெண்மானும், சேர்ந்து அன்புடன் இருக்கும் காட்சியும் (நற். 242); சேவல் தன் பெட்டைக்கு உணவாக நாங்கூழ்ப் புழுவை ஊட்டும் காட்சியும் (நற்.21), இதுபோன்ற இன்னோரன்ன அன்பின் உயிர் நிலையைத்தலைவன் காணும் போதும் தலைவியின் (நினைவு) பிரிவு மிகவும் மனவருத்தத்துடன் கூடிய ஆவலைத் தூண்டிகிறது. இது மட்டுமின்றி தன்பிரிவால் தலைவியின் துன்பத்தையும் நினைக்கின்றான். முல்லை சான்ற கற்பினர், பருவம் கடந்து கடை நாள் வந்தும் நான் செல்லவில்லை, எங்ஙனம் இருக்கின்றாளோ? (நற். 142) துன்பம் தரும் இயற்கைக் காட்சிகள் மட்டுமின்றிக் கோவலர் தம் குழலோசையும் தலைவிக்கு இடியோசை போன்றிருக்கும் (நற்.371) எனத் தானுணர்ந்த பிரிவுத்துன்பத்தைத் தலைவி மீது ஏற்றிக்கூறி என்உள்ளம் மட்டும் விரைவாகத் தலைவியை நோக்கிச் சென்று என்ன பயன்? நீ முதலில் விரைவாகத் தேரை செலுத்துவாயாக எனக் குறிப்பால் உணர்த்துகிறான்.

தலைவியைப் பிரிந்து தலைவன் வினைமுடித்துத் திரும்பும் வழியில் முன்னிகழ்வு கூறுதல், தலைவியின் அன்பு மிகுதி எடுத்துச் சொல்லுதல்; வரும்வழியில் தான் காணும் விலங்கினங்களை அன்புத்தன்மையை எடுத்துக்கூறுதல், தலைவியின் துன்பம் நினைத்தல், விரைந்து சென்று தலைவியைச் சேர எண்ணுதல், அதற்காகத் தேரை விரைந்து செலுத்துமாறு தேர்ப்பாகனைத் தூண்டுதல் போன்ற செயல்கள் நற்றிணைப் பாடல்களில் கூறப்பெற்றுள்ளன.

**தலைவியின் பிரிவாற்றாமை:**

தலைவனது பிரிவை அறிந்து தலைவி மேகத்தைக் குறை கூறுகின்றாள். தலைவன் பிரிவை ஆற்றாத தலைவி தன் ஆற்றாமையை யாரிடம் காட்டுவதென்று நினைந்து, தனக்குத் துன்பமாக இருக்கும் கார்காலத்தின்மீது காட்டுகிறாள். கார்காலம் வந்த நிலையில் இடிமுழக்கம் கேட்ட தலைவி, "உன் குரல் கேட்டும் எம்பெருமான் கனியா நெஞ்சம் உடையவன் ஆவான், இரக்கம் இல்லாதவன். உன் இடி முழக்கத்தைக் கேட்டுப் பாம்பு போன்ற சிற்றுயிர்தான் பயம் கொள்ளும், என் தலைவனை நீ அழைத்து வராது, நீ வருவதால் எனக்கு யாதொரு பயனுமில்லை." என மேகத்தைத் தலைவி சாடுகின்றாள்.

*"உரவுரும் உரறு நீரின் பரந்த*
*பாம்புபை மழுங்கல் அன்றியும் மாண்ட*
*கனியா நெஞ்சத் தானும்*
*இனிய அல்லநின் இடிநவில் குரலே" (நற். 238)*

கார்காலத்தை நோக்கிப் பேசியதாக இப்பாடலடிகள் அமைகின்றன.

மற்றும் ஒரு பாடலில் முல்லை நிலத் தலைவி தலைவன் குறித்துச் சென்ற கார்ப்பருவம் வந்தும் அவன் வாராமையால் கண்கள் நீர் உகுக்க, பசலை பாயும் கண்களுடன் உறங்காத நிலையில் இருக்கின்றாள்.

*"சொல்லிய பருவம் கழிந்தன்று எல்லையும்*
*மயங்கிருள் நடுநாள் மங்குலோடு ஒன்றி*
*ஆர்கல் வானம் நீர்பொதிந்து இயங்கப்*
*பனியின் வாடையொடு முனிவுவந் திறுப்ப*
*இன்ன சிலநாள் கழியின் பலநாள்*
*வாழ்வேன்...................." (நற். 364)*

என்று மழை, பனி, வாடையோடு சில நாள் கழிந்தாலும் மாலைப்பொழுதும் ஒரு சேர வந்து கூடினால் எந்த நாளும் நான் உயிர் வாழமாட்டேன் எனப் புலம்பும் தலைவியைக் காண முடிகிறது.

**கார்கால நீக்கத்துத் தலைவியின் துன்பம் :**

கார்காலம் வரும்பொழுது வருவேன் என்று வினைவயிற் சென்ற தலைமகன் முன்பு அவன் கூறிய பருவம் வந்து நீங்குமளவும் வரவில்லை.

தலைவி நெஞ்சழிந்து சுரநெறியே சென்ற நம் காதலர் கொன்றைகள் மலர்ந்து கார்காலம் வந்து சென்றதனை அறியவில்லையோ? ஆயினும் புதர்தொறும் மலர்ந்த எறுழ் மலர் பூத்து வெண்ணிறம் பெறுகின்ற கூதிர் காலத்தையும் அவர் அறியவில்லையோ? என மனம் நொந்து கூறுகின்றாள்.

*"இழையணி மகளிரின் விழைதகப் பூத்த*
*நீடுசுரி இணர சுடர்வீக் கொன்றைக்*
*காடுகவின்பூத்த ஆயினும் நன்றும்*
*வருமழைக் கெதிரிய மணிநிற இரும்புதல்*
*நரைநிறம் படுத்த நல்சிணர்த்து எறுழ்வீ*
*தாஅந் தேரலர் கொல் "(நற். 302)*

கார்காலத்தில் மலர்கள் மலர்வது-மணம் வீசுவது-பின் வாடுவது-பின் சருகாகி விழுவது இயல்பு. அதுபோல் நீண்ட நாள் துயரத்தால் தலைவி வாடிவிடுதல் பொருள் மீது கொண்ட ஆசையால் தலைவன் கூறிச் சென்ற உறுதிமொழி பொய்த்தல், தலைவன் மீது கொண்ட நம்பிக்கையை இழத்தல் போன்ற செய்திகள் மேற்கூறிய பாடலில் பாலை நிலத் தலைவியின் பிரிவுத் துன்பத்திற்கு உரியனவாக உணர்த்தப் பட்டுள்ளன.

## முடிவுரை :

இயற்கைச் சூழலில் காலப் பின்னணியில் பண்டைத் தமிழர்தம் அக வாழ்க்கைச் செய்திகளைக் கூறுவன சங்க அகப்பாடல்கள். குறித்த காலத்தில் குறித்த செயல்களைச் செய்தல் வேண்டும் என்பதே வேண்டப்படுவது. அது முடியாதபோது அதனால் ஆகும் துன்பங்களை உணரவும், அனுபவிக்கவும் வேண்டியிருக்கின்றது. காதல் வாழ்க்கையில் இணைகின்ற தலைவனும் தலைவியும் கால நிகழ்வோடு கூடிய உணர்வுகளைக் கொண்டிருப்பவர்களாகச் சங்கப் பாடல்களில் காட்டப்படுகின்றனர். இல்லறக் கடமைகளை நிறைவேற்றும் நிலையில் அவர்கள் சேர்ந்திருப்பதும், பிரிந்திருப்பதுமான சூழலுக்கு ஆட்படுகின்றனர். இவர்தம் பிரிவிற்கும் கூடியிருத்தற்குமான கால நிகழ்வுகள் உண்டு. சோந்திருக்க வேண்டிய காலத்தில் அவர்கள் சேராதிருந்தாலும் அவ்விருவருக்கும் ஆகும் துன்பம் மிகுதியாகும். இத்தகைய சூழலில் அவர்தம் அன்பின் மிகுதியையும், அன்பின்

பெருக்கத்தையும் சங்கப் புலவர்கள் காட்டியிருக்கின்றனர். அன்போடு கூடிய வாழ்க்கை, வாழ்க்கையில் வாய்மையைப் போற்றுதல், வாய்மையில் நம்பிக்கை வைத்தல் போல்வனவும் பாடல்களில் காட்டப்படுகின்றன. காதலர் வாழ்க்கையில் பிரிவில் காதலர்கள் ஆற்றாது துன்பம் மிகுதிப்படும்போது அவர்தம் துணையிருப்போராகிய தலைவியின் தோழி, தலைவனின் தேர்ப்பாகன் போன்றோர் துணையாயும் ஆற்றுவிப்போராயும், உதவுவோராயும் அமைகின்றனர். இங்ஙனம்,சங்கப் பாடல்களில் காலநிகழ்வு, காதலர்க்கான காதல் வாழ்க்கை நிகழ்வில் பின்னணியாக அமைந்து அவர்தம் அன்பின் உள்ளத்தையும் உணர்வுகளையும் வெளிப்படுத்துவனவாக உள்ளமை அறியத்தக்கது.

**குறிப்புகள் :**

1. மு. வரதராசன்,பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை ப.56
2. மேலது பக் 32-33
3. கெ. செல்லத்தாய், ஐங்குறுநூறு முல்லைப் பாடல்கள் உள்ளடங்களும் ஆய்வும் எம்ஃபில் ஆய்வேடு, ப.69
4. ஆரார், வேர்ட்ஸ்வர்த் - சிலகோடுகள் பக் 17,18
5. சரளாராச கோபாலன், சங்க இலக்கியம் அகம் ப.85

# தனிப்பாடல்கள் உணர்த்தும் பெண்மைக் கோட்பாடு

- புனித குமாரி

பேணுகின்ற தன்மையளாகிய பெண், வளந்தரும்வற்றாத ஆறாகவும் அகழ்வாரைத் தாங்கும் நிலமாகவும், கல்வி தரும் கடவுளாகவும், செல்வந்தரும் திருமகளாகவும், வீரந்தரும் விளைநிலமாகவும், உருவகிக்கப்படுகின்றாள். மனையில் வாழ்வதும் ஆடவரை உயிராகக் கருதுவதுமே சங்ககாலப் பெண்களின் கடமைகளாயின. பெரும்பாலான இலக்கியங்கள் ஆண்களால் எழுதப்பட்டமையால், அவை ஆணாதிக்கத்தின் எதிரொலியாகவே அமைந்தன. தலைவனுக்காக, அவனுடைய இலக்கிற்காகப் பாடுபடும் கைப்பாவையாகப் பெண் படைக்கப்பட்டாள். இன்றைய காலச் சூழலில் பெண்ணியம் பெண் விடுதலை போன்ற சொற்கள் பெண்ணைத் தனித்துப் பிரித்துப் பேசுவதற்குப் பயன்படுத்தும் சொற்கள் அன்று. பெண்ணின் தனித்துவத்தைச் சிறப்பை உணர்த்துவதேயாகும். பெண்மைக் கோட்பாடு என்பது படைப்பாளிகள் இதை ஒரு வரையறைக்குள்ளான ஒன்றாக வைத்துத் தங்கள் படைப்புக்களில் படைத்துக் காட்டுவதேயாகும். இது காலத்திற்குக் காலமும். நாட்டிற்கு நாடு மாறுபடுவதாகும்.

**பெண்ணியம் - சொல்விளக்கம் :**

பெண்ணியம் என்ற சொல் நம் நாட்டைப் பொறுத்தவரை அண்மையில் அறிமுகமான ஒன்று. 17,18 ஆம் நூற்றாண்டுகளில் மேலை நாடுகளில் வளர்ந்து வரும் பெண்ணியம் இரண்டு நூற்றாண்டு களாகத்தான் இந்தியச் சிந்தனையில் இடம்பெற்று வளர்ந்து வருகிறது. பெண்ணியத்தைப் பெண்களின் உரிமைக்காகப் போராடும் ஒரு இயக்கமென்று கொள்ளலாம். பிரிட்டானியக் கலைக் களஞ்சியம், 'பெண்ணியம் என்ற சொல் மிகவும் அண்மைக் காலத்தில் தான் தோன்றி வளர்ந்து வருகிறது. அது பெண்களின் உரிமைக்காகப் போராடும் ஒரு புதிய இயக்கமாகும். மேலும், பெண்ணின் தனிப்பட்ட குடும்ப வாழ்க்கையினும் சமுதாய அறிவியல் பொருளாதாரச் சூழ்நிலையிலும் அவள் ஆண்களுக்குச் சமமானவள் எனும் உயர் நெறியை நிலை நாட்டும் நோக்கத்தைக் கருவாகக் கொண்டு இயங்குகிறது.' (Emagclopaedic

Britanica, vol.9 1768 p.154) என்று கூறுகிறது. பெண்ணியம், பெண்ணியல், பெண்நிலை வாதம், பெண்ணுரிமை, பெண் விடுதலை, பெண்மைக் கோட்பாடு ஆகிய சொற்கள் ஒரு பொருளுடையன. பெண்ணியம் என்ற சொல் முதன் முதல் 17-ஆம் நூற்றாண்டில் பயன்படுத்தப்பட்டது. ஆனால் அன்றிருந்த பொருள் இன்று மாறுபடுகிறது. பெண்ணின் நிலையை அதாவது உலகத்தோடு பெண் எத்தகைய தொடர்பு கொண்டிருக்கிறாள், எவ்வாறு அவள் அடக்கு முறைக்கு ஆளாகிறாள். ஆணுக்கொரு நீதி. பெண்ணுக்கொரு நீதி என்ற நிலை நிலவுதல் போன்ற பல செய்திகளை நன்கு அறிவதும் அவ்வறிவுறை மேற்கூறிய நிலையை மாற்றியமைக்கத் தக்க சக்தியாகப் பயன்படுத்துதலும், என்று பெண்ணியத்திற்கு விலக்கம் கூறுவர். (Balasubramanian P. Femimism-Indian Perspeckue: Tamil Creative response, Seminan on Feminism Telegu University Hyderabad, Mach 1994) பெண்ணியக் கோட்பாடுகளைப்பற்றிக் கூறுமிடத்து டாக்டர் தேவதத்தார். "வேறு கோட்பாடுகளைப் போலப் பெண்ணியத்தின் கருத்தியல் ரீதியான தளத்தைத் தனிக் கோட்பாட்டின் தொகுப்பிலிருந்து பெற்றுக் கொள்ளவில்லை. எல்லாக் காலத்தும் எல்லாப் பெண்களுக்கும் பொருந்தும் ஒரு பொதுவான வரையறையை இதில் திணிக்க முடியாது. பார்வைகள் கலாச்சாரப்பிரிவுகள் நடைமுறைக்கேற்ப மாற்றங்கள். எனவே வரையறையாது மாற்றமடையக்கூடும். மாற்றமடையவும் செய்யும்," என்கிறார். (பெண்கள் படைப்பில் பெண்கள் (தொகுப்பு நூல்) ப. 42 அன்னை தெரசா மகளிர் பல்கலைக் கழக வெளியீடு)

### தனிப்பாடல்களில் பெண்மைக் கோட்பாடு :

இருபதாம் நூற்றாண்டின் இக்காலக் கட்டத்தின் சமூகச் சூழல் கொண்டு, இக்காலத்தில் பேசப்படும் பெண் விடுதலை பெண் அடிமை என்ற கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு, பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய தனிப்பாடல்களை அணுகிப் பார்ப்பது பொருத்தமுடையதன்று எனவே இவ்வாய்வு தனிப்பாடல்கள் தோன்றிய கால கட்டத்தில் சூழ்நிலையில் வெளிப்படும் பெண்மை பற்றிய கருத்துக்கள் எவை என்பதை மையமாகக் கொண்டு அமைகிறது.

தனிப்பாடல்களைப் பாடிய புலவர்களின் வாழ்க்கைப் பின்னணி, பாடல்கள் தோன்றிய காலப்பின்னணி, ஆகியவற்றுடன் அவர்கள் பாடியுள்ள தாய், மனைவி, மகள், பெண் பரத்தை போன்ற உறவு நிலைகளைப் பற்றிக் கூறியுள்ள கருத்துக்களையும் இணைத்து ஆய்வு

செய்யுமிடத்துத் தனிப்பாடல்கள் உணர்த்தும் பெண்மைக் கோட்பாட்டினை அறியலாம். இலக்கியம் படைப்பாளரின் உள்ளத்தில் தோன்றிப் புறத்தே வடிவம் கொள்கிறது. புறத்திற்கும் அகத்திற்கும் பிரிக்க முடியாத ஒரு நெருக்கம் இருக்கிறது. எனவே, படைப்பாளரின் உளவியலும் அவரால் படைக்கப்பெறும் கதைமாந்தரின் உளவியலும் படிப்பவரின் உள்ளமும் ஒன்றி இருப்பது காண முடிகிறது. இக்கருத்து படைப்பாளரின் உள்ளத்தின் பிரதிபலிப்பாக அமைவது இலக்கியம் என்பதை உணர்த்துகிறது. இது போன்றே தனிப்பாடல்கள் பாடிய புலவர்கள் உள்ளத்தில் எண்ணிய எண்ணங்கள் - பெண்களைப் பற்றிய கருத்துகள் அவர்கள் பாடல்களின் வெளிப்படுகின்றன. தனிப்பாடல்களில் பாடப்பெற்ற பெண்களின் நிலையை நான்காகப் பிரிக்கலாம்.

1. இல்லறப் பெண்டிர்
2. கைம் பெண்டிர்.
3. பரத்தை
4. பெண்பாற் புலவர்கள்

## இல்லறப் பெண்டிர் :

பெண் பல்வேறு நிலைகளைத் தன்னுள் கொண்டவள் மகளாய், மனைவியாய், தாயாய் வரும் உறவுகள் குடும்பத்தில் இடம் பெறும் மகளிர் உறவுகள். இவர்கள் இல்லறப் பெண்டிர் என்ற வகையில் அடங்குவர். இல்லறப் பெண்டிர் என்ற நிலையில் பேசப் படும் இப்பெண்டிர் இல்லறத்தில் தலைமைப் பொறுப்பை ஏற்றவராகவோ, ஆண்களோடு சமூகத்தில் சமநிலை உள்ளவர்களாகவோ கருதப்படவில்லை. தலைமைப் பொறுப்பேற்ற ஆண்களோ உரிமை வழங்குபவராயில்லாததோடு பெண்களே விரும்பி அடிமைத்தளையைப் பூண்டிருந்தனர். ஆண்களோடு சமநிலை பெற வேண்டுமென்ற உணர்வே அவர்கட்கு இல்லை.

தொல்காப்பியத்தில் பெருமையும் உரனும் ஆணுக்கும் அச்சமும் நாணமும் மடனும் பெண்ணுக்கும் பண்புகளாகப் பேசப்படுகிறது. (தொல். 1043-1044) ஓர் ஆடவன் பெண்ணைத் திருமணம் செய்ய ஒப்புமைகள் பத்து மண வாழ்வில் வேண்டுமென்று கூறப்பட்டது. (நெ.சூ. 1218) மிக்கோனாயினும் கடிவரையின்றே (தொல். 93) என ஆடவர்க்குத் தனித்துக் கூறியது. தனிப்பாடல் ஒன்று பெண்ணை மணக்க ஆணுக்கு

வேண்டிய தகுதிகளாக நற்பண்பும், சீலமும், அழகும், ஆயுளும், வலிமையும், கல்வியும், தனிசைச் சேர்ந்தவரைக் காப்பாற்றுகின்ற நோக்கமும், செல்வமும், ஆகிய எண்வகை நலன்களைக் கூறுகின்றது. (2.381,353) அதுபோலவே யார்யாருக்கும் பெண்ணைக் கொடுக்கக் கூடாது என்றும் கூறுகின்றது.

*"முத்தியில் விருப்ப முடையவன் மிடியன்*
*மூர்க்கண் சேண் டேயத்திலுள்ளோன்*
*புத்தியில் வயிரம் பொருந்திய சூரன்*
*புதல்விதன் வயதின்மும் மடங்கு*
*தத்திய வயது ளோன்னார் தமக்குத்*
*தரணியில் லொருவருமுள்ள*
*நந்தி நன் மகளைத் தரத்தகா தென்னாக்*
*கணித நூல் நவின்றிடு மனனோ,"*

(2.381. 352) என்று மோட்சமடைவதில் ஆசையுடையவன், வறியவன், மூர்க்கன் என்போரைப் பட்டியலிட்டுக் கூறுகின்றது. இல்லறப் பெண்ணைப் புகழ்ந்து கூறும்போது மனைக்கு விளக்கம் மடவாள், (பாகம் 20414) என்று கூறுகின்றது. பெண்ணின் அறிவுக் கூர்மை அங்கே மதிக்கப் படவில்லை. பெண்ணின் புத்திகள் கீழே தள்ளப்பட்டது.

பெண் வெறும் அடுக்களைப் பதுமையாகக் கருதப்பட்ட நிலை ஏற்கப்பட்டது. சமையல் செய்யும் இயந்திரமாகவே அவள் கருதப்பட்டாள் பெண்ணாகிய ஔவையாரே பாரி மகளிர் செய்து வைத்த சமையலைப் பாராட்டுகின்றார். கீரைக்கறியைப் பாரிமகளிர் பாசத்தோடு படைத்தமையின் அது தேவாமிர்தமாயிருந்தது என்கிறார். (1,10,18) செல்லன் எனும் வேளாண் மனைவி அன்போடு இட்ட கம்பம் சோற்றினைக் கம்பர் புகழ்ந்து பாடுகிறார். (1,88,46) கொண்டத்தூரில் வாழ்கின்ற தண்டைக் காலம்மை சமைத்த பூசணிக்காய்க் கறியை உண்டு காளமேகம்

*"கண்டக்காற் கிட்டும் கயிலாயம் கைக்கொண்டுட்*
*கொண்டைக்கான் மோட்சங் கொடுக்குமே- கொண்டத்தூர்*
*தண்டைக்காலம்மை சமைத்துவைத்த பூசணிக்காய்*
*அண்டர்க்கா மீசருக்கு மாம் "(1,55, 130)*

என்று புகழ்ந்து பாடுகின்றார்.

சுவையான உணவைப் படைக்காத ஸ்ரீரங்கத்துப்பெண் ஆச்சாளை நிந்தித்துப் பாடுகின்றார். (1,175, 174) பண்டிதன் மனைவி உபசரித்த முறைமையில் அவளைப் புகழ்ந்து சுப்ரதீபக் கவிராயர் பாடுகின்றார். (2,16, 6) கல்வி தருபவளாகத் தாயை எண்ணவில்லை. நாச்சுவை தருபவளாகவே அவளை எண்ணினார். அதனால் 'தாயோடு அறுசுவைபோம் தந்தையோடு கல்விபோம் (1,30,64) என்று பெண்பாற் புலவராகிய ஔவையாரே பாடுகின்றார். மனைவி வாசுகியின் இறப்பில் வள்ளுவரும், 'அடிசிற்கினியாளே' என்றுதான் எண்ணுகின்றார்.

மனைவி என்பவள் வாய் பேசாத மடந்தையாகவே இருக்க வேண்டுமென்று விரும்பினர். பெண்பேசினால் அவளைச் சாடினர். பேசும் மனையாளில் பேய் நன்று (1,17,35) என்றனர். பெண் குடும்பத்தில் அறிவுரை கூறுபவளாகவே மதிக்கப்படவில்லை. பெண்புத்தி கேட்பானுப் பேய் (2,5) என்றனர். பொருத்தமற்ற மனைவியைச் சமுதாயத்தில் ஏசினர். (1,9,15) மனைவி கணவனுக்கு இசைவானவளாக நடந்து கொள்ளாவிடில் கணவன் சந்நியாசம் பெறலாம் எனப் பரிந்துரைக்கப்பட்டது. (1,8,14) ஆனால் கணவன் சரியில்லாத பெண் என்ன வழி மேற் கொள்ளலாம் என்று எங்கும் யாராலும் கூறப்படவில்லை. கணவன் கருத்துக்கிசைந்த மனைவியை மனமாரப் புகழவோ பாராட்டவோ அவன் தேர்ந்தெடுத்த இடம் மஞ்சமே ஆகும். பலர் எதிரில் அவளைப் புகழ அவனுக்கு மனமில்லை போலும். (1,28,59) மனைவியின் நற்பண்புகளாகத்தயை, பணிவு, அழகு, பொறுமை என்பன கீழ்வருமாறு கூறப்பட்டன.

*"அன்னை தயையுமடியாள் பணியுமலர்ப்*
*பொன்னி ழைகும் புவிப்பொறையும் - வன்னமுறும்*
*வேசி துயிலும் விறன்மந் திரிமதியும்*
*பேசி பிறவடிவுடையாள் பெண்" (2, 388 : 364)*

**கைம்பெண்டிர் :**

சங்க இலக்கியத்தில் கணவனையிழந்த பெண்டிர் தொடிகழி மகளிர், கழிகல மகளிர் உயவற் பெண்டிர் ஆளில் பெண்டிர் என்று குறிக்கப்பட்டனர். இம்மகளிர் கூந்தலைக் கொய்து மங்கல அணிகளைத் துறந்து கைம்மை நோன்பு நோற்று வாழ்ந்த நிலையும், தீப்பாய்ந்து இறந்தமையும் புலவர்களால் பாடப்பட்டது.

தனிப்பாடல் தொகுப்பிலும் இவர்கள் பற்றிய குறிப்பு காண்கிறோம். கம்பரின் பாடலொன்று இவர்களின் கண்ணீர் ஓவியத்தை நமக்கு உணர்த்துகின்றது. அசைந்து விழக்கூடிய பல்லும், முடியிறக்கப்பட்ட மொட்டைத்தலையும் நீண்டநாள் துவைக்கப்படாததால் அழுக்கடைந்த புடவையும், உடையவளாய், மதிப்பிழந்து உணவில்லாது தளர்ந்து போன அக்கைம்பெண்ணிற்குத் துணை இராட்டினமே என்று கூறுகின்றார்.

*நில்லாத பல்லும் பறிபட்ட கூந்தலு நீண்டகரிப்*
*பொல்லா வழுக்குப் புடவையுமாய் வெகு பூச்சியம் போய்ச்*
*செல்லாப் பணத்துக்குத் கேட்டூணு மற்றுத்தியங்கி யொன்றும்*
*இல்லாத பாவிதனக் கார்துணை பொன்னி ராட்டினமே (1,79,29)*

என்ற இப்பாடல் கல்லையும் உருகவைக்கின்ற பாடல்.

**பரத்தையர்**

பண்டைக் காலந்தொட்டே பரத்தையர் என்றொரு குலம் உருவாவதற்குச் சமுதாய அமைப்பு இடம் கொடுத்து வந்துள்ளது. பரத்தையொழுக்கம் ஒருவகை குடும்ப ஒழக்கம் போலப் பரவிக்கிடந்து வரைவின் மகளிர் வாழ்வுதரும் வளர்ச்சிக்கு ஏற்ற சூழலைச் சமுதாயத்தில் உருவாக்கியது.

தொல்காப்பியம் பரத்தைபற்றிப் பேசுகின்றது. சங்க இலக்கியங்களில் இவர்கள் கணிதையர் என்று அழைக்கப்பட்டால் பரத்தையரின் இழிநிலையைச் சங்க இலக்கியங்கள் பல காட்டுகின்றது. பரத்தைவயின் பிரிவு சென்ற ஆடவர்கள் இல்லறந் துறந்து அவர்களிடம் மயங்கிக் கிடந்தனர். வள்ளுவன், பரத்தையர் ஒழுக்கத்தைக் கடிகின்றார்.

*இருமலைப் பெண்டிரும் கள்ளும் கவரும்*
*தரு நீக்கப்பட்டார் தொடர்பு*

என்று வள்ளுவர் கெட்ட தீய பழக்கங்களுள் ஒன்றாகப் பரத்தையைக் கண்டிக்கின்றார். கம்பர் ஆடவருக்குள் கற்பையுணர்ந்து இந்தை இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தையில் தொடாத இராமனைப் படைக்கின்றார். அருணகிரியார் காலத்தில் பரத்தமை மீண்டும் தலை தூக்கிற்று. தனிப்பாடல்களிலும் இப்பரத்தையர் பற்றிய செய்தி கூறப்படுகின்றது. கலியுகத்தில் வாழும் தாசிப் பெண்கள் தம் தொழில்

மறந்து இழந்து இராட்டினத்தில் நூல் நூற்றுப் பிழைக்க வேண்டிய நிலை. ஏற்படுவதற்குக் காரணமே சில இல்லறப் பெண்டிர்தம் கணவரைத்துறந்து பிற ஆடவரைப் புணர்வதே என்று பரத்தையரின் மறுவாழ்விற்கு வழிகூறும் முத்து சுப்பையர் பாடல் குடும்பப் பெண்ணைக் கொச்சைப்படுத்துகின்றது. (2,106,5) தனிப்பாடல் திரட்டில் நிறைய பாடல்கள் பரத்தையர்கள் என்ற தாசிகளைக் கேவலப்படுத்திப் பாடும் பாடல்களாகவே உள்ளன. புலவர்களும் தங்கள் காம இச்சையின் வடிகாலாகவே இப்பாடல்களைப் பாடினர். இருபொருள் தரக் கூடிய சிலேடை என்ற அருமையான பாவகையைப் பல புலவர்கள் தாசிகளைச் சிலேடைப் பொருளாக வைத்துப் பாடி இன்பம் கண்டனர்.

*தென்னமரமும் வேசையும்*
*கூத்தியாரும் குரங்கும்*
*வெற்றிலையும் வேசியும்*
*பனைமரத்துக்கும் வேசிக்கும்*

என்று பல பாடல்கள் தாசியை ஏசிப்புகழ்ந்துபாடும் சிலேடைப் பாடல்களாக வருகின்றன. ஒரு குடும்பமே இந்தத் தாசித்தொழிலில் ஈடுபட்டதால் அவர்கள் பரம்பரையும் இந்தத் தொழிலையே கடைப்பிடித்தனர். மதுரையில் இப்படி வாழ்ந்த கூத்தாள் என்னும் தாசியையும் அவள் தமக்கையையும் தாயையும் பாட்டியையும் காளமேகம் வருணிக்கின்றார்.

*"கூத்தாள் விழிகணெடுங் கூர்வேலாம் கூத்தாள்தன்*
*மூத்தாள் விழிகண் முழுநீலம் - மூத்தாள் தன்*
*ஆத்தாள் வழி களரவிந்த மாத்தாள்தன்*
*ஆத்தாள் விழிகளிரான் டம்பு" (1 : 133 : 76)*

என்று காளமேகம் பாடுகிறார்.

ஆலைப் பதிப் பெற்றான் செட்டி, தாசி கமலாட்சிக்காகக் கொடுத்த மருந்துச் செலவுக்கிரயம் காசுநானுக்கும் பாடியதாக ஒரு பாட்டு இடம் பெற்றுள்ளது (1,43.102)

வேசியர்கள் காசாசை மிகுந்தவர்கள் என்பதை, காசாசை வேசியர்கள் கற்ற பொய், (2,391,373) என்று வரும் தொடரில் அறியலாம். கற்புடைய பெண்டிர்க்கு வலியுறுத்தப்பட்ட நாணம், வேசியர்க்கு,

மறுக்கப்பட்டது. நாண உணர்வு இல்லாதவரே வேசித் தொழிலுக்கு ஏற்றவள் எனக் கருதப்பட்டாள்.

*'கூசி நில்லாக் குலக் கொடியும் கூசிய வேசியும்*
*கெட்டுவிடும்' (1,16,32)*

என்று ஔவையாரே கூறுகின்றார்.

கலைகளில் உல்லவராகக் கருதப்பட்டனர். இசைத்திறம் பெற்றவர் போற்றப்பட்டவர் இல்லாதவர் ஏளனம் செய்யப்பட்டனர். நாகைப் பட்டிணத்தில் வாழ்ந்த ஒரு வேசியை இகழ்ந்து காளமேகம் எள்ளி நகையாடுகிறார்.

*"வாழ்த்த திருநாகை வாகான தேவடியாள்*
*பாழ்த்த குரலெடுத்துப் பாடினாள்- நேற்றுச்*
*கழுதைகெட்ட வண்ணான்கண் டேன் கண்டேனென்று*
*பழுதையெடுத் தோழவந்தான் பார்" (1,152,124)*

என்று பாடுகிறார்.

சிக்கல் என்னும் ஊரில் ஆவுடை என்ற பெண்ணுக்கு பொட்டு கட்டப்பட்டதை வசையாண்டான் பாடியுள்ளான். தாசிகள் கோவிலில் பொட்டுக்கட்டி வாழும் வாழ்க்கை முறை இருந்தது. "திருமகள் கழுத்தில் திருமால் மாங்கல்யக் கயிற்றைக் கட்டினான். சிவன் உமைக்கு மங்கல நான் பூட்டினான் நான்முகன் கலைமகள் கழுத்தில் மங்கலக் கயிற்றைக் கட்டினான், சிக்கல் எனும் பதியையாண்ட குமரப் பெருமான் இந்த ஆவுடைக்குக் கட்டினான்" (2 : 37 : 1) என்று அவளுக்குப் பொட்டுகட்டிய நிகழ்ச்சியை பெருமையாகப் பாடுகிறார்.

## கவிதைபாடிய பெண்கள் :

தனிப்பாடல்களில் ஔவையார், நிறைய பாடல்கள் இயற்றியுள்ளார். மேலும் சில பெண்பாற் புலவர்கள் உப்பை, உறுவை, வள்ளியம்மை, ஏதம்வாணரின் மனைவி பரராசசிங்கத்தின் மனைவி, வரதுங்கராம் பாண்டியரின் மனைவி. கம்பர் வீட்டு வேலைக்காரி ஆகியோர் பாடிய பாடல்கள் உள்ளன. விலைமாதர்களும் பாடியுள்ளனர்.

## முடியுரை :

தனிப்பாடல் திரட்டு வழி நாம் அறிந்து கொள்ளும் மகளிர் நிலை சிறப்பானதாக இல்லை. ஔவையார் ஒருவரே தனிச்சிறப்புப் பெற்றவராய் நிற்கின்றார். அவரும் பெண்ணைச் சாடும் வண்ணம் கருத்துக்கள் கூறுகின்றார். இல்லறப் பெண்டிர் அடிமைச் சமுதாயத்தின் பிரதிநிதிகளாய் வாழ்ந்தனர். தாசிகள் என்ற சாதிமுறையை ஆணாதிக்கச் சமுதாயப் உருவாக்கித் தன்காம இச்சையைத் தீர்த்துக் கொண்டது.

# வள்ளலாரின் உயிர்இரக்கக் கோட்பாடு

சு. சக்திவேல்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய அருளாளர்களுள் வள்ளலார் (1823-1874) குறிப்பிடத்தகுந்தவர் ஆவார். தொடக்க காலத்தில் சைவசமய நெறியைப் பின்பற்றிய வள்ளலார், காலவளர்ச்சியில் "சுத்த சன்மார்க்கம்" என்ற பொதுநெறியைத் தோற்றுவித்தார். எத்துணையும் பேதமுறாது, எவ்வுயிரும் தம் உயிர் எனக் கொள்ளும் ஆன்மநேய ஒருமைப்பாட்டுணர்வை வலியுறுத்துவது அவரது நெறியின் முடிந்த முடிபாகும்.

இறைவன் அருளைப் பெறுவதற்குப் பக்தி, கர்மம், யோகம் முதலிய வழிமுறைகளை அருளாளர்கள் எடுத்து இயம்பி உள்ளனர். தொடக்க காலத்தில் இந்நெறிகளைப் பின்பற்றிய வள்ளலார், கால வளர்ச்சியில் பிற உயிர்களிடத்து அன்பு காட்டுகின்ற உயிர் இரக்கம் ஒன்றின் மூலமாகத்தான் இறைவன் அருளைப் பெற முடியும் என்ற கருத்தை வலியுறுத்துகின்றார்.

"கடவுளின் அருளை ஜீவகாருண்ய ஒழுக்கத்தினால் பெறக் கூடுமல்லது, வேறெந்த வழியாலும் பெற முடியாது" என்ற வள்ளலாரின் கருத்தை அடிப்படையாகக் கொண்டு "ஜீவகாருண்யமே கடவுள் வழிபாடு" என்பது இக்கட்டுரையின் கருதுகோளாக அமைகிறது.

### வள்ளலாரின் இருவகைச் சிந்தனை:

வள்ளலாரின் பாடல்கள் இரண்டு வகையான சிந்தனைகளைக் கொண்டு விளங்குகின்றன.

(1) இறைச் சிந்தனை (சத்விசாரம்)

2) இரக்கச் சிந்தனை (பரோபகாரம்)

இவ்விரு சிந்தனைகளுள், இரக்கச் சிந்தனையை விளக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

## இரக்கச்சிந்தனை:

ஓர் உயிர் பிற உயிர் மீது காட்டுகின்ற இரக்கத்தின் மூலமாகத்தான் இறைவனின் அருளைப் பெறமுடியும் என்பது வள்ளலாரின் கருத்து, இக்கருத்தினை நடைமுறைப் படுத்த அவர் காட்டும் வழிகள் இரண்டு

1) புலால் மறுத்தல்

2) பசி தவிர்த்தல்

இறைவனால் படைக்கப்பட்ட அனைத்து உயிர்களும் எந்த ஒரு துன்பமும் இல்லாமல், இன்பமாக வாழ வேண்டும் என்ற நோக்கத்தில் கூறப்பட்டது 'புலால் மறுத்தல் கொள்கை' ஆகும். புலால் உணவு உண்ணாதவர்களை "அகஇனத்தார்" என்றும், புலால் உணவு உணபவர்களைப் "புறஇனத்தார்" என்றும் பாகுபாடு செய்வார் வள்ளலார்.

'தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிது ஊன் உண்ணக் கூடாது' என்ற கருத்தின் அடிப்படையில் 'புலால் மறுத்தல்' கருத்தை வள்ளலார் கூறி இருக்கலாம். ஆன்ம விளக்கம், பசியினால் நலிவடையும். எக்காரணத்தைக் கொண்டும் ஆன்ம விளக்கம் தடைப்படக் கூடாது என்ற கருத்தின் அடிப்படையில், வள்ளலார் பசி தவிர்த்தலை வலியுறுத்தி இருக்கலாம். பசி என்று வந்தால், புலால் உணவு உண்ணும் புறஇனத்தாருக்கும் பசி தவிர்க்க வேண்டும் என்கின்றார்.

"உயிர்க்கொலையையும் புலைப்பொசிப்பும் உடையவர்கள் எல்லாம் உறவினத்தார் அல்லர். அவர் புறஇனத்தார் அவர்க்குப் பயிர்ப்புறும் ஓர் பசிதவிர்த்தல் மாத்திரமே புரிக."[1]

பசியினால் ஆன்மா நலிவடையக் கூடாது என்ற இரக்கச் சிந்தனையின் அடிப்படையில் இக்கருத்தினை வள்ளலார் வலியுறுத்துகிறார். பசிப்பிணியைப் போக்குவதற்காக வடலூரில் 'சத்திய தருமச்சாலை' அமைத்துள்ளார்.

புலால் மறுத்தல் - துன்ப நீக்கம்
பசி தவிர்த்தல் - இன்ப ஆக்கம்

வள்ளலாரின் உயிர்இரக்கக் கோட்பாட்டிற்கு அரணாக அமைபவை இவ்விரு அடிப்படைச் சிந்தனைகள் ஆகும்.

## ஜீவகாருண்யமே கடவுள் வழிபாடு :

பிற உயிர்களிடத்து அன்பு காட்டும் ஜீவகாருண்யமே இறைவன் அருளைப் பெறுவதற்குரிய 'ஒருவழிப்பாதை' என்று வலியுறுத்துகின்றார். அவர் கூற்றில் கூறுவதானால், "கடவுள் அருளை சீவகாருண்ய ஒழுக்கத்தினால் பெறக் கூடுமல்லது, வேறெந்த வழியாலும் பெறக் கூடாது என்பது எப்படி எனில், அருள் என்பது கடவுள் தயவு, கடவுள் இயற்கை விளக்கம். சீவகாருண்யம் என்பது சீவர்கள் தயவு, சீவர்கள் ஆன்ம இயற்கை விளக்கம். இதனால். தயவைக் கொண்டு தயவைப் பெறுதலும், விளக்கத்தைக் கொண்டு விளக்கத்தைப் பெறுதலும் கூடும். வேறொன்றினால் பெறக்கூடாமை அனுபவம் ஆகலின், சீவகாருண்யத்தைக் கொண்டு அருளைப் பெறுதல் கூடும். வேறொன்றினால் பெறக் கூடாமை நிச்சயம். இதற்கு வேறு பிரமாணம் வேண்டாம் என்று அறிய வேண்டும்." [2] என்பது வள்ளலார் கூற்று. சீவகாருண்யம் ஒன்றின் மூலமாகத்தான் இறைவன் அருளைப் பெற முடியும் என்பது அவர் பெற்ற அனுபவம். எனவேதான் சீவகாருண்யம் தவிர பிறவற்றால் இறைவன் அருளைப் பெறமுடியாது என்ற துணிபுரைக்கிறார்.

## இறைவன் அருள் - "பெரிய தீப்பிழம்பு"
## உயிர்களின் அன்பு - "சிறிய தீப்பிழம்பு"

இறைவன் அருளைப் 'பெரிய தீப்பிழம்பு' என்று கொண்டால், உயிர்களின் சீவகாருண்யத்தைச் 'சிறிய தீப்பொறி' என்று கொள்ளலாம். சிறிய தீப்பொறியைக் கொண்டு தான் பெரிய தீப்பிழம்பை உருவாக்க முடியும். அதுபோல சீவகாருண்யமாகிய சிறிய தீப்பொறியைக் கொண்டுதான், இறைவன் அருளாகிய பெரிய தீப்பிழம்பை உருவாக்க முடியும். முன்னது காரணம்; பின்னது காரியம். ஆன்மாவின் இயற்கை விளக்கமாகிய சீவகாருண்யத்தைக் கொண்டுதான், இறைவனின் இயற்கை விளக்கமாகிய அருளைப் பெறமுடியும்என்பது வள்ளலாரின் கொள்கை ஆகும்.

இறைவன் அருளைப் பெறுவதற்குச் சீவகாருண்யம் தவிர்த்த பிற செயல்கள் அனைத்தும் புறக்கணிக்கப்படுகின்றன. "சீவகாருண்ய ஒழுக்கமில்லாமல் ஞானம், யோகம், தவம், ஜெபம் முதலியவைகளைச் செய்கின்றவர்கள், கடவுள் அருளுக்குச் சிறிதும் பாத்திரமாகார்கள்.

அவர்களை ஆன்ம விளக்கம் உள்ளவர்களாகவும் நினைக்கப்படாது. சீவகாருண்யம் இல்லாது செய்யப்படுகின்ற செயல்கள் எல்லாம் பிரயோசனம் இல்லாத மாயாசாலச் செயல்களேயாகும் என்று அறிய வேண்டும்." [3]

என்ற வள்ளலாரின் கூற்று, இதனை வலியுறுத்தி நிற்கிறது.

சீவகாருண்யத்தை உண்மையான வழியாகக் கொண்டதால், பிறவற்றைப் புறக்கணிக்கும் குறிப்பு காணப்படுகிறது. இங்கு ஞானம், யோகம்,தவம், ஜெபம், போன்றவற்றை இகழ்தல் வள்ளலாரின் நோக்கம் அன்று. அவை மனித வாழ்வில் உயிர் இரக்கத்தோடு தொடர்பு இல்லாமல் தனித்து நிற்கின்றன என்பதைச் சுட்டிக் காட்டுவதுதான் அவரது நோக்கம். உயிர் இரக்கத்தோடு தொடர்பற்றது எதுவாக இருந்தாலும்- அது இறை வழிபாட்டோடு தொடர்புடையதாக இருந்தாலும் அதனால் பயன் இல்லை என்பது அவரது கருத்து. உயிர்களிடத்து இரக்கம் தவிரப் பிறவற்றில் நம்பிக்கை ஏற்படக் கூடாது என்ற நோக்கில் இக்கருத்தினை வள்ளலார் வலியுறுத்தி இருக்கலாம்.

உயிர்களிடத்து தயவும், இறைவனிடத்து அன்பும் கொண்டு விளங்குதல், இறைவன் அருளைப் பெறுதற்குரிய உண்மைச் சாதனம் என்பது அவர் கொண்ட முடிவு.

> "சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய சாதனம் என்னவென்றால், எல்லா ஜீவர்களிடத்துத் தயவும், ஆண்டவரிடத்து அன்புமே முக்கியமானவை. சாதனங்கள் ஒன்றும் வேண்டாம். ஆதலால் காலம் தாழ்த்தாது எல்லா உயிரையும் தன் உயிரைப் போல பார்க்கும் உணர்வை வருவித்துக் கொள்ளுதல் வேண்டும். இதுவே சாதனம்." [4]

என்ற வள்ளலாரின் கூற்று இதனை உறுதிப்படுத்துகிறது.

## வழிபாட்டு முறையில் வளர்ச்சி நிலை :

வள்ளலார் தொடக்க காலத்தில் மேற்கொண்டது திருக்கோயில் வழிபாடு. கால வளர்ச்சியில் மேற்கொண்டது சீவகாருண்ய வழிபாடு. இவை இரண்டும் ஒன்றோடுஒன்று முரண்படுபவை அல்ல. முதல்நிலை- புறவழிபாடு, இரண்டாம் நிலை - அக வழிபாடு. பொறிபுலன்களையும்,

அலைபாயும் மனத்தையும் இறைநெறியில் ஈடுபடுத்துவது புறவழிபாட்டின் நோக்கம். அனைத்துயிர்களிடத்தும் அன்பு காட்டுவது அகவழிபாட்டின் நோக்கம். புறவழிபாட்டின் சரியை, கிரியை முதலிய சாதனங்கள் தேவைப்படலாம். அகவழிபாட்டில் சாதனங்கள் எதுவும் தேவை இல்லை. உயிர்ப்பணி ஒன்றுதான் உண்மைச் சாதனம். ஆதலின் முன்னதின் வளர்ச்சி நிலையாகப் பின்னதைக்கொள்ளலாம்.

திருக்கோயில் வழிபாடு, அலைபாயும் மனத்தைப் பக்குவப்படுத்தக் கூறப்பட்டது. சீவகாருண்ய வழிபாடு, பக்குவப்பட்ட மனம் பயன்படுவதற்குக் கூறப்பட்டது. பக்குவப்பட்ட மனம் பயன்படுவதற்கு வள்ளலார் காட்டிய வழி சீவகாருண்யம்.

தொடக்க காலத்தில் வள்ளலாரின் வழிபாட்டு முறைகள், சரியை கிரியை முதலிய சடங்கு அளவில் நின்றன. அவை உயிர்களுக்குப் பணி செய்யும் தொண்டாகப் பின்னர் மாற்றம் பெற்றன.

வள்ளலாரின் தொடக்க காலப் பாடல்கள் சரியை கிரியை முதலிய சாதனங்களை விளக்கி நிற்பினும், கால வளர்ச்சியில் அச்சாதனங்களில் அவருக்கு ஈடுபாடு இல்லாத தன்மையைப் புலப்படுத்தி நிற்பதை அறிய முடிகிறது.

*"சரியை ஓர் நான்கும் கிரியை ஓர் நான்கும்*
*சாற்றிடும் யோக மோர் நான்கும்*
*புரியவும் பதங்கள் பொருந்தவும் எனது*
*புந்தியில் ஆசைசற் றறியேன்*
*பெரியதோர் ஞானம் நான்கிலும் ஆசை*
*பெற்றிலேன்."* [5]

என்ற பாடல் சரியை கிரியை முதலிய சாதனங்களில் வள்ளலாருக்கு விருப்பம் இல்லாத தன்மையை விளக்கி நிற்கிறது. ஒன்றன் நாட்டத்தால் பிறிதொன்றன்பால் உள்ள நாட்டம் தணிவது இயற்கை. இறைவன் அருளைப் பெறுவதற்குச் சீவகாருண்யத்தை வழிபாடாகக் கொண்டதன் விளைவால், பிற புறச் சாதனங்கள் தேவையற்றனவாகத் தோன்றி இருக்கலாம். சரியை முதலிய புறவழிபாட்டுச் சாதனங்களில் உள்ள ஈடுபாடு இயல்பாகத் தணிந்தமைக்கு இது காரணம் ஆகலாம்.

வழிபாட்டுப் பொருள் பூ, திருமஞ்சனம் போன்ற பொருள்களாகத் தொடக்கத்தில் விளங்கின. அவை உயிர் இரக்கப் பண்பாகப் பின்னர் மாற்றம் பெற்றன.

வழிபாட்டிடமாகத் திருக்கோயில் முன்னர் கருதப்பட்டது. அது கால வளர்ச்சியில் நடமாடும் கோயில்களாக உலக உயிர்கள், வழிபாட்டு இடமாகக் கருதப்பட்டது. இவை வள்ளலார் பாடல்களில் கால வளர்ச்சியில் ஏற்பட்ட மாற்றங்கள் ஆகும். வழிபாட்டு முறையில் வள்ளலாரிடம் காணப்படும் பரிணாம வளர்ச்சி (Evolution) இது எனக் கொள்ளலாம்.

| | | | |
|---|---|---|---|
| வழிபாட்டு முறை | : சடங்கு | → | உயிர்ப்பணி |
| வழிபாட்டுப் பொருள் | : பூசைப்பொருள் | → | இரக்கப் பண்பு |
| வழிபாட்டு இடம் | : திருக்கோயில் | → | உயிர்கள் |

தொடக்க காலத்தில் திருக்கோயிலை இடமாகக் கொண்டு இறைவன் விளங்குகின்றான் எனக் கருதிய வள்ளலார். கால வளர்ச்சியில் உலக உயிர்களின் உள்ளமே சபையாகக் கொண்டு திருநடனம் புரிகின்றான் எனக் கருதினார். அவர் கொண்ட இக்கருத்து வளர்ச்சி இம்மாற்றங்கள் அனைத்திற்கும் காரணம் ஆகலாம்.

*"சபை எனது உளம்எனத் தான் அமர்ந்து எனக்கே*
*அபயம் அளித்ததோர் அருட்பெருஞ்சோதி"*[6]

*"உயிர் எலாம் ஒரு நீ திருநடம் புரியும்*
*ஒருதிருப் பொது என அறிந்தேன்."*[7]

என்பன வள்ளலார் உணர்ந்தவை.

*"உயிருள்யாம் எம்முள் உயிர் இவை உணர்ந்தே*
*உயிர் நலம் பரவுக என்று உரைத்த மெய்ச் சிவமே"*[8]

இது வள்ளலாருக்கு இறைவன் உணர்த்தியது. வள்ளலாரின் இவ்வனுபவங்கள் உயிர்களின் உள்ளமே இறைவன் வாழும் இடம் என்பதைத் தெளிவுபடுத்தி நிற்கின்றமையைக் காண முடிகிறது. எவ்வுயிரையும் தம உயிர் எனக் கொள்ளும் ஆன்ம நேய ஒருமைப் பாட்டுணர்வு உடையவர்களின் உள்ளமே இறைவன் உறையும் இடம் என்ற உணர்வு ஏற்படுவது இச்சூழல்தான்.

*"எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்*
*தம்உயிர்போல் எண்ணி உள்ளே*
*ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்*
*யாவர் அவர் உளம்தான் சுத்த*
*சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும் இடம்"*[9]

என்று இதனை வள்ளலார் விளக்கி நிற்பர்.

நடமாடும் கோயிலாக விளங்கும் உயிர்களுக்குப் பணிபுரியாமல், இறைவனை மட்டும் வழிபடுவதால் எந்தப் பயனும் கிடையாது, உயிர்களுக்குச் செய்யும் பணியே இறைவனுக்குச் செய்யும் உண்மையான வழிபாடு என்ற கருத்தை வலியுறுத்துகிறது திருமந்திரம்.

*"படமாடுங் கோயில் பகவற்கொன் றீயில்*
*நடமாடுங் கோயில் நம்பர்க்கங் காகா*
*நடமாடுங் கோயில் நம்பர்க்கொன் றீயில்*
*படமாடுங் கோயில் பகவற்க தாமே"*[10]

இக்கருத்தின் தாக்கம், வள்ளலாரின் வழிபாட்டு முறையில் மாற்றம் ஏற்படுவதற்கு உந்தூக்கமாக (Inspiration) அமைந்து இருக்கலாம்.

**இவற்றால் அறியலாகும் உண்மைகள் வருமாறு.**

1. வள்ளலாரின் பாடல்கள் இருவகைச் சிந்தனைகளை உள்ளடக்கியதாக விளங்குகின்றன. 1. இறைச் சிந்தனை 2. இரக்கச் சிந்தனை.

2. இரக்கச் சிந்தனையை வலியுறுத்த வள்ளலார் மேற்கொள்ளும் வழிமுறைகள் இரண்டு. 1. புலால் மறுத்தல் 2. பசி தவிர்த்தல்

3. சீவகாருண்யத்தால்தான் சிவகாருண்யத்தைப் பெற முடியும் என்பது அவரது கொள்கை.

4. புறவழிபாட்டுச் சாதனங்கள் உண்மைப் பயன் அளிக்கா என அவர் கருதுவதற்குச் சீவகாருண்யத்தின் மீது அவர் கொண்டுள்ள நம்பிக்கை காரணமாகலாம்.

5. வழிபாட்டுச் சடங்குகள் உயிர்ப்பணியாகப் பரிணமித்தல், வழிபாட்டுப் பொருட்கள் இரக்க உணர்வாக உருப்பெறுதல், வழிபாட்டு இடமாக உலக உயிர்களைக் கருதுதல், என்பன வள்ளலாரின் வழிபாட்டு முறைகளில் காணப்படும் பரிணாம வளர்ச்சி நிலைகள் எனலாம்.

6. எத்துணையும் பேதமுறாது, எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணும் ஆன்ம நேய ஒருமைப்பாடு உடைய ஓர் உலக அமைப்பு காண்பதே வள்ளலாரின் முடிநிலைக் குறிக்கோள் ஆகும்.

7. இறைச்சிந்தனையும், இரக்கச் சிந்தனையும் இணைந்து விளங்கும் பொழுது, உயிர்களுக்குச் செய்யும் பணியே உண்மையான இறைவழிபாடு ஆகும். இதுவே வள்ளலாரின் உயிர் இரக்கக் கோட்பாடு ஆகும்.

**குறிப்புகள் :**

1. திரு அருட்பா பா. 4160
2. திரு அருட்பா உரைநடைப்பகுதி ஊரன் அடிகள் பதிப்பு ப.51-52
3. மேலது ப. 71
4. மேலது ப. 312
5. திரு அருட்பா பா. 3399
6. சுப. அண்ணாமலை, கலந்துரையாடல் 4-4-2000
7. திரு அருட்பா பா. 4615, வரி 1555-1556, பா. 5426
8. மேலது 4615, வரி 973 - 974
9. மேலது 5297
10. திருமந்திரம் பா. 1836

# இரட்சண்ய யாத்திரிகத்தில் எதிர் நிலை மாந்தர்கள்

க. ஜோஸ்பின் மேரி

கிருஷ்ணப் பிள்ளை இரட்சண்ய யாத்திரிகம் எனும் காப்பியத்தைப் படைத்துள்ளார். இக்காப்பியம் ஆன்ம விடுதலை பற்றிப் பாடுவதால் இதனை வீ. ஞான சிகாமணி என்பார் ஆன்ம மீட்பின் திருப்பயணக் காப்பியம் என்கிறார். இரட்சண்யம் அல்லது இரட்சிப்பு என்று கிருஷ்ணப் பிள்ளை குறிக்கும் சொல் வாழ்க்கையில் இறையருளால் கிட்டும் மாறுதலைச் சுட்டுகிறது எனப் பேராயர் சாலமோன் துரைச்சாமி அவர்கள் குறிப்பிடுவார். இந்த இரட்சிப்பு என்பது நொடிப் பொழுதில் பெறப்படுவது அன்று. அது வாழ்நாள் முழுவதிலும் படிப்படியாக உணர்ந்து கொள்ளப் படுகின்ற ஒன்றாகும். ஆதலால் கவிஞர் தம் காப்பியத்தில் கற்பனையாக அல்லாது நாம் வாழ்க்கையில் காண்கின்ற உண்மை மாந்தர்களுக்கு நிகரான கதை மாந்தர்களைப் படைத்துள்ளார். காப்பியத்தின் முக்கியக் கூறுகளுள் இக் கதை மாந்தர் படைப்பும் ஒன்றாகும். காப்பியத்தில் இம்மாந்தர்கள் தோன்றும் முறையும் செயல்படும் முறையுமே பாத்திரப் படைப்பு முறையாகும்.

காப்பியக் குறிக்கோளைக் காப்பியத் தொடக்கம் முதல் இறுதிவரை இயக்கிச் சிறப்பிக்கும் கதை மாந்தனைத் தலைமை மாந்தன் எனலாம். காப்பியக் குறிக்கோளுக்கு மாறான சிந்தனை உடையவர்களாகக் காப்பியத் தலைவனின் செயல்பாட்டிற்கு ஊறு விளைவிக்கின்ற மாந்தர்களை எதிர் நிலை மாந்தர்கள் என இக்கட்டுரை சுட்டுகிறது.

தலைமை மாந்தரின் ஆற்றலை விளக்கவும் அதே நேரத்தில் உண்மைத் தன்மையை நிலை நாட்டவும் காப்பியங்களில் எதிர் நிலை மாந்தர்களைக் கவிஞர்கள் படைக்கின்றனர். அந்த வகையில் காப்பியத் தலைவனாம் கிறித்தவனின் அன்பு, பொறுமை, நம்பிக்கை இவற்றை விளக்கவும், ஆன்ம மீட்பினை நிலை நாட்டவும் கவிஞர் பல கதை மாந்தர்களைப் படைத்துள்ளார். கிறித்தவனின் மீட்புப் பயணம் முன்னோக்கிச் செல்ல இயலா வகையில் தடுத்தும், திசை திருப்பியும், துன்புறுத்தியும் மயக்கியும் தடுக்கின்ற கதைமாந்தர்களை எதிர் நிலை மாந்தர்கள் எனலாம்.

## எதிர்நிலை மாந்தர்கள்

கிறித்தவனின் ஆன்மப் பயணத்திற்குத் தடைஏற்படும் வகையில் துன்பத்தைத் தோற்றுவிக்கும் கதை மாந்தர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் அழிம்பன், இலௌகீகன், விடாதகண்டன், கார்வண்ணன், ஆகியோர் ஆவர். இவர்கள் ஒவ்வொருவருக்கும் முறையே அழிம்பன் தோல்விப்படலம், இலௌகீகப்படலம், விடாதகண்டப்படலம், கார்வண்ணப்படலம் எனத் தனிப்படலம் அமைக்கிறார் கவிஞர். இங்ஙனம் தனிப்படலம் அமைப்பதன் நோக்கம் யாது? இம் மாந்தர்கள் காப்பியக் கதை ஓட்டத்திற்கு எவ்வாறு துணை செய்கின்றனர்? என்பதனை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### அழிம்பன்

எபிரேய மொழியில் சாத்தான், அபெத்தோன் என்று அழைக்கப்படுகிறான். கிரேக்க மொழியில் அவன் அப்பொல்லியோன் என்றும். தமிழில் அழிம்பன் என்றும், அழைக்கப்படுகிறான். மூல நூலார் இவனை அப்பொல்லியன் என்றே குறிப்பிடுகின்றார்.

காப்பியத்தில் அவநம்பிக்கை படலத்தில் சகாயன் என்பவன் அவநம்பிக்கை எனும் உலையைத் தோண்டி ஆன்மீகப் பயணிகளுக்குத் துன்பத்தைத் தோற்றுவிப்பவன் என்று இவனைப் பற்றிக் குறிப்பிடுகிறான்.

மீட்பு நெறியில் செல்லும் கிறித்தவன் தாழ்மை எனும் பள்ளத்தாக்கைக் கடந்து செல்லும் போது அழிம்பனைச் சந்திக்கிறான். இவனது தோற்றத்தை ஆசிரியர்

*"நஞ்சமும் அவித்தையும் இருளும் நாசமும்*
*வஞ்சமும் கொடுமையும் மறமும் தீமையும்*
*செஞ்சவே திரண்டு உருத்தெரிய நின்றிடும்*
*அஞ்சனக் கரு நிறத்து அவுண யாக்கையன்"*[1]

எனக் கூறுவார். மேலும்

*"பேயும் அஞ்சுறு பெரும்பேய் முகத்தினன்*
*காயெரி பங்கியன் கடுத்துறுங்கொடு*
*வாயினன் வக்கிர தந்தன் வன்கணன்*
*தீயெழு புகையென உயிர்க்கும் தீயவன்"*[2]

எனவும் அழிம்பனது புறத்தோற்றம் சுட்டப்படுகிறது.

இவன் பாவத்தை மணந்தவன். பழியைப் பெற்றவன், சாபத்தைப் படைத்தவன் தரும நாயகன் கோபத்தை அடைந்தவன், குவலயத்தினுக்கு ஆபத்தை விளைவிப்பவன் அறத்தைத் தின்பவன் உய்யும் நெறி வருவோரை மயக்கிச் சிறையிடைப்படுத்தும் வஞ்சகன், கிறிஸ்த்துவின் அடியார் யாவருக்கும் நாசகண்டகன் என இவனது கொடுஞ் செயல்களால் அகத்தோற்றம் சுட்டப்படுகிறது.

ஆன்மீகப் பயணியாகிய கிறித்தவன் முன் இவ்வழிம்பன் தோன்றி, 'நீ எங்குச் செல்கிறாய்? யார் நீ?' எனக் கேட்கிறான். அதற்குக் கிறித்தவன் தான் நாசதேசத்தவன் என்றும் முத்தி நகர் நோக்கிப் பயணம் செய்வதாகவும் கூற உடனே அழிம்பன் நாசதேசம் தன்னுடையது என்றும் அதனால் கிறித்தவன் தனக்கே அடிமையாக இருக்க வேண்டும் என்றும் இல்லையெனில் கொன்று உயிர் குடிப்பேன் என்றும் அச்சுறுத்துகின்றான்.

கிறித்தவன், 'முத்தி இன்பம் தரும் வள்ளலாருக்கே ஊழியம் செய்து பிழைக்க ஒருப்பட்டேன், ஆதலால் எப்பெரும் இடர் எனக்கு இறுதி சூழினும் தப்பும் மார்க்கத்து அடிசறுக்கி வீழ்கிலேன்' என்று உறுதியாகக் கூற இவ்வழிம்பன் 'முத்தி இன்பம் என்பதெல்லாம் பொய்' என்கிறான். 'நீ செல்லும் மெய் வழியில் துன்பத்தைத் தவிர வேறெதைக் கண்டாய்?' என வினவுகிறான். 'செத்த பிறகு என்ன ஆவோம் என்று ஏன் வீணாகக் கவலை கொள்கிறாய். நீ புகழ்ச்சியை நாடியே பயணம் செய்கிறாய் போலும்' எனக் கூறி இகழ்கின்றான்.

'தன்னிடம் தஞ்சம் அடைந்தவர் தம் துன்பத்தைப் போக்கிச் சாகும் வரை மகிழ்ச்சியாக வாழவைப்பதுவும், எல்லா வகையான இன்பங்களையும் வேண்டுமட்டும் கொடுப்பதுவும் தனது அரசியல் முறை' என அழிம்பன் கூறுகின்றான். கிறித்தவன் நாசதேசம் திரும்பிச் சென்றால் ஆயுள் எல்லாம் அற்புதமான இன்பத்தைத் தருவதாகவும் ஆசை காட்டுகின்றான்.

அழிம்பனது அச்சுறுத்தல், அரசியல் முறை, ஆசைமொழி, ஆகியன கிறித்தவனின் இறைநம்பிக்கை உறுதியில் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை. ஆதலால் அவன் அழிம்பனை நோக்கி,

*"மாயமுறும் இன்பநலம் வாழ்வு சுகமாதி*
*ஆயவை தரத்துணிதி, அம்ம, அழகிற்றால்*
*மேய மனைதொறும் ஏறிமிச்சில் விழை நாய்கொல்*
*சீயமுடி பெற்றரசு செய்யும் வகை செய்யும்"*[3]

என இகழ்ந்து உரைக்கின்றான். அதனால் இருவருக்குமிடையே கடும் போர் நடைபெறுகிறது. கிறித்தவன் இறை நம்பிக்கை எனும் கேடயம் தாங்கிப் பொறி வாயில் அடைத்து நின்று ஆத்திகப் படை செலுத்தி அழிம்பனை அழிக்கின்றான்.

"கடவுளுக்குப் பணிந்து வாழுங்கள் அலகையை எதிர்த்து நில்லுங்கள். அப்பொழுது அது உங்களிடமிருந்து ஓடிப் போகும்."[4] எனும் மறைமொழியின் படி கிறித்தவன் அலகையாகிய அழிம்பனை எதிர்த்து அழிக்கின்றான்.

நம்பினோரை இறைவன் என்றும் கைவிடுவதில்லை. சோதனைகளைக் கண்டு விலகுதலோ, அதனின்று தப்பித்துச் செல்வதுவோ இறை நம்பிக்கை வாழ்க்கையாகாது. கிறித்தவ வாழ்க்கை என்பது சோதனைகளை எதிர் கொண்டு அதனை இறையருளால் வெற்றி பெறுவது ஆகும். கடவுளை நம்பும் அடியார்களுக்கு நிலவுலகில் துன்பம் மிகுந்து காணப்படும் ஆயினும் மறுமையில் நிலைத்த இன்பம் கிட்டும். ஆபிரகாம், தானியேல், சாத்ராக் மேஷாக் ஆகியோர் இறையருளால் சோதனைகளை வென்று மறுமையில் பேரின்பம் அடைந்தனர். ஆதலால் இறைநம்பிக்கை வாழ்வு சோதிக்கப்படும். ஆனால் இறைவன் நம்பினோரைக் கைவிடுவதில்லை என்பதனை விளக்க இக்கதை மாந்தன் படைக்கப்பட்டுள்ளான்.

சுடச் சுடப் பொன் ஒளிர்வது போல சோதனைகளை எதிர்கொள்ள மனம் பக்குவப்படுகிறது. கிறித்தவன் தான் பெற்ற அனுபவங்கள் காரணமாக இறைநம்பிக்கையில் வலுப் பெற்றான் என்பதனை விளக்க இக்கதை மாந்தன் துணை புரிகின்றான்.

மோட்சம் (முத்தி) நரகம் குறித்த நம்பிக்கை உடையவர்கள் கிறித்தவர்கள். மோட்சத்திற்குப் பிதாவும் நரகத்திற்கு அழிம்பனும் அதிபதியாய் இருக்கிறார்கள், இறைமகனாம் இயேசுவையே சோதித்து அறிய முயன்றவன் இச் சாத்தான். இவன் மானிடர்களை விட்டு வைப்பதில்லை. அவர்களுக்குப் பேரின்ப வீடு இல்லையாகும் படிச் செய்து அவர்களைத் தன்னுடன் இணைத்துக் கொள்ள முயலுபவன், இவன் மனிதரிடம் காணப்படும் இறைபக்தி எனும் பெருநெருப்பை நீருற்றி அணைக்க முயலுபவன். அப்போது திருவருள் என்னும் எண்ணெய் பெய்து அடியவர்களை இறைவன் காக்கின்றான். இறை

நம்பிக்கை உள்ளவர்கள் இறையருளால் சாத்தானை வெல்வர் என்பதனை விளக்க ஆசிரியர் அழிம்பன் தோல்விப் படலம் என்ற தனியொரு படலத்தைப் படைக்கின்றார்.

## இலௌகீகன்

இலௌகீகம் என்பதற்கு உலக சம்பந்தமானது என்பது பொருளாகும்.

அவநம்பிக்கை எனும் நிலையிலிருந்து மீண்ட கிறித்தவன் மீட்பு வழியின் வாயிலை நோக்கிச் சென்று கொண்டு இருக்கின்றான். அவனைச் சந்தித்து உரையாடுவதாக இலௌகீகன் அறிமுகமாகிறான். மூல நூலார் இவனை லோக ஞானி என்று அழைக்கின்றார்.

இவன் இச்சாபுரம் எனும் ஊரில் வாழ்பவன். நல்ல வழியைக் கடைப்பிடித்துச் செல்லுவோருக்குப் பொல்லாத ஆலோசனைகளைச் சொல்லி அவர்களைத் திசைதிருப்புகின்ற தந்திரத்தையே தன் தொழிலாகக் கொண்டவன். மெய்யடியார்களைப் போல காலையும் மாலையும் இறைவனை வழிபடுகின்ற வஞ்சகன். இவ்வுலகத்துக் கிடைக்கின்ற புகழே அல்லாமல் வேறு உயர்ந்த நோக்கம் எதுவும் இல்லாதவன்.

இலௌகீகன் பாவம் குறித்த நம்பிக்கையற்றவன் அதனால் அவன் கிறித்தவனை நோக்கிப் பாவச்சுமை குற்றமுள்ளது. ஆதலால் அது என்னை வருத்துகிறது அதனைத் தாங்கிக் கொள்ள முடியாமல் துன்புறுகிறேன் என்று கூறுவாய் ஆனால் அது

> *"கோட்டால் முயல் கீண்டது மேனி குளித்த காயப்பாட்டால்*
> *இனைவுற்றனன் என்று பணித்தல் போலாம்"* [5]

என்கிறான்.

மீட்பு நெறி துன்பங்கள் நிறைந்து அந்நெறிச் செல்வோரை மயங்குமாறு செய்யும் எனக் கூறி கிறித்தவனை அச்சுறுத்துகிறான்.

இலௌகீகன் கிறுத்தவனுக்காக வருந்துபவன் போல நடித்து அவனுக்கு உதவ முன் வந்து தவறான நெறியைக் காட்டுகிறான். தருமாபுரி என்ற ஊரில் வாழும் அறக்கிழவோன் என்பானிடம் சென்றால் அவன்

தன் சொல் மாண்பில் நின் சுமை ஒல்லை நன்றே தொலைப்பன் என்று கூறி ஆற்றுப்படுத்துகின்றான். வாயில் காவலன் இலௌகீகனைப் பற்றிக் கூறும்போது 'அவன் முத்தி வழியை விரும்பாமல் உலக இன்பத்தையே விரும்பும் எச்சில் நாய் போன்றவன்' என்று கடிந்து கூறும் கூற்று இங்கு நினைவு கூரத்தக்கது.

கிறித்தவன் இலௌகீகன் கூறிய தீய உரையினை நல்லன என்று மயங்கி நல்லறம் எனும் வழியை விட்டு நீங்குகிறான். ஆதலால் மண்ணையே நாடிச் செல்லும் வழியில் சென்று சீனாய் மலையின் முன் சென்றடைய அவனது பாவச் சுமை மும்மடங்காகப் பெருகியது. ·பாவம் பெருக, கிறித்தவன் தன் தவறு உணர்ந்து வருந்துகிறான் இங்கு சீனாய் மலை என்பது மோசே வழியாக இறைவன் பத்துக் கட்டளைகளைக் கொடுத்த இடமாக விளங்கப் பெறுவது, இம்மலை மனிதர்கள் பத்துக் கட்டளைகளைக் கடைப்பிடிப்பதாலோ, தாம் செய்யும் புண்ணியங்களாலோ இறைவனை அடைந்து விடலாம் என எண்ணும் நினைவைக் குறிக்கிறது. இந்த நினைவைத்தான் இலௌகீகன் கிறித்தவனுக்கு எழுப்பி வழி தவறச் செய்கிறான்.

வழி தவறிய கிறித்தவனைக் கடிந்துரைக்கும் நற்செய்தியாளர் சுய புண்ணித்தால் பாவம் தீராது என்பதனை விளக்குகின்றார். உலகத் தொடக்கத்திலேயே ஆதிமனிதன் ஆதாம் பாவம் செய்து வழி விலகினான். ஆகவே காக்கை பன்முறை நீரில் மூழ்கினும் பொன்னிறத்தைப் பெற முடியாதது போல மனிதர்கள் சுய முயற்சியால் நன்னெறியில் ஒழுகினாலும் தூய்மையானவராக பாவமற்றவராக ஆக முடியாது என்று கூறுவது மேற்கூறியதை அரண் செய்யும்.

அகத்தே உயர்ந்த குறிக்கோள் இல்லாது தன் உள்ளம் விரும்புவதையே நாடி அதிலே வாழ்ந்து புறத்தே இறைவனுக்குத் தொண்டு புரிவது போலக் காட்டிக் கொள்ளும் மானிடர்களைக் குறிக்க இக்கதை மாந்தன் படைக்கப்பட்டுள்ளான்.

தன் பாவச் சுமையைச் சுமக்கும் மனவலிமை இல்லாத கிறித்தவனின் உறுதியற்ற நம்பிக்கையை அறிந்து கொள்ள இக்கதை மாந்தன் துணை செய்கிறான்.

இறைவனின் திருவருளைப் பெற்றுத் தப்பிப் பிழைக்கும் வழியினின்று மனிதர் விலகுகின்றனர். அறிவு மயக்கம் கொண்டு

இலௌகீகம் எனும் உலக மார்க்கத்தில் சிக்குண்டு பேரின்ப நிலையை இழக்கின்றனர் என்பதனை வலியுறுத்தவே கிருஷ்ணப் பிள்ளை இலௌகீகப்படலம் படைத்துள்ளார்.

### விடாத கண்டன்

மீட்பு நெறிப்பயணிகளை வதைத்துத் துன்புறுத்தும் கொடியவன். கிறித்தவன் தன் நண்பனாம் நம்பிக்கையுடன் மீட்பு நெறியில் முன்னேறிச் செல்கின்றான். மீட்பு நெறியிடையே காணப்பட்ட கிளை வழியில் புகுந்து பாதி தூரத்தைக் கடந்ததும் இறையருளால் தெளிவு பெற்றுப் பயணிகள் இருவரும் மீண்டும் நேர்வழி நோக்கித் திரும்புகின்றனர். திரும்பும் பயணிகள் சோர்வு காரணமாக வழியிடைக் கண்ட குகையினுள் சென்று துயில் கொள்கின்றனர். அக்குகையின் பக்கத்தே உள்ள சந்தேகத் துருக்கம் என்ற பெயரை உடைய இடத்தில் இராக்கதன் ஒருவன் வாழ்ந்து கொண்டிருந்தான். அவன் பெயர் விடாத கண்டன் என்பது என இவன் அறிமுகப்படுத்தப்படுகிறான்.

விடாத கண்டன் முத்தி நெறியினின்றும் தப்பி வந்தவிடக் கூடிய மீட்பு நெறிப் பயணிகளைத் தடுத்துச் சிறையிலிட்டுத் துன்புறுத்தி அவர்கள் உயிரைத் தன் மனைவி ஆசங்கைக்கு உணவாக ஊட்டுபவன்.

விடாத கண்டன் தூங்கிக் கொண்டிருக்கும் அடியார்களைக் கண்டு அவர்கள் முத்தி வழியைக் கடைப்பிடித்த தூயர்கள் என்பதை உய்த்துணர்ந்து சினமுற்றுப் பயணிகளை நோக்கி "இனி உங்களுக்கு விடுதலை இல்லை. ஆதலால் உங்கள் உயிரை நீங்களாகவே போக்கிக் கொண்டால் ஒரு துன்பமும் ஏற்படாது" என்கிறான். "கொலை செய்யாதிருப்பாயாக" எனும் மறைமொழியை மீறுமாறு அவர்களை அச்சுறுத்துகிறான். பயணிகள் இறையருளால் தப்பிச் செல்ல அவர்களைப் பின்தொடர்ந்த விடாத கண்டன் எல்லையற்ற அகந்தை உள்ளத்து எழ அதனால் விழுந்து அழிந்தான் எனக் காப்பியம் சுட்டுகிறது.

மெய்வழி விட்டு விலகுதல் கொடியது எனினும் எளியது மீண்டும் மெய்வழி பற்றுதல் என்பது மிகவும் கடினமானது என்பதனை உணர்த்த இக்கதை மாந்தன் படைக்கப்பட்டுள்ளான்.

பிறர் அழியக் காரணமானவர்களும் அழிந்து போவார்கள் என்பதற்கு விடாதகண்டன் சான்று.

ஆன்ம வாழ்வில் சோர்வுறுதல் கூடாது. சோர்வுற்று அயர்வார்களே ஆனால் கேடு வந்து சேரும். ஏனெனில் "உறக்கமே யிகபர நன்மைக்கு உட்பகையாகும். உறக்கமே சுயமுயற்சியை ஒழுங்கறத் துடைக்கும், உறக்கமே பகைக்கு ஒரு துணையாய் உயிர் ஒழிக்கும்"[6] என்பதனை விளக்க இக்கதை மாந்தன் துணை புரிகின்றான்.

துன்பம் மிகும் போது இறைவனைச் சிந்தித்து கிறித்தவன் தேவாரப் பாடல்களைப் பாடி இறையருளால் சிறையினின்று மீளுகின்றான் இறையருளை உணர இறைவனிடம் ஒன்றித்து மகிழத் துன்பமும் காரணமாகின்றது என்பதனை விடாத கண்டப் படலம் உணர்த்துகிறது.

**கார்வண்ணன்**

இவனை மூல நூலார் முகஸ்துதி என்று குறிப்பிடுகிறார். இவன் நஞ்சு கலந்த பாலுணவைப் போல வஞ்சகத்தையே மிகுதியாகக் கலந்து நயமாகப் பேசும் சொல் சாதுரியன். தன் நெஞ்சினைப் போலவே இருண்டிருந்த உடம்பை மறைத்துக் கொள்வதற்கு ஒளி விளங்கும் உடையால் தன்னைப் போர்த்துக் கொண்டிருந்த கள்வனாகிய கார்வண்ணனை ஆசிரியர்

*"கோலிய பேயோ காரிருளேயோ கொதி கொள்ளும்*
*ஆலமதேயோ பாதகமோ தீயவை யெல்லாம்*
*சால விருந்தை போலுரு வாய்ந்தோர் தநுவாக*
*ஞாலம் இசைக்குங் கார்வணன் என்பான் நவையுள்ளான்"*[4]

என்று அறிமுகப்படுத்துகிறார்.

மீட்பு நெறிச் செல்லும் பயணிகள் மீட்பு வழி இரண்டு கிளைகளாகப் பிரிந்து சென்ற நிலையினைப் பார்த்துத் திகைத்திட்ட சமயத்தில் கார்வண்ணன் அவர்களிடம் சென்று தானும் சீயோன் நகருக்குச் செல்வதாகக் கூறித் தன்னுடன் வருமாறு அழைத்துச் சென்று உலக மாயம் எனப்படும் வலைக்குள் வீழ்த்தித்தன் உண்மை உருவை வெளிப்படுத்துகிறான்.

மீட்புப் பயணிகள் தம் அறியாமையை உணர்ந்து கொள்ள இறையருளை அறிந்து கொள்ள இக்கதை மாந்தன் துணை செய்கிறான்.

அழியும் நிலவுலகத்தைச் சிந்தித்து அழியாத பேரின்பத்தை இழந்து விடக்கூடாது என்பதனை வலியுறுத்த கார்வண்ணப்படலம் உதவுகிறது.

## நிறைவுரை

இறைவனின் அடியார்களுக்குத் துன்பத்தை ஏற்படுத்தும் சாத்தானை இறைநம்பிக்கையால் பெறும் இறையருள் கொண்டே வெற்றி பெற இயலும்.

உலக மாயம் எனும் வலையில் சிக்காது மீட்பு நெறியில் அடிபிசகாது செல்லுதல் வேண்டும். இல்லையெனில் மீளாத நரகக் குழியில் வீழ்ந்து அழிய நேரிடும்.

உண்மையைக் கண்டுணரா அறிவீனமானது மெய்யறிவை மாய்த்துவிட எல்லா நன்மைகளும் பறிபோய்விடும். ஆதலால் மீட்பு நெறிப் பயணிகள் அறிவீனத்தை அழித்து மெய்யறிவைத் துணைக் கொள்ள வேண்டும்.

மீட்பு நெறிப் பயணிகள் தம் பயணத்திடையே எதிர் கொள்ளும் சோதனைகளை இறைநம்பிக்கையில் நிலைத்து நின்று வெற்றி பெற வேண்டும். இவ்வெற்றி மீட்புப் பயணிகள் தம் குறிக்கோளில் வெற்றி பெறுவதற்கான படியாக அமையும்.

### குறிப்புகள் :

1. இரட்சண்ய யாத்திரிகம் - அழிம்பன் தோல்விப்படலம் - பா.எ. 4
2. இரட்சண்ய யாத்திரிகம் - அழிம்பன் தோல்விப்படலம் - பா.எ. 5
3. இரட்சண்ய யாத்திரிகம் - அழிம்பன் தோல்விப்படலம் - பா.எ. 42
4. விவிலியம் - யாக்கோபு - 4 : 7
5. இரட்சண்ய யாத்திரிகம் - இலௌகீகப்படலம் - பா.எ. 11
6. இரட்சண்ய யாத்திரிகம் - சோகபூமிப்படலம் - பா.எ. 10
7. இரட்சண்ய யாத்திரிகம் - கார்வண்ணப்படலம் - பா.எ. 3

# வைரமுத்து கவிதைகளில் தேசியம்

திருமதி. அசன் பாத்திமா

அடிமைப்பட்ட இந்தியச் சூழலில் புதிய தேசியப் பார்வையையும், சமூகப் பொறுப்புணர்ச்சியையும் ஏற்படுத்தியவர் பாரதியார். இவருக்குப்பின் புதுக் கவிஞர்கள் இப்பணியைத் தொடருகின்றனர். பாரதியார் இந்திய நாடு பாருக்குள்ளே நல்ல நாடாகத் திகழ வேண்டுமெனக் கனவு கண்டார். ஆனால் பாடுபட்டுத் தேடிப்பெற்ற சுதந்திர இந்தியா தன் இயல்பை இழந்து தேசம் என்றும் சொல்லை உடைத்து நிற்கிறது. அதனால் "புதுக்கவிதைகளில் சுதந்திர இந்திய நாட்டைப் புகழ்ந்து பாடுகிற போக்குக் காணப்படவில்லையென்றே கூற வேண்டும். மாறாகச் சுதந்திர இந்தியாவின் சீர்கேடுகளைப் பற்றி வருந்துகின்ற கோபப்படுகின்ற போக்கே பெரிதும் இடம் பெறுகின்றது." என்று "புதுக்கவிதையில் உள்ளடக்கம்" என்னும் நூலில் சுசீலா குறிப்பிடுகிறார். எனவே இன்றைய தேசத்தின் சீர்கேடுகளை விமர்சனம் செய்வதே இன்றைய தேசியமாகும். கவிஞர் வைரமுத்துவின் "திருத்தி எழுதிய தீர்ப்புகள்" "இன்னொரு தேசிய கீதம்" "கொடி மரத்தின் வேர்கள்" "இந்தப் பூக்கள் விற்பனைக்கல்ல" ஆகிய கவிதைத் தொகுப்புகள் மூலம் இக்கட்டுரையில் இன்றைய தேசியச் சூழல் எடுத்துரைக்கப்படுகின்றது.

### கருகிய தேசம்

படைப்பாளன் தான் வாழ்கின்ற காலச் சூழலால் தாக்கப்படுவதால் நெஞ்சு பொறுக்காது குமுறுகிறான். விடுதலை இந்தியாவின் கனவு நிறைவேறாததால் தேசம் கருகிவிட்டதாகக் கூறுகிறார் கவிஞர்.

*"நிகழ்காலத் தீயில்,*
*தேசம் கருகும் போது*
*நிச்சயமாக நாங்கள்*
*நீரோக்கள் அல்ல*
*பேனாக்கள் எமக்குப்*
*பிடில்களும் அல்ல."*

*(திருத்தி எழுதிய தீர்ப்புகள்)*

என்கிறார்.

"சமுதாயக் குழுக்கள் ஒன்றிணைந்த ஓர் அமைப்பே அரசியலாகும்" என்பார் சி. கனகசபாபதி. இன்று ஒன்றிணைந்த, மக்கள் நலம் பேணுகின்ற அரசியல் இல்லை. நாட்டைப் புரட்டும் நெம்புகோலாக உள்ளது. கவிஞர் வைரமுத்து நடப்பியல் கண்ணோட்டத்துடன் அரசியலை விமர்சனம் செய்கிறார்.

நாட்டை ஆள்வதில் பழைய தேசத்தலைவர்களின் தியாகம், நாட்டுப்பற்று ஆகியன குறைந்து

*"ஆட்சிகளின் அஸ்திவாரம்*
*கொள்கைகள் அல்ல*
*கோடிகள்"*

*(இந்தப் பூக்கள் விற்பனைக்கல்ல ப. 130)*

என்னும் நிலை ஏற்பட்டுள்ளது. அரசியலைத் திருமணமாகக் கூறுகிறார் கவிஞர். இத்திருமணத்தில் அரசியல்வாதிகள் போலி மாப்பிள்ளைகள், மலர்களில் வெடிகுண்டுகளைப் புதைக்கும் உத்தமர்கள், பயிர் அறுவடைக்குப் பதில் உயிர் அறுவடை செய்பவர்கள், கறுப்புத்துணியால் கண்கட்டிய நீதிதேவதையைக் கரன்சித் துணியால் கட்டும் வலிமையுடையவர்கள், நாட்டில் நிகழும் பெரும்பான்மை அழிவிற்கு இவர்களே பின்புலமாகின்றனர், இவர்களைப் பொசுக்கி எதிர்ப்பதற்குப் போகி நெருப்பே பொருத்தமானது என்கிறார்.

*"போகி நெருப்பே*
*போலிகளைப் பொசுக்கிவிடு"*

என்று ஆணையிடுகிறார். அரசியல்வாதிகளின் மனமாற்றத்திற்கு வழியும் சொல்கிறார்.

*"அரசியல்வாதிகளே*
*அன்பெனும் தீபம்*
*ஏந்தி வாருங்கள்"*

என்று அமைதிப் பாதையில் செல்ல அறிவுரை கூறுகிறார்.

**தேர்தல்**

கவிஞர் வைரமுத்து தேர்தலை ஆடுகளுக்கு வெட்டரிவாள் எடுக்கும் விழாக் காலமாகக் குறிப்பிடுகிறார். தேர்தல் காலத்தில் மக்கள் மகிழ்ச்சியுடன் விரலில் அடையாளப் புள்ளியிட்டு வாக்களிக்கின்றனர். அப்புள்ளியே நாட்டைக் கறுப்பாக்கும் புள்ளியாகவும், வாக்களித்த வரையே ஏமாற்றும் புள்ளியாகவும் மாறுகிறது.

*"விரலில் குத்தும்*
*கரும்புள்ளி*
*பின்னால்*
*அவன்*
*முகத்தில் பூசும் கரிக்கு*
*முன்னுரையல்லவா?"*

(கொடிமரத்தின் வேர்கள் ப.64)

என்று வாக்காளர்கள் தெளிவின்மையை புலப்படுத்துகின்றார். தகுதியானவரைத் தேர்ந்தெடுப்பதில் மக்கள் தவறு செய்கின்றனர் என்பது கவிஞரின் எண்ணமாகும்.

**வாக்குச்சீட்டு**

வாக்காளர்கள் கையில் உள்ள வாக்குச்சீட்டைக் குழந்தையின் கையிலுள்ள கத்தியாக, பைத்தியக்காரனின் கையிலுள்ள துப்பாக்கியாக, குடிகாரன் கையில் அமர்ந்த குழந்தையாக விமர்சிக்கிறார். கவிஞர் குறிப்பிடும் மாந்தர்கள் தெளிவின்மையால் செயல்படுபவர்கள். அதனால்

*"குழந்தை வளரும் வரை*
*பைத்தியம் தெளியும் வரை*
*குடிகாரன் திருந்தும் வரை*
*தேர்தலை நிறுத்துங்கள்*
*இல்லை*
*தேசத்தைக் கொளுத்துங்கள்"*

(இந்தப் பூக்கள் விற்பனைக்கல்ல ப.30)

என்று சினத்தோடு கூறுகிறார்.

## சட்டசபை

நீதி, நேர்மை, வாய்மை இவற்றிற்கேயுரிய சட்டசபைகள் செருப்புச் சபைகளாகிவிட்டன. சட்டசபை தனக்குரிய மாண்பை இழந்து விட்டமையால் இனிமேல் அதைப் புனிதமாக்கினால்தான் மதிப்பு ஏற்படும் என்கிறார் கவிஞர்.

*"இன்னும் கொஞ்சநாளில்*
*அத்தனை சட்டசபைகளும்*
*ஆலயங்கள் ஆகலாம்*
*அங்கும்*
*செருப்போடு நுழைவது*
*தடைசெய்யப் படலாம்."*

(இன்னொரு தேசியகீதம் ப. 57)

சட்டமன்றங்களில் செருப்பால் நிகழும் கூச்சல், குழப்பம், அடிதடி சண்டைகளை மாற்றக் கவிஞர் வழி சொல்கிறார்.

## ஜனநாயகம்

நாம் குடியரசு வேண்டுமென விரும்பினோம். விரும்பியது கிடைத்தது. ஆனால் அதில் அழுக்குப் படிந்து விட்டது. குடியரசு நாட்டில் அதை தேடும் நிலை ஏற்பட்டுள்ளது. அடிமைச் சமூகத்தின் வயிற்றில் காலம் கிழித்த காயத்தை மூடுவதற்குக் கட்டப்பட்ட அழுக்கு ஆடையாக உள்ளது. கட்டிய துணியில் ஒட்டிய அழுக்கில் புண் புரையோடிவிட்டது. இவ்வழுக்கை நீக்க வேண்டுமாயின் உறங்கிக் கொண்டிருக்கும் பாரத தேவியை மயக்கம் தெளிவித்து எழுப்ப வேண்டும். அழுக்கு நீங்கிய குடியரசு எவ்வாறு இருக்க வேண்டுமெனக் கற்பனை செய்கிறார் கவிஞர்.

கோவையில் கரிசல்காட்டுப் பருத்தி வெடிக்கும் பொழுதுஆடைகள் கிடைக்க வேண்டும். சிரபுஞ்சியில் கோணியை ஏந்தினால் தானிய மழை பெய்ய வேண்டும். பிலாயில் கனிச் சுரங்கத்தை வெட்டும்போது செல்வம் பெருக வேண்டும். இவை நடக்குமாயின் எல்லோரும் எல்லாம் பெறலாம்.

*"எல்லாரும் எல்லாம் எய்தலால்*
*இல்லாருமில்லை உடையார்களுமில்லை"*

என்ற கம்பன் கண்ட இலட்சிய நாடு உருவாகலாம்.

அரசியல் சூழலை விமர்சனம் செய்த கவிஞர் சமுதாயக் கொடுமைகளையும் நோக்குகிறார்.

## சமுதாயம்

இன்றைய சமுதாயச் சீர்கேட்டினைக் கண்டு வெந்த கவிஞர். "சமூக வீணையில் சரிந்து கிடக்கம் நரம்புகளை அவிழ்த்துக் கட்டுவோம்! அவசியமென்றால், அறுத்துக் கட்டுவோம், அதன் பிறகு பிரகடனராகம் பிறப்பிப்போம்" என்று "திருத்தி எழுதிய தீர்ப்புகள்" முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். படைப்பாளனின் மனப் பாதிப்புக்களே கவிதைகளாக வருவதால் சமுதாயக் குறைகளையும் கவிஞர் அலசுகிறார்.

## வரதட்சணைக் கொடுமை

வரதட்சணை என்னும் அசுரன் அச்சப்படுத்துவதன் காரணமாகத் தேசத்தில் பல பெண்கள் முதிர்கன்னிகளாக உள்ளனர்.

இவர்கள் திருமணத்தை நிச்சயிக்கும் நாட்களுக்கு சொர்க்கத்தில் விடுமுறை போலும், அச்சு எந்திரங்களைப் போலவே மனித எந்திரங்களுக்கும் உள்ளங்கள் இல்லை. சிக்கலைத் தீர்க்கும் வரதட்சணைவில்லை வளைப்பது யார் என்ற வினா எழுகிறது. இவ்வில்லை வளைக்க

*"இராமர்களுக்கு இன்று*
*இரத்தமில்லை"*

(இன்னொரு தேசிய கீதம் ப.20)

என்று இளைஞர்களைச் சாடுகிறார். இளைஞர்கள் வில்லொடிக்க இயலாமற்போனால்

*"இனி*
*நாமே*
*ஒடிப்பது*
*நியாயம்"*

(இன்னொரு தேசிய கீதம் ப.20)

எனப் பெண்கள் அவரவர் திருமணத்தை அவரவரே நிச்சயிக்கலாம் என்று பாதை அமைத்துக் கொடுக்கிறார்.

*"எங்கே*
*சீதைகளே கொஞ்சம்*
*சேருங்களேன்"*

(இன்னொரு தேசிய கீதம் ப. 20)

எனப் பெண்கள் திரண்டு போராட வேண்டும் என அழைப்பொலிவிடுக்கிறார். பெற்றோரும் இளைஞர்களும் காலத்தின் தேவை உணர்ந்து மனமாற்றம் பெறுவாராயின் இச்சிக்கலைத் தீர்க்க முடியும்.

## சாதியும் நிறவெறியும்

கவிஞர் சாதியையும், நிறவெறியையும் சமூகத்தை இருளாக்கும் முட்களாகக் குறிப்பிடுகிறார். திருந்தாத மக்கள் மல்லிகை மலருக்கு கூடச் சாதி பிரித்தனர். தீண்டாதார் உடலைத் தொட்டால் தீட்டு எனக் கருதுபவர் அவர்கள் முதுகில் சவாரி செய்வதைத் தீட்டாகக் கருதவில்லை. பூமித்தாய் சிலருக்கு அன்புத்தாயாகவும், சிலருக்குப் பூதகித் தாயாகவும் இருக்கிறாள். இனம், நிறப்பிரிவுகள் என்னும் கொடிய நிலையைத் திருத்தப் புதிய தீர்ப்பளிக்கிறார்.

*"தேசியக்கொடியில் வேண்டுமானால்*
*வர்ண பேதம் இருக்கலாம்*
*தேசத்தில் எதற்கு"*

(திருத்தி எழுதிய தீர்ப்புகள் ப.91)

என்று பதிலடி கொடுக்கிறார்.

## இளைஞர்கள்

இன்றைய இளைஞர்கள் வேலைவாய்ப்பின்மை, எதிர்கால நம்பிக்கையின்மை, மனஉறுதியின்மை போன்றவற்றால் பாதிக்கப்பட்டுள்ளனர்.

*"சிரச்சேதம் செய்யப்பட்ட*
*தீக்குச்சி*
*விரக்திக் கரையான் அரித்த*
*சதை ஓலை*

*வாய்ப்புக்கள் மறுக்கப்பட்டதால்*
*அவன் சோம்பேறிகளின்*
*சொர்க்கத்தில் இருக்கிறான்"*

(கொடிமரத்தின் வேர்கள் ப.85)

என்று இன்றைய இளைஞனின் நிலையைக் கூறி விழித்தெழ அறிவுரை கூறுகிறார்.

*"எழுந்திரு!*
*சிகரங்களில்*
*கூடுகட்ட வேண்டிய*
*நீ*
*பள்ளத்தாக்கில்*
*பதுங்காதே"*

(கொடிமரத்தின் வேர்கள் ப.85)

என்று உற்சாகமாகச் செயல்படத் தூண்டுகிறார்.

## குழந்தைத் தொழிலாளர்

வறுமையும், பொருளாதார நெருக்கடியும் சந்தனப் பூக்களாக விளங்கும் குழந்தைகளைத் தொழிலாளர்களாக்கி விட்டன. சிவகாசி வெடிமருந்துக் கிடங்குகளில், காஷ்மீரின் கம்பளத் தொழிற்சாலைகளில், மேற்கு வங்கத்தின் செங்கற் சூளைகளில், சூரத்தின் வைரத் தொழிற்சாலைகளில் டெல்லியின டீ கடைகளில், பெரோஸாபாத்தின் வளையற் கூடங்களில், அலிகாரின் பூட்டுத் தொழிற்சாலைகளில்

*"சிலுவையில் அறையப்பட்ட*
*சின்ன சின்ன ஏசுகளாய்"*

(இந்தப் பூக்கள் விற்பனைக்கல்ல பக்.115)

காட்சியளிக்கிறார்கள். இவர்களை அழைத்துக் குழந்தைகள் தினம் கொண்டாட வேண்டும் என்கிறார் கவிஞர். கல்வி கற்க வேண்டிய வயதில் வறுமையால் உயிரை அடகு வைத்த,

*"அந்தக் கொழுந்துகள் இல்லாமல்*
*குழந்தைகள் தினம்*
*கொண்டாடினால்*
*சட்டையில் நானும்*
*கட்டாயம் அணிவேன்*
*ஒரு*
*கருப்புரோஜா"*

(இந்தப் பூக்கள் விற்பனைக்கல்ல பக். 120)

என வேதனையுடன் கூறுகிறார் கவிஞர். தேசத்தின் குறைகளுக்கு நாம் பெற்ற சுதந்திரத்தின் குறைபாடே காரணம் என்கிறார் கவிஞர்.

**சுதந்திரம்**

விடுதலைக் காற்று நாடு முழுவதும் வீசவில்லை. இரத்த ஈரத்தில் உருவாகிய சுதந்திர நதி, சேரிகளை ஒதுக்கி மாளிகையின் நீச்சல் குளங்களை நிரப்பியுள்ளது. சுதந்திரச் சீதையை மீட்ட பின்பும் அவள் சிறையில் தானிருக்கிறாள்.

தனியொருவனின் நிறைவின்மையும், மிகையான வறுமையும் பாதித்ததால் சுதந்திரம் புதிய தீர்வைத் தரவில்லை.

*"அவனது பசி*
*பழைய பசி*
*அவனது வறுமை*
*பழைய வறுமை"*

எனக்கூறும் கவிஞர், தேசம் இவர்களுக்கு பொறுப்பேற்காது.

*"அத்தனை பழையதையும்*
*அவன்தான் கொளுத்த வேண்டும்"*

என்று அவரவர் முயற்சியும் உழைப்பும் அவரவரைக் காக்கும் ஆயுதங்கள் என வறுமைக்கு வழி சொல்கிறார். சுதந்திரத்தின் பயனை அடைவோம் என நம்பிக்கை வைக்க வேண்டாம். தேசம் கொள்ளையரின் வயப்பட்டதால் நம்பிப் பயனில்லை என்கிறார்.

நிலப்பிரபுத்துவத்தின் விஷ வேரை அழித்த காரல் மார்க்ஸின் பொது உடைமையாவது வறுமைக்கு விடுதலை தரவேண்டும் எனக் கூறுகிறார்.

*"இனி எந்த தேசமும்*
*மின்சாரத்தையும்*
*மார்க்ஸையும்*
*ஒதுக்கிவிட்டு வாழமுடியாது."*

(திருத்தி எழுதிய தீர்ப்புகள் ப.51) என உறுதியளிக்கிறார்.

## தேசத் தலைவர்

இன்று மகாத்மா காந்தியின் கொள்கைகள் மறக்கப்பட்டுவிட்டன. மலிவுப் பதிப்பாக வந்த சத்திய சோதனை இராத்திரிப் புத்தகங்களோடு இணைப்பாக மாற்றம் பெற்றுள்ளது.

*"அக்டோபரிலும்*
*ஜனவரியிலும் மட்டும்*
*நீ*
*நிதானமாக*
*நினைக்கப்படுகிறாய்"*

(திருத்தி எழுதப்பட்ட தீர்ப்புகள் ப.79)

*"நீ நல்ல நாணயந்தான் - ஆனாலும்*
*செல்லாத நாணயமாகி விட்டாய்"*

என்று காந்தியை நாடுமறந்தமைக்காக வருந்துகிறார். தேசத் தலைவர்களை நாட்டுக்கு உழைக்கும் உத்தமர்களை இன்று காணமுடியாத நிலையில் நம்மிடையே வாழ்ந்த தலைவரையும் நினைவில் கொள்ள முடியவில்லை என்கிறார்.

## தேசியக் கொடி

இன்று தேசியக் கொடி இனக் கலவரத்தால் குருதிக் கொடியாகியது. தேசிய கீதம் முகாரி இராகமானதால்

*"தேசியக் கொடியே*
*பாதிக் கம்பத்தில்*
*பற"*

(கொடிமரத்தின் வேர்கள் ப. 55)

என்கிறார்.

முடிவுரை

இன்றைய அரசியலின் சீர்கேடுகள், சமுதாயக் குறைகள், தனிமனித நிறைவின்மை, சுதந்திரத்தின் பயனைப் பெறாமை ஆகியன இன்றைய தேசியத்தின் பார்வையாகக் கூறப்பட்டன. இவை தேசியத்தை நலிவடையச் செய்தமையால் இந்தத் தேசம்

*"ஒருகனலில் குளித்துக்*
*கரையேற வேண்டும்"*

என்று தீர்வு தருகிறார் கவிஞர். கவிதைகளால் தேசத்தைக் காப்பாற்ற முடியாது எனக் கவிஞர் கூறுவதால் இன, நிற வேறுபாடின்றி மக்கள் ஒருமைப்பாடு கொண்டால் தேசியத்தை வலுப்படுத்த முடியும்.

# வைரமுத்துவின்
# இந்தக்குளத்தில் கல்லெறிந்தவர்கள்
## நூலில் நடைச்சித்திரத்தின் அமைப்பும் அழகும்

- எ.மே. கொலாஸ்டிக்கம்மாள்

'நடைச்சித்திரம்' என்பது வேற்று நாட்டு இலக்கியத்தின் சிறந்த ஆபரணமாயிருந்தும், நமது தமிழ் நாட்டிலும் நிலைத்து விட்டது வ,ரா.வினால் (க. நா. சுப்ரமணியம்).

ஒருமுறை கவியரசர் பாரதியார் அரவிந்தரிடம் வ.ராவைக் காட்டி குதூகலத்தோடு இப்படிக் கூறினாராம், "வசனத்தில் இனி எனக்கு வேலையில்லை கவிதை எழுதினால் போதும். வசனத்திற்கு நமது அப்பங்கார் இருக்கிறார்" (கு. ஸ்ரீ நிவாசன், சொல்லோர் உழவன் வ,ரா. வ,ரா வாசகம் P.V.) கவியரசரின் வாக்கை அடியொற்றி நாம் இனிமேல் இப்படிக்கூறலாம். நடைச்சித்திரத்திற்கு இனி நமது வ.ரா. இருக்கிறார். (இலக்கியச் சுடர். ப.26) முனைவர் இரா. மோகன் கூறியிருப்பது நடைச்சித்திரம் ஒரு புதுவகை இலக்கியமாக வளர்ந்திருப்பதைக் காட்டுகிறது. 'நடைச்சித்திரம்' என்பது தமிழுக்குப் புதிய இலக்கிய வடிவம், (வ.ரா.சுவே.ரா. ப-53)

ஆங்கிலத்தில் ஏ.ஜி. கார்டனர் எழுதிய "சமூகநிலை தாங்கிகள்" (Pillars of Society) 'தீர்க்கதரிசிகளும் மறையோரும் மன்னர்களும்' (Prophets, Priests and Kings) என்னும் வாழ்க்கைச் சித்திரங்கள் - வாழ்க்கையில் வெற்றிப் பெற்ற பெரியோர்களைப் பற்றிய சொல்லோவியங்கள் - தமிழ் இலக்கிய உலகில் நாற்பதுகளில் பரவலாகப் பேசப்பட்டு, வாசகர்களால் விரும்பிப் படிக்கப் பெற்றன. இவை 'அக்கிரகாரத்து அதிசய மனிதர்' என அறிஞர் அண்ணாவால் பாராட்டப்பெற்ற எழுத்தாளர் வ.ராவின் நெஞ்சைக் கொள்ளை கொண்டன. இத்தகைய வாழ்க்கைச்சித்திரங்களைப் பேனா முனைச் சித்திரங்களைத் தமிழிலும் தீட்ட வேண்டும் என்ற ஆர்வத்துடிப்பு அவரது சித்தத்தில் எழுந்தது. அதன் விளைவாக நடைச் சித்திரம் என்னும் புதிய இலக்கிய வகை தமிழுக்கு வரவாயிற்று. இவ்வகையில் சமுதாயத்தில் அடிமட்டத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் ஏழை, எளியமக்களைப் பற்றியும் நடைச் சித்திரங்களை உருவாக்கினார். வ.ரா. வ.ராவின் நடைச்

சித்திரங்களுக்குத் தமிழ் வாசகர்கள் இடையே கிடைத்த பெரும் வரவேற்பைக் கண்ட கல்கி, தாமும் அதுபோல் தமிழில் நடைச் சித்திரங்களை உருவாக்க விருப்பங் கொண்டார். அந்த விருப்பத்தின் வெளிப்பாடே அவரது 'யார் இந்த மனிதர்கள்' என்ற நூல் (இலக்கிய வானம் இரா. மோகன் ப.51) இவர்களது தாக்கத்தின் அடிப்படையில் கவிஞர். கண்ணதாசன் கல்கி. பா.ஸ்ரீ. ஏர்வாடி, எஸ். இராதாகிருஷ்ணன், குமரிஆனந்தன், குகன், மு. மேத்தா, வைரமுத்து ஆகியோர் நடைச்சித்திரத்திற்கு மேலும் வலுவூட்டினர் வைரமுத்து, 'இந்தக் குளத்தில் கல்லெறிந்தவர்கள்' என்ற தம் நூலில் சமுத்திரம் நிலப்பரப்பை பாதிப்பது மாதிரி என் சமகாலத்தையே பாதித்தவர்களைப் பற்றி நடைச் சித்திரங்களாக்கியுள்ளார். அவற்றின் அமைப்பும் அழகும் குறித்துக் காண்போம்.

## வைரமுத்துவின் நடைச்சித்திரம்

வாழ்வின் சராசரி மனிதர்களாய் இருந்தும், என்னுள் சரமழையாய் விழுந்தவர்கள் லட்சியங்களை எனக்குள் விதைத்தவர்கள், என் மெல்லிய புலன்களை மயிலிறகால் வருடியவர்கள் இவர்களெல்லாம் எனது சின்ன தூரிகையில் சித்திரமாகியிருக்கிறார்கள். (இ.கு.க.எப. ஆசிரியர் உரை) இவ்வகையில் கலைத்துறை. இலக்கியத்துறை, திரைப்படத்துறை, பத்திரிக்கைத் துறை, அரசியல், சமுதாயத்தின் அடிமட்டத்திலிருக்கும் அப்பாவி மக்கள் முதலான பல்வேறு துறை சார்ந்தவர்களையும், மக்களையும் பற்றி நடைச்சித்திரம் என்னும் புதிய இலக்கிய வடிவில் தம் கருத்துக்களையும், கணிப்புக்களையும் பதிவு செய்துள்ளார். வைரமுத்து படைத்துள்ள நடைச்சித்திரத்தின் அமைப்பும் அழகும் நம்மைச் சிந்திக்க வைப்பனவாக அமைந்துள்ளன.

## நடைச்சித்திரம் புலப்படுத்தும் ஆளுமைக் கூறுகள்

வைரமுத்து, தன் முன்னுரையில் என்னைப் பாதித்த பலரிடமும் நான் நல்லவை மட்டுமே கண்டிருக்கிறேன் மண்ணில் விழுந்த நாவற்பழத்தை ஊதி விட்டுச் சாப்பிடும் ஒரு மாட்டிடையன் மாதிரி ஒவ்வொரு மனிதரிலும் அற்புதமான அம்சங்களை மட்டுமே நான் ஆராதிக்கிறேன். நல்லவை எண்ணும் போதும், நல்லவை எழுதும் போதும் மட்டுமே நெஞ்சில் நிம்மதி நிறைந்து நிற்கிறது என்பதற்கேற்ப

சமுதாயத்தின் கீழ்த்தட்டு மக்களாகிய தொழு நோயாளி குட்டையனைப் பற்றிக் குறிப்பிடும்போது, கடலையின் மேல் தோலைக் கரையான்கள் அரித்து விட்டாலும் உள்ளேயிருக்கும் பருப்பு பத்திரமாய் இருப்பது மாதிரி அங்கங்கள் சிதைந்து போனாலும் மனிதன் என்ற அந்தஸ்து சிதைந்து போகவில்லை என்ற கொள்கையில் குரங்குப்பிடியாய் நின்றவர் குட்டையன்

*"கையில்லை என்பது ஊனமில்லை*
*பறவைகளுக்குக் கையில்லை*
*காலில்லை என்பது ஊனமில்லை*
*பாம்புக்குக் காலில்லை*
*உண்மையில் ஊனம் என்பது உற்சாகமின்மைதான்*
*அவலப்பட வேண்டிய ஊனம் அவநம்பிக்கைதான்"*

இந்த ஊரில் பொருளாதாரம் ஆளுக்கு ஆதாரம் என்பதைப் புரிந்து கொண்டவர் குட்டையன். கஞ்சா, கள்ளச்சாராயம், விபசாரம், திருட்டு. பிச்சை இவைகளைக் கீழ்த்தட்டு மக்கள் யாரும் திட்டமிட்டோ, திமிர் பிடித்தோ செய்வதில்லை. தங்களை உதைத்துத் தள்ளும் வாழ்க்கையோடு ஒட்டிக் கொள்வதற்கு அவர்களுக்குத் தெரிந்த வழி அதுதான். (இ.கு.க.எ.ப.14)

இதில் சாதாரண, சமுதாயத்தின் அடித்தட்டு மகனாகிய தொழு நோயாளி குட்டையனின் அனைத்துக்கூறுகளையும் ஒரு முப்பரிமாண ஓவியம்போல் துல்லியமாகவும் தெள்ளத் தெளிவாகவும் படம் பிடித்துக் காட்டியுள்ளார் வைரமுத்து. வரிக்கு வரி குட்டையனின் ஆற்றலையும், தன்னம்பிக்கையையும், தன் மதிப்பையும், திறமையையும், வார்த்தைக்கு வார்த்தை - வானளாவப் போற்றியிருப்பதைப் படிப்பவர் மனத்தில் 'குட்டையனின் நம்பிக்கை' - தாழ்வு மனப்பான்மை நீக்க உதவிடும். பிறப்பு வளர்ப்பு மறைவு என்று வாழ்க்கை வரலாற்றை நிரல்படக் கூறாமல், "ஊனம் என்பது உடம்பு சம்மந்தப் பட்டதன்று, உள்ளம் சம்மந்தப்பட்டது" என்ற உண்மைக்குக் கிடைத்த உயிர் விளக்கம் தான் குட்டையன் என்ற கருத்தைச் சித்திரமாக்கியுள்ளார் வைரமுத்து.

## நடைச்சித்திரத்தின் பண்பும் பயனும்

சமகால சமுதாய வாழ்க்கையில் சாரசரி மனிதர்களிலிருந்து- வெற்றி பெற்ற சாதனை புரிந்த மனிதர்களைப் பற்றிய நடைச் சித்திரங்களையே வைரமுத்து தம் நூலில் முழுமையாகப் படைத்துத் தந்துள்ளார். இவற்றைப் படிப்பதின் விளைவாகச் சில மாமனிதர்களின் சமூகப் பங்கை மதிப்பிட முடிகிறது. நசிந்து போன பல இதயங்களுக்கு நம்பிக்கை பிறக்கிறது. ஆளுமையில் தனக்கென்று ஒரு தனியிடத்தைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் பிறக்கிறது. வைரமுத்து, சுரதா பற்றிய நடைச்சித்திரத்தில்

*"இந்த வயதிலும் உடும்பு மாதிரி உடம்பை வைத்திருக்கிறார்*
*அதற்குக் காரணம் அவரது ஒழுக்கம்*
*அவர் சந்தோஷமாய் இருக்கிறார்*
*காரணம் - சார்பின்மை*
*அவரைச் சிலருக்குப் பிடிக்கும்*
*காரணம் - அவர் குழந்தை"*

(இ.கு.க.எ. ப-20)

என்ற அவரது தனித் தன்மையைச் சித்திரமாக்கி விட்டு, அவரது புலமைக்குச் சான்றாக, "அவர் கவிஞர் மட்டுமில்லை; நல்ல கல்வியாளர் என்பதும், அவர் ஓடையின் கரைகளுக்குள் ஓடிக் கொண்டிருக்கிற சமுத்திரம் என்பதும் உலகத்தைப் படித்துக்கொண்ட அளவுக்கு உலகியலைப் படித்துக் கொள்ளாதவர் என்பதும், கவிஞனுக்குரிய அத்தனை அலட்சியங்களையும் கொண்ட லட்சியவாதி (ப. 16) என்ற அவரது அறிவுத்திறனைப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

"சிலந்தியின் வலையைச் சிலந்தி தான் பின்ன முடியும்" என்பது மாதிரி, சுரதாவின் சொல்லோவியங்களைச் சுரதா தான் வரைய முடியும் என்று கூறுகிறார். சான்றாக,

'அயலூரில் இருக்கும் காதலியை - இரவில் சந்திக்கச் செல்கிறான் காதலன். ஊரே நிசப்தத்தில் நித்திரை கொள்கிறது. நட்சத்திரங்களைக் காவலுக்கு வைத்து விட்டு நிலவு கூட உறங்கி விடுகிறது. காதலனின் காலடிச் சப்தம் உறங்கிக் கிடந்த நாய்களை உசுப்பி விடுகிறது. துரத்தும் நாய்களைத் துரத்துவதற்குக் கீழே குனிந்து கல்லெடுக்கிறான். கல்

தரையோடு பதிந்திருக்கிறது. அப்போது அவன் சொல்கிறான், இந்த ஊரில் நாய்களை அவிழ்த்து விட்டுவிட்டுக் கல்லை கட்டிப் போட்டிருக்கிறார்களே!' - என்ற சித்திரத்தில் சுரதாவின் ஆழ்ந்த தமிழ்ப்புலமையை நம் மனக் கண்ணுக்கு அவ்வாறே சித்திரமாக்கிக் காட்டியுள்ளான். இச்சித்திரம் படிப்பவர்க்குச் சுரதாவின் மொழிப் புலமையைத் தாமும் பெற வேண்டும் என்ற உந்துதலைக் கொடுக்கும் என்பது உறுதி.

படிப்பவர் உள்ளத்தில் நம்பிக்கை, விளம்பரப்படுத்தாத உயரிய நிலை, பரந்துபட்ட பட்டறிவு ஆகியவற்றை உணர்த்தும் நடைச் சித்திரமாக, எஸ்.ஏ.பி. அண்ணாமலையைப் பற்றிய நடைச்சித்திரம் அமைகிறது.

'நீங்கள் பழைமையின் ஜாதகமா, புதுமையின் கம்ப்யூட்டரா' சமுத்திரமாய்ப் பொங்கும் உங்கள் அறிவைப் பார்த்துக் கரையில் நின்று கைதட்டிக் கொள்கிறேன். உறங்கும்போது கூட வாசிக்க ஏதாவது உத்தி வைத்திருக்கிறீர்களோ என்று தோன்றும் எனக்கு. "ஒரு கிரிக்கெட் பந்தின் கனம் - பூமி உருண்டையின் விட்டம்- லெபனான் கலவரம் - வெண்பா இலக்கணம் - கொசுவின் ஆயுள் - சூரியனின் வயசு - மாங்காயின் எந்த பாகத்திற்கு உப்பு, எந்த பாகத்திற்கு மிளகாய்த்தூள் - மந்திரிகளுக்கு தெரியாத மந்திரிகளின் இலாகாக்கள் - நடிகைகளுக்கேத் தெரியாத நடிகைகளின் தந்தைமார்கள், எல்லாம் தெரியும் உங்களுக்கு விலாசம் வேண்டும். ஆனால் விளம்பரம் வேண்டியதில்லை என்பது எவ்வளவு பெரிய குணம். பூகம்பம் வந்தால் கூட வீட்டைப் பூட்டிவிட்டு வெளியேறும் நிதானம் உங்கள் நிதானம் (ப. 47).

இச்சித்திரத்தின் ஒவ்வொரு வரியும், எஸ். ஏ.பி அண்ணா மலையின் அறிவுத்திறனை, பொது அறிவின் ஆழ்ந்த புலமையை அறிந்து கொள்ள உதவுவதோடு வாசகர்களைச் சிந்திக்கத் தூண்டுவதாக அமைந்துள்ளது.

### நடைச்சித்திரக் கூறுகள்

தலைப்பு, தொடக்கம், நடுப்பகுதி, முடிவு என நடைச்சித்திரத்தின் அனைத்தக் கூறுகளையும் வைரமுத்து திறம்படக் கையாண்டுள்ளார்.

## தலைப்பு

நூலின் தலைப்பே மிகச் சிறப்பாக அமைந்துள்ள ஒரு நடைச்சித்திரம் இதோ, "இலவங்காய் காய்ந்தாலும் தலையணைக்குப் பஞ்சு தருவது மாதிரி, நம் கனவுகள் காய்ந்து விட்டாலும் கண்ணீர்த்துளி கவிதைக்கு மை தந்திருக்கிறது தோழி."

இந்தக் குளத்தில் எத்தனையோ பேர் கல்லெறிந்திருக்கிறார்கள் எறிந்த சில கற்கள் ஆழம்சென்று அடையுமுன்னே அலைகள் அடங்கியிருக்கின்றன.

ஆனால் ஆழத்திற்குச் சென்று அமிழ்ந்த பிறகும் இன்று வரை அலைகளை அனுப்பிக் கொண்டிருக்கும் கல் எறிந்தவள் நீ தானடி கண்ணே!

*"இந்தக் குளத்தில் எறியப்பட்ட கற்களில்*
*சில கற்கள் கருங்கற்கள்*
*சில கற்கள் எரிகற்கள்*
*சில கற்கள் மாணிக்கக் கற்கள்*
*ஆனால் நினைவுக்குள் நிற்பவளே,*
*நீ எறிந்த கல்லோ சிக்கிமுக்கிக்கல்*
*இன்னும் இநதத் தண்ணீர் தீப்பிடித்து எரிகிறதே!'* (ப- 145)

என்ற நடைச்சித்திரத்தில், கவிஞர் வைரமுத்துவின், அந்த ஒருத்தியின் நினைவால் எழுதத்தூண்டும் உந்துதல் ஏற்பட்டுள்ளதாகக் கூறுகிறார்

"நான் எழுதிக் கொண்டிருக்கும் எழுத்துக்களையெல்லாம் முகம் காட்டாமல் என் முதுக்குப் பின்னால் நீ நின்று வாசித்துக் கொண்டிருக்கிறாய் என்ற வசீகரப்பிரமை தான் என் பேனாவுக்கு குதிரை பலத்தைக் கொண்டு வந்து பூட்டுகிறது. (ப-144) என்று எழுத்தின் ஆதாரமே அவளாகக் கருதிச் சித்திரம் ஆக்கியுள்ளார். இந்தச்சித்திரத்தில் வருகின்ற வரிகளே கவிஞரின் புத்தகத்திற்கே தலைப் பாக்கியுள்ளது சிறப்பாகும்.

**தொடக்கம்**

ஒவ்வொரு சித்திரத்தின் தொடக்கமும் படிக்க ஆர்வத்தைத் தூண்டக் கூடிய விறுவிறுப்பான சிறந்த தொடக்கமாகவே அமைத்துள்ளார் வைரமுத்து சான்றாக,

“நான் எழுத்தாளரா இல்லாமப் போயிட்டாலும் பரவாயில்லை நல்ல மனுஷியா இருக்கணும்” - இது சிவசங்கரி.

எத்தனை பெரிய சத்திய வார்த்தைகள்! பயிற்சியும் முயற்சியும் இருந்தால் எழுத்தாளராகி விட முடியும் ஆனால் மனிதனாய் அல்லது மனுஷியாய் இருப்பதற்கு இந்தப் பயிற்சியும் முயற்சியும் மட்டும் போதுமா? மாஜி எழுத்தாளர் அல்லது மாஜிக் கவிஞர் என்பது கூட இழிவில்லை மாஜி மனிதன் அல்லது மாஜி மனுஷி என்பது எத்தனை பெரிய இழிவு?

விமர்சனங்கள் பற்றிய அவரது பார்வை அற்புதமானது பொறாமை-குற்றச்சாட்டு - வதந்தி - இவையெல்லாம் பாராட்டின் வெவ்வேறு வடிவங்கள் என்று விளங்கி வைத்திருக்கிறேன். சிவசங்கரியிடம் எனக்குப் பிடித்த முதல் விஷயம் அவரது எழுத்தல்ல அவரது தன்னம்பிக்கை போர்க்களத்தில் ஒரு கரம் போய்விட்டதா, சரி! ஒரு கரத்தால் யுத்தம் செய்வது எப்படி என்று கற்றுக் கொண்டு அதையும் புத்தகமாக்கிப் போர்க்களத்திலேயே விற்றுவிடும் புத்திசாலித்தனம்.

எதிராளி யாரையும் உட்கார வைத்து விடும் உயரம் மனசு துருவும் பார்வை - கொஞ்சம் அதிகமான ஆங்கிலம் - கொஞ்சம் அதிகமான பேச்சு - கொஞ்சம் அதிகமான உரிமை - ஆனால் கொஞ்சமும் அதிகமில்லாத கர்வம் (ப 106-107) இவையெல்லாம் சேர்த்து வரைந்தால் அது சிவசங்கரி சிறந்த தொடக்கமாகி அதனோடு தொடர்புடைய கருத்துக்களை அவ்வாறே படமாக்கி, நம் நெஞ்சில் நிற்பவையாக பதிய வைக்கிறார். தொடக்கம் ஆர்வத்தைத் தூண்டியும், மனிததன்மையின் முக்கியத்துவத்தையும் தொடக்கத்திலேயே ஆசிரியர் வைரமுத்து சித்திரமாக்கி வாசகர் நெஞ்சத்தில் பதியும் படி செய்து விடுகிறார்.

**நடுப்பகுதி**

ஏவி.எம். சரவணன் பற்றிய நடைச்சித்திரத்தில் நடுப்பகுதி மிக அழகாகவும், உணர்ச்சி பூர்வமாகவும், மனிதனை மனிதனாக மதிக்கும்

ஒப்பற்ற பண்பு இன்னும் மறைந்து விட வில்லை என்பதற்குச் சான்றாகவும் அமைகிறது.

இப்போது நானும் இதயம் திறந்து சொல்கிறேன். பணக்காரர்களை நான் பணத்துக்காக மதிப்பதில்லை. அப்படிப் பார்த்தால் ரிசர்வ் பாங்க்கைத் தான் நான் தினமும் கும்பிட வேண்டும். திருப்பதி சாமியை விட திருப்பதி உண்டியலைத்தான் தினமும் கும்பிட வேண்டும். மனிதத்துவம் இல்லாத முதலாளித்துவத்தை விட மனிதத்தவத்தோடு கூடிய முதலாளித்துவம் ஒப்பிட்டு வகையில் உயர்ந்ததென்று உணர்ந்தேன். பணியாளர்களுக்கு உத்தரவிடும் போது அவர் குரலில் பணிவு இருக்கும்.

ஒருவரின் உயர்ந்த பண்புகளை வஞ்சகமில்லாமல் பாராட்டுவார். குறைகள் பேசினால் நல்ல விஷயங்கள் பேசலாமே என்பார். வெற்றி என்பது பெற்றுக் கொள்வதற்கு, தோல்வி என்பது கற்றுக் கொள்வதற்கு என்பார்.

கண்களுக்குள் ஓவியம் தீட்டும் கலாமாளிகை அவர் இல்லம் சினிமாவின் சின்னங்களே இல்லாத சித்தன்ன வாசல் (ப.130-131).

கருத்துக்கள் செறிந்த நடுப்பகுதி வாசகர்களைப் படிக்கின்ற ஆர்வத்தைத் தூண்டி, மேலும் மேலும் படித்துச் சிந்தனையைத் தூண்டும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது.

முடிவு :

ஒவ்வொரு சித்திரத்தின் முடிவும், சிந்திக்கத் தூண்டும் நல்லபல கருத்துக்களின் கோர்வையுடன் அமைந்துள்ளது. சான்றாக பெரியார்தாசன் என்ற நடைச் சித்திரத்தில், அறிவுக்கும், பகுத்தறிவுக்கும், உள்ள வேறுபாட்டைத் தன் சொற்பொழிவொன்றில் சுட்டிக் காட்டுகிறார் பெரியார்தாசன்.

"தூக்கணாங்குருவி கூடு கட்டுகிறது. இன்னும் ஆயிரமாயிரம் ஆண்டுகளானாலும் குருவி கூடுதான் கட்டும் லிப்ட் போட்டு வீடு கட்டப் போவதில்லை. அதன் அறிவு அவ்வளவுதான். ஆனால் குகையில் வாழ்ந்த மனிதன் விண்வெளியில் வீடுகட்டுமளவிற்கு வளர்ந்திருக்கிறான் காரணம் குருவிக்கு இருப்பது அறிவு, மனிதனுக்கு இருப்பது பகுத்தறிவு எதிர் காலத்தில் பெரியார்தாசன் ஞானவீடுகள் கட்டுவார், அவர் பகுத்தறிவாளர்"

என்ற சீரிய சிந்தனையுடன் கூடிய முடிவு இச்சித்திரத்திற்கு இன்னும் மெருகூட்டுவதாக அமைகிறது.

## நகைச்சுவை தவழும் நடைச்சித்திரம்

நல்ல எழுத்தாளர் பெரியார்தாசன். அறிவும், நகைச்சுவையும் ஜடை போட்டுக் கொண்டு நடை போட்டுக் கொண்டிருக்கும் அவர் எழுத்தில். 'சிந்தியுங்கள்' என்று ஒரு புத்தகம் எழுதினார். அதைக் காணிக்கையாக்கினார், எப்படி இப்படி. இத்தொகுதியில் உள்ள கட்டுரைகளின் கருப்பொருள்களை நான் நடு இரவுகளில் தான் சிந்தித்திருக்கிறேன். அந்த நடு நிசிகளில் என்னைத் தூங்க விடாமல் கடித்துக் குதறி எழுப்பி விட்டவை எங்கள் வீட்டுக் கொசுக்களே. தூக்கம் போன ஆத்திரத்தில் அவைகளில் சிலவற்றை அடித்துக் கொன்றிருக்கிறேன். அவைகள் என்னை எழுப்பாவிடில் இந்தக் கட்டுரைக்கான சிந்தனைகள் எழாமல் போயிருக்கக் கூடும். அந்த இரவுகளில் என்னைச் சிந்திக்க வைத்து விட்டு என்னிடம் அடிபட்டு மரணித்துப் போன அந்தக் கொசுக்களுக்கும் அவற்றின் வளர்ச்சியில் அக்கறை காட்டி, அவற்றை அழிக்க எந்த முயற்சியும் எடுக்காமலிருக்கும் நமது சென்னை மாநகராட்சிக்கும் இதைக் காணிக்கையாக்கி வருந்துகிறேன். (ப.191)

அவரால் சோகத்தில் நகைச்சுவை பிழியவும் முடியும், நகைச்சுவையில் சோகம் பிழியவும் முடியும். சாதாரண நிகழ்ச்சியை நகைச்சுவையாக்கி. வாசகர்களுக்கு ஆர்வத்தைத் தூண்டக்கூடிய அழகுறு சித்திரமாக அமைத்துள்ளார்.

## புறத்தோற்றம் பற்றிய சித்திரம்

ஒருவரது பண்பு நலன்களை, குணநலன்களை வருணிப்பது எழுத்தாளருக்கே உரிய சிறப்பாகும். ஆனால் வைரமுத்துவின் நடைச்சித்திரத்தில், சாலமன் பாப்பையா புறத்தோற்றம் எப்படியிருக்கிறது என்பதைக் காண்போம்.

"சாலமன் பாப்பையா வித்தியாசமான கலவைகளின் விளைச்சல். இருட்டுக்கு வேட்டி கட்டியது மாதிரி ஒரு தோற்றம். கரும்பலகையில் நேர் கோடு போட்டது மாதிரி ஒரு சிரிப்பு. திருக்குறளின் ஓர் அதிகாரம் எழுதி வைக்க வசதியான அகலமான நெற்றி. அறிவுச் சூட்டில் உதிர்ந்து

போன முன்முடி, சிரிப்பும் குறும்பும் மிதக்கும் சின்ன கண்கள். புலமையில் தொலைந்து போகாத பணிவு, பணிவில் கரைந்து போகாத புலமை சாலமன் பாப்பையா என்றவுடன் என் ஞாபகக் குளத்தில் நுரை காட்டும் விஷயங்கள் இவைகள் தாம். அவ்வாறே அவர் நிழல் படம் நம் மனத்திரையிலும் பதியும்படி சித்திரமாக்கப்பட்டுள்ளது. நடைச்சித்திரத்தின் இலக்கணத்தையே நமக்குப் படமாக்கிக் காட்டியுள்ளது சிறப்பானதாகும்.

## நடைச்சித்திரத்தில் நயமான உவமைகள்

உவமைகள் கவிதைக்கு மெருகூட்டுவதாகும். வைரமுத்துவின் நடைச்சித்திரத்தில் அவர் கையாண்டுள்ள நயமான உவமைகள் அவரது உத்திகளில் ஒன்றாக அமைகிறது.

*"ஓர் உலோபியின் இரும்பு பெட்டியைப் போல*
*எப்போதாவது தான் வாய் திறப்பார்." (ப.93)*

*"அவரோடு பேசி விட்டு வந்தால் ஒரு நூலகத்துக்குள்*
*நுழைந்து வந்த மாதிரி இருக்கும்." (ப. 16)*

*"மழை நின்ற பிறகும் மரங்கள் மட்டும் சொட்டிக்*
*கொண்டிருப்பது மாதிரி இருபத்தொரு வருடங்களுக்குப்*
*பிறகும் அந்த நினைவுகள் மட்டும் இன்னும் துளித்துளிகளாய்*
*..................துளித்துளிகளாய்." (ப.23)*

*"மலைப் பிரதேசத்தில் மட்டுமே மலரும் ஒரு பூச் செடியை*
*தரையில் பெயர்த்து நட்டு வைத்தது மாதிரி ஏதோ ஒரு*
*வாட்டம் இருந்தது உங்களுக்குள்." (ப.29)*

*"குமிழிகளைக் கோத்து கோத்து முத்தாரம்*
*செய்ய ஆசைப்படும் முட்டாளைப்போல". (ப.29)*

*"மேகத்தைப் பிடித்துக் கொண்டே நட்சத்திர மண்டலத்தில்*
*நடந்த போவது மாதிரி." (ப.30)*

*"மயிலிறகால் மருந்திடுவது மாதிரி." (ப.32)*

*"தமிழ் சினிமாவில் எப்போதும்*
*கடையாய் வரும் போலீஸ் மாதிரி." (ப.11)*

*“காணாமல் போனவர்கள் பெயர்கள் எல்லாம் வாக்காளர் பட்டியலில் இருப்பது மாதிரி, இலக்கிய வரலாற்றில் இல்லாமல் போனவர்கள் பெயர்கள் எல்லாம் இவரது பேரேட்டில் இருக்கும்.” (ப.16)*

நடைச்சித்திரம் சிறப்பாக அமைய நயமான உவமைகளைக் கையாளுகின்ற உத்தியைக் கடைபிடித்து யாரும் எடுத்தாளாத உயர்ந்த நயமான சிந்தனையைத் தூண்டும் உவமைகளை நயம்பட எடுத்தாளுகின்றார். “அறிவை வெளிப்படுத்துவதில் கூட யாரையும் காயப்படுத்தாத கவனம் வேண்டும்.”

இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின் போது செந்தமிழ் வளர்த்த அறிஞர்களுக்குச் சிலைகள் வைக்கப்பட்டன “அத்தனை பேருக்கும் சிலை வைத்தீர்களே! அப்பர் தமிழ் வளர்க்க வில்லையா? அவருக்கு ஏன் சிலை வைக்கவில்லை? என்று குன்றக்குடி அடிகளார் அண்ணா மீது அன்பு அம்பு தொடுத்தார்.

அடிகளாரைப் புண்படுத்தாமல் அண்ணா சொன்னார். “சிலை வைக்கப்பட்ட அத்தனை அறிஞர்களும் வணக்கத்திற்குரியவர்கள், ஆனால் அப்பர் பெருமான் வழிபாட்டுக்குரியவர், வழிபாட்டுக் குரியவருக்குச் சாலையில் சிலை எதற்கு? (ப. 92)

யாரது மனதும் புண்படாத வகையில் நயமாகப் பதிலைக்கூறும் அண்ணாவின் அறிவு வெளிப்பாட்டை ஆசிரியர் வைரமுத்து சிந்தனைக்குரிய கருத்தாக நடைச்சித்திரமாக்கியுள்ளது சிறப்பானதாகும்.

## நெஞ்சைத் தொடும் வரிகள்

உயர்ந்த குறிக்கோளையும் வாசகர் நெஞ்சத்தில் நடமாடவிட வேண்டும் என்ற உயர்ந்த நெஞ்சைத் தொடும் வார்த்தைகளை கையாளுகின்றார். சான்றாக,

“ஒரு தங்கக் காசு மட்டும் தரையில் விழட்டும் அய்யராவது ஆசாரியாவது?”

“அரசு சபைகளில் விருது பெறுவதும் அடுத்தநாள் தெருவோர டீக்கடைகளில் தேநீர் பருகுவதும், ஒன்றென்று கருதும் குன்றென்று சொல்வேன் அந்தக் குணக் கவிஞனை”

"சூரியன் தன்னை நேசிக்கிறதா என்பது தாமரைக்கு முக்கியமில்லை, சூரியனை நேசிப்பது தாமரையின் தர்மம்"

"மனிதன் பிறந்தவுடனேயே வாழ்க்கையைத் தொலைத்து விட்டு மரணம் வரைத் தேடிக் கொண்டிருக்கிறான்"

கொடியவள், ஆசை வார்த்தை பேசிக் கதாநாயகனைத் தழுவ வருகிறாள். கதாநாயகன் தள்ளி நின்று சொல்கிறான்.

"தொடாதே வஞ்சகி, நீ தொட்டால் விஷம் கூடச் செத்து விடும்"

கன்னத்தில் அடித்து விட்டுக் காதுக்குள் போவது மாதிரியான உயர்ந்த நெஞ்சத்தைத் தொடும் வார்த்தைகளால் நடைச்சித்திரத்திற்கு மேலும் அழகூட்டியுள்ளார்.

## முடிவுரை

ஆசிரியர் வைரமுத்து, கண்ணதாசன் பற்றிக் குறிப்பிடுகையில், ஆற்றலில் அவர் ஒரு சமுத்திரம் என்பதால் தான் அவர் மீது எறியப்பட்ட தீவட்டிகள் தீய்ந்து போயின. கண்ணதாசனின் உரைநடையும் கவிதையும் இலக்கிய வரலாற்றில் கிழிக்க முடியாத பக்கங்களில் அழிக்க முடியாமல் எழுதப்படும். (ப.199) போன்ற சித்திரநடை, இன்னும் படிக்கபடிக்க ஆர்வத்தைத் தூண்டும் வகையில் அமைந்திருப்பது சிறப்பானதாகும். இத்தகைய நடைச்சித்திரத்தைப் படித்து முடித்தாலும் அவை எழுப்பும் சிந்தனை அலைகள் நம்மைச் சிந்திக்க வைக்கின்றன. மேலும் நடைச்சித்திரம் புது இலக்கியமாக, புதுமை இலக்கியமாகத் தமிழில் வளர சிந்தனையைத் தூண்டும் அமைப்பும் அழகும் காரணமாக இருந்து வருகிறது எனலாம்.

# அந்நியமாதலும் தொடர்ந்து வாழ்தல் பிரச்சினையும்

## (சுப்ரபாரதிமணியன் - சுடுமணல்)

வெ. சரோஜினி

### முன்னுரை

தற்கால மனிதன் எதிர்கொள்ளுகின்ற பல முக்கிய பிரச்சினைகளில் ஒன்று அந்நியமாதல் ஆகும். உலகப் போர்களின் தாக்கம் அல்லது விளைவு அந்நியமாதல் என்ற கொள்கை வெளிப்பாட்டிற்குக் காரணமாகும். "போருக்கு எதிரான மரபுகள் சார்ந்த நிலைகளின் புறக்கணிப்பு, தலை முறை இடைவெளி, ஹிப்பி இயக்கம், நம்பகத் தன்மையில் இடைவெளிதோன்றுதல், மேலும் பிளவுபட்டுள்ள நிலையில் மனித வாழ்வு காணப்படல், சுயமாக முன்னேற எழும் தடைகள், காண்பதற்கு எளிதாக ஆனால் உண்மையில் அர்த்தமற்றதாகக் காணப்படும் வாழ்க்கை"[1] மற்றும் இவை போன்ற சூழல் தோன்றும் போது அந்நியப்படுதலின் பாதிப்புகளைக் காணமுடியும். வரலாற்றில் குறிப்பாக, உலகப் போருக்குப் பிந்திய இந்நூற்றாண்டு மிகப் பெரும் ஆன்மீக அழுத்தமும், கடும் முயற்சியும் கொண்டதாக உள்ளது. இதனால் இக்காலம் அந்நியப்படல் காலம் என்று அழைக்கப்படுகிறது. போர் மற்றும் அதனைத் தொடர்ந்து வரும் துன்பம், அழிவு, பஞ்சம், போன்றவை மட்டும் மனிதனைப் பாதிப்பதில்லை. தனிமைப்பட்ட வாழ்க்கை, தறி கெட்டுப் போன மனம், அர்த்தமற்றுப் போன அனுபவங்கள் போன்ற பிரச்சினைகளாலும் மனிதன் பாதிக்கப்படுகின்றான். இவையே, இவ்வாய்வில் அந்நியமாதல் எனும் கருத்தமைவுக்கு மையமாக உள்ளன.

பொதுவாக சமுகரீதியில் தனிமைப்படும் போதுதான் தொடர்ந்து வாழ்தலுக்குரிய பிரச்சினையும் ஏற்பட்டு விடுகிறது. "தனிமைப் படுத்தப்பட்ட அல்லது புறக்கணிக்கப்பட்ட உணர்வு, சமூக உறவில் தோன்றும் போது அந்நியமாதல் தோன்ற வாய்ப்பாகிவிடுக்கிறது."[2] என்ற கருத்து ஏற்புடையதாக உள்ளது. சுப்ரபாரதி மணியனின் "சுடுமணல்" எனும் நாவல் வேலையின்மைப் பிரச்சினையோடு, தொடர்ந்து வாழ்தல் பிரச்சினையையும் மையமாகக் கொண்டு அமைந்துள்ளது. இக்கதை

தமிழ் நாட்டிலுள்ள திருப்பூரிலிருந்து ஆந்திரா நாட்டிற்குச் சென்று முப்பது வருடங்களாக வாழும் ஒரு தமிழ்க் குடும்பத்தின் கதையாகும். இங்குக் கதை மாந்தர்களான வெங்கட்டய்யா சந்திக்கும் இனப்பிரச்சினையும் அத்துடன் மகன் மகேந்திரனின் வேலையின்மைப் பிரச்சினையும் அவரது மனைவி சந்திக்கும் பண்பாட்டுப் பிரச்சினையும் இணைந்து "தொடர்ந்து வாழ்தல்" (Survival Problem) என்ற பிரச்சினையை உருவாக்கித் தருகிறது. மகேந்திரன் வேலையின்மையால் தனிமைப்படுத்தப்பட்டதாக, புறக்கணிக்கப் பட்டதாக உணர்கிறான். குடும்பத்தில் ஆண்மகனுக்குரிய மதிப்பை இழந்து, காதலியின் உறவையும் இழந்து, பீதியினால் பீடிக்கப்பட்டு எப்பொழுதும் மரணம் பற்றிய சிந்தனை கொண்டவனாய்க் காட்சியளிக்கிறான். வேலையின்மைப் பிரச்சினைஅவனது செயல்பாட்டைக் கேள்விக்குறியாக்கி விடுகிறது. இதனால் மரணத்தைப் பற்றிச் சிந்திப்பது இவ்வுலகப் பிரச்சினையிலிருந்து தன்னைத் தற்செயலாக விடுவித்துக் கொள்ள உதவுவதாக எண்ணுகிறான். "கேஸ் ஸ்டவ்கள் வெடித்துச் சிதறி மரணம் விளைவிப்பது பெண்களை மட்டுமேதானா வேலையில்லாத இளைஞர்களின் தற்கொலைக்குமான உபாயமாகி விடவில்லையே"[3] என்ற சிந்தனையின் பின்னணியில் மகேந்திரன் அறிமுகமாகின்றான். ஆனால், அவனுக்குள் தற்கொலை செய்து கொள்ளும் அளவுக்குத் தைரியமில்லை. வேலை கிடைக்காததால் வீட்டிற்குள்ளேயே முடங்க வேண்டிய சூழ்நிலை உருவாகி விடுகிறது. இதனால் வீட்டில் சமையல் வேலையைச் செய்யும் பொறுப்பு அவனுடையதாகிறது. நமது இந்தியக் கலாச்சாரத்தில் பெண்கள் வீட்டு வேலை செய்யவும் ஆண்கள் வெளி வேலை செய்யவும் பழகிப்போன ஒன்றில் கதையின் நாயகன் மாறுபட்ட வாழ்க்கைக்குத் தள்ளப்படுகின்றான். சமையல் செய்வதைத் தாயும் தகப்பனும் வரவேற்றனர். தான் ஓர் ஆண்மகன் இன்னும் சம்பாதிக்காமல் தகப்பனின் நிழலிலேயே வாழ்க்கையைத் தொடர வேண்டியுள்ளதே என்ற எண்ணம் அவனுக்குள் குற்றவுணர்வைத் தோற்றுவிக்கிறது. அதனால் வீட்டிற்குள் அடைபட்டு இருப்பதே ஆறுதலாக இருப்பதாக உணர்கிறான். அவனைச் சுற்றிச் சமையலறைச் சாமான்கள் சன்னல்கள், சுவர்கள் சூழ்ந்திருந்தன. அவை, அவனை மேலும் புற உலகினின்று அந்நியப்படுத்தின. இந்த உளவியல் பாதிப்பினால் அதற்கு மாற்றாக அவன் பெண்களைப் பார்த்து ரசிப்பதில் ஒரு விதப் பரவச நிலையை அடைகின்றான். அவ்வுணர்வு வேலை கிடைத்தால் பெறுகிற இன்பத்துக்கு நிகரானது என்பது போன்று எண்ணுகிறான்.

மேலும் மகேந்திரனின் அப்பா, அவனைப் பார்த்ததும் கேட்கும் கேள்வி "சமையல் வேலையெல்லாம் முடிஞ்சுதா?"[4] என்பதுதான். இக்கேள்வி அவனைப் பலமுறை உளவியல் ரீதியில் பாதிக்க வைத்தது. தகப்பனின் பரிவான பேச்சையும், தாயின் ஆறுதலான வார்த்தையையும் எதிர்பார்க்கும் மகேந்திரனுக்குச் சமையல் வேலை பற்றிக் கேட்கும் போது அவனுக்குள் புறக்கணிக்கப்பட்ட மன உணர்வு தோன்றுகிறது.

இங்ஙனம் தனிமைப்படுத்தப்பட்ட மனம் எப்போதும் ஏதோ ஒன்று நடக்கப் போவதாகவே தனக்குள் ஒருவித எதிர்பார்ப்போடு இருப்பது உண்டு. ஆனால் அவன் எதிர்பார்ப்பது எதுவும் நடக்காது. ஆனாலும் அச்சிந்தனைகளிலிருந்து அவன் விடுபடவும் மாட்டான். அங்ஙனம் வரும் நினைப்பு அவனுக்குள் ஒரு சுகத்தைத் தருவதுண்டு. வேலையின்மையால் தனிமைப்படுத்தப்பட்ட மகேந்திரனும் இச் சிந்தனைக்கு ஆட்படுகின்றான். மகேந்திரன் தினமும் மனத்தில் நிகழ்த்திப் பார்க்கும் காட்சிகள் அச்சத்தைத் தருவதாகும். அதாவது எதிர்பாராத சமயத்தில் நடக்கும் துப்பாக்கிச் சூடு பற்றியும், இரத்த வெள்ளத்திற்கிடையே மக்கள் நடமாட்டம்பற்றியும் மனத்தில் ஒத்திகை பார்க்கின்றான். அம்மனக்காட்சி நிகழ்வான போது மிகுந்த அதிர்ச்சிக்குள்ளாகின்றான். வேலையின்மைப் பிரச்சனையுடன் தான் வாழும் இடத்தில் நிகழும் வன்முறைச் சம்பவம் அவனுக்குள் பீதியையும், அச்சத்தையும் உண்டாக்கின. இதனால் பரபரப்பு உணர்வுக்கு ஆளாகின்றான். இப்பரபரப்பு உணர்வு அவனுள் மனப் பிரமையைத் தோற்றுவிக்கிறது. "மறுபடியும் ஓடலாமா, ஓட ஓட விபரீதம் நடந்தது போல வீறிடலாமா. ஒரே ஓட்டம் எல்லோரின் கவனமும் அவன் மேல் திரும்ப வேண்டும் செய்யலாம். இன்னொரு கொலை நிகழ்ந்த மாதிரி வதந்தி பரப்பலாமா. ஓட ஆரம்பித்தான் ஏதாவது கத்த வேண்டும் என்று தோன்றியது."[5] இத்தகைய மனப்பிரமை காதல் மீதும் ஏற்படுகிறது. வேலையில்லாததால் தான் தன் காதலி மல்லிகாதன்னைக் கௌரவக் குறைவாக மனத்தில் நினைப்பதுண்டு என்று தனக்குள்ளேயே எண்ணுகின்றான். இம்மனப்பிரமையால் இருவரின் உறவும் நெடுநாள் நீடிக்கவில்லை. இதனால் மேலும் தனிமைப்படுத்தப் படுகின்றான். மனிதர்கள் எல்லோரும் தன்னை விட்டு விலகிப் போவதாக எண்ணுகின்றான். அதற்கான காரணத்தை ஆராய்ந்து அவனால் இச்சூழ்நிலையிலிருந்து விடுபட முடியவில்லை. மேலும் அதற்கான மாற்றுவழியைப்பற்றியும் சிந்திக்க முடியவில்லை. தாயும் அவனை நீண்ட

நாட்களாகத் தங்கி விட்ட விருந்தாளியைப் போல எண்ணும் போது வெறுப்படைகின்றான்.

இதற்கிடையில் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்களுக்குத் தங்கள் மொழியில் பேசுவது அம்மண்ணில் பிரச்சினையை ஏற்படுத்தி விடுகின்றது. வெங்கட்டய்யாவின் நண்பன் கந்தசாமி அலுவலகத்தில் உள்ளூர் பாஷையில் பேசும்படிக்கூறுகின்றான். மேலும் தம் தாய்மொழியில் பேச வேண்டாம் என வற்புறுத்துகின்றான். அப்போது தான் வெங்கட்டய்யா அந்நிய மண்ணில் தங்களது வீட்டுக்குப் பாதுகாப்பு இல்லையென்பதை உணர்கின்றார். மேலும் அவர் தங்களுக்கு எதிராகத் தொடர்ந்து நிகழும் வன்முறைச் சம்பவங்கள் அவரது வாழ்வு பற்றிய சிந்தனையை மாற்றுகின்றன. இதனால் வாழ்க்கை நிலையில்லாதது என்றும் வாழ்க்கையை அற்பமாய்ப் பார்க்கும் எண்ணத்தையும் தருவித்துக் கொள்கிறார். ஆந்திர நாட்டில் பாதுகாப்பு உணர்வையும் இழந்து வாழ்க்கையின் மீதான பற்றையும் இழந்து காணப்படுகிறார். இவையே அவரை அந்நிய மண்ணில் தொடர்ந்து வாழ்தல் பிரச்சினையை ஏற்படுத்தி விட்டது.

இந்நிலையில் தமிழ் நாட்டுக்குத் தண்ணீர் தருவதில் அம்மாநிலத்தில் எதிர்ப்பு ஏற்படுகிறது. இதனால் ஜீப்லி நகரில் சிலைகள் உடைக்கப்பட்டன. வன்முறையைத் தொடர்ந்து நகரில் பந்த் அறிவிக்கப்பட்டது. இதனால் தெலுங்கு நாட்டில் முப்பது வருடங்கள் வாழ்ந்த தமிழர்களுக்கும் தொடர்ந்து வாழ்ந்ததில் பிரச்சினை ஏற்பட்டது. அவர்கள் அச்சத்துடனும் பீதியுடனும் வீட்டிற்குள் முடங்கி இருந்தார்கள். இச்சூழ்நிலையில் மகேந்திரன் தன் இறப்பை மற்றவர்களுக்குத் தெரிய வைக்க விரும்பினான். 'பந்த்' என அறிந்தும் ஊருக்குள் நடந்து செல்கிறான். போலீஸ்காரனின் லத்தி அவனின் உடம்பைச் சிறிது பதம் பார்த்தவுடன் அவனுக்குள்ளிருக்கும் எதிர்ப்புணர்வுக்குச் செயலுருவம் கொடுக்க விழைகின்றான். ஆனால் மனத்தெம்பு இல்லாததால் தன்னையே நொந்து கொள்கிறான். கால்களைத் தலையில் உக்கிரமாய் உதைத்து ரத்தம் கசிவதைப் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் அவனுக்குள் தோன்றுகிறது. இங்ஙனம் அவனுக்குள் ஏற்பட்ட எண்ணம் கோழைத்தனத்தின் வெளிப்பாடாகும். அவன் தான் விரும்புகிற காரியத்தைச் செய்ய இயலவில்லையே என எண்ணி வருந்துகின்றான். மகேந்திரனின் இந்நிலை அடக்கப்பட்ட மனித உணர்வின்

வெளிப்பாடாகவே காணமுடிகிறது. மகேந்திரனுக்கு நண்பர்கள் இருந்திருந்தால் அவனுக்குள் பொங்கி வரும் எண்ணங்களைப் பரிமாறிக் கொண்டிருப்பான். ஆனால் தனிமைப்பட்ட சூழ்நிலையில் தொடர்ந்து இருப்பதால் சலிப்பு ஏற்படுகிறது. இதனால் அவனது செயல்முறையில் மாற்றம் ஏற்படுகிறது. நேரம் கழித்து வருவதும், குடித்து விட்டு வருவதும், விசாரித்தால் 'சமைச்சு வச்சுட்டுத்தானே போனேன்' என்று சொன்னதையே சொல்லுவதுமாய் இருக்கின்றான். தமிழர்களின் இருப்பு அந்நிய மண்ணைச் சேர்ந்தவர்களுக்கு எரிச்சலைத் தந்தது என்றால், இவனின் இருப்பு குடும்பத்திலுள்ள அனைவருக்கும் வெறுப்பைத் தந்தது. இதனைப் புரிந்து கொண்ட மகேந்திரன் இறுதியில் "என்னைச் சாவு கொண்டு போக மாட்டேங்குதே"[6] என்று மரண ஓலம் எழுப்புகிறான். முடிவுற்ற வேதனையும், தன்னைத்தானே தேவையற்றவனாக எண்ணுவதும், எதிலும் ஈடுபாடு இல்லாமல், தெளிவு இல்லாமல் இருப்பதும், சிந்தனையில் எந்தவித வளர்ச்சியுமில்லாமல் தற்கொலை பற்றிய சிந்தனையிலேயே வளர்ச்சி அடைதலும் ஆகிய இயல்புகள் அந்நியப்பட்டவனின் வெளிப்பாடாகும். இக்கூற்று மகேந்திரனின் அந்நியப்பட்டுப் போன நிலையை நமக்குத் தெளிவாக விளக்குகிறது.

மகேந்திரனின் தகப்பன் வெங்கட்டய்யா சந்திக்கும் பிரச்சினை தொடர்ந்து வாழ்தல் பிரச்சனையைத் தந்தது. வீட்டின் முன் நீர் தேங்கியிருப்பது பற்றி அண்டை வீட்டாரிடம் குறை கூறுகிறார். "அவனோ நான் இங்கு பொறந்து வளர்ந்தவன். எங்கிருந்தோ வந்து வாடகைக்குக் குடியிருக்கிற உனக்கு இந்த அதிகாரமெல்லாம் வேண்டியது இல்லே"[7] என்று கூறுகின்றான். அப்போதுதான் தான் முற்றிலும் ஒதுக்கப்பட்டிருப்பதை உணர்கிறார். எதிர் வீட்டில் இருப்பவர்களுடன் இயல்பாய் இருக்க முடியாத நிலை உருவாவதை எண்ணி வருந்துகிறார். மேலும் ஊரில், பொங்கல் வாழ்த்து விற்றகடை தீக்கிரையாக்கப்பட்டது. பொங்கல் வாழ்த்து வரும் அட்டை தங்களைத் தமிழன் என்று அடையாளம் காட்டிக் கொடுத்து விடும் என எண்ணி பலர் அனுப்புவதற்கு மறுப்பு தெரிவித்து விட்டனர். இதற்கிடையில் மகேந்திரனின் தாய்க்கோ, தாலியைக் கழற்றிய பின்பு தான் வெளியே போக முடியும் என்ற நிலை ஏற்படுகிறது.

வாழும் இடத்தில் புறக்கணிக்கப்பட்ட நிலையிலிருக்க, மகேந்திரனோ "தான் வேலையில்லாதவன் வெட்டி சோத்துக்கு

உட்காந்திருக்கிறவன். வீட்ல சமையல் வேலை பண்றவன்........ என்ன சொல்ல இருக்கு........ எனக்கு சாவுவர்லே........இன்னும் சாவு வர்லே" [8] என்று கூறி அழுகிறான். இதனால் தடுமாற்றமும் துயரமும் கொண்டு நிலை குலைந்த நிலையில் காணப்படுகின்றான். அந்நியப்பட்டு போன மண்ணில் தொடர்ந்து வாழ்தலுக்குரிய பிரச்சினைக்ள முளைத்துக் கொண்டு வரும் போதெல்லாம் தன் இயலாமையைக் கோபாவேசத்துடன் வெளிப்படுத்துகின்றான். காலம் தன்னை மட்டும் அப்படியே விட்டு விட்டிருக்கிறது. ஒரு அடி கூட நகர விடவில்லை என்று கூறிக் குமுறுகின்றான். தனது வளர்ச்சிக்குத் தடைநிர்ணயிக்கப்பட்ட விதியா அல்லது எது என்று அறிய முடியாத நிலையில் தவிப்பதைக் காணமுடிகிறது. இதற்குக் காரணமானவற்றை ஆராய்ந்து அறிந்து கண்டறியும் திறன் அற்றவனாய்க் காணப்படுகின்றான். தன்னையும் மீறி தன் செயல்களைக் கட்டுப்படுத்தும் சக்தி எது என அறிய முடியாது ஆத்திரமடைகின்றான்.

இதற்கிடையில் வெங்கட்டய்யா மகேந்திரனின் வேலையின்மைப் பிரச்சனையாலும் வாழும் இடத்தில் ஏற்பட்ட புறக்கணிப்பினாலும் மகேந்திரனைத் திருப்பூர் பனியன் கம்பெனிக்கு வேலைக்கு அனுப்புகிறார். இது கயிறு அறுந்த பட்டம் போல் ஒரு வகையான தத்தளிப்பினால், ஏற்பட்ட முடிவாகும். வேர் வேண்டும். உறவு என்ற வேர் பல சிக்கலுடையதாகயிருந்தாலும் எந்த ஒரு மனிதனுக்கும் ஒரு காலகட்டத்தில் தேவைப்படுகிறதைக் காணலாம். அந்நிய மண்ணில் ஏற்பட்ட தொடர்ந்து வாழ்தல் பிரச்சினையே, அவர்களைத் தங்களுடைய வேர்கள் பற்றிச் சிந்திக்க வைத்தது எனலாம். "வேர்களைத் தழுவிக் கொள்வது எவ்வளவு குளுமையானது. உறவுகள் எப்படியெல்லாம் ஆகிப் போனார்கள் என்று தேடுவது கூட சுவாரஸ்யமானது" [10] தான் என்ற எண்ணத்திற்கு ஆளாகின்றனர். டார்வினின் கோட்பாட்டின்படி வலிமையுள்ளது தான் வாழும் (Survival of the Fittest) என்ற கருத்து பொருந்தி வருவதைக் காணலாம். அந்நிய மண்ணில் வலிமையற்றவர்களாக, தனிமைப்படுத்தப்பட்டவர்களாக, புறக்கணிக்கப் பட்டவர்களாகத் தொடர்ந்து வாழ முடியாத நிலையில் இருக்கும் தமிழர்கள் தங்கள் சொந்த ஊருக்கு அகதி என்ற பேரில் வருகின்றனர்.

இங்ஙனம் மகேந்திரனின் வேலையில்லாப் பிரச்சினையும், தாய் மொழியில் பேசமுடியாத சூழலும், தாலி அணிந்து வெளியே செல்லமுடியாத நிர்பந்தமும் அண்டை அயலாருடன் இயல்பாகப்

பழகமுடியாத தன்மையும் இணைந்து அவர்களை அம்மண்ணில் அந்நியப்பட்டுப் போகக் காரணங்களாக அமைந்து விடுகின்றன.

**அடிக்குறிப்புகள் :**


1. E.S. PATHAK, "The Alienated self in the Novels of Anita Desai", **Indian Women Norelists Set I**, Comp. Dhawan. R.K. New Delhi prestige Books, 1991
2. The New encylopedia Britanica : Macropedia, P. 574.
3. சுப்ரபாரதி மணியன், சுடுமணல் ப. 3
4. மேலது, பக். 6
5. மேலது, பக். 18
6. மேலது, பக். 48
7. மேலது, பக். 52
8. மேலது, பக். 54
9. மேலது, பக். 64
10. மேலது, பக். 61

# சிவசங்கரி நாவல்களில் பெற்றோர்-குழந்தை உறவு முறைகள்

திருமதி பா. நாகலக்ஷ்மி

## முன்னுரை

ஒருவன் வாழ்வின் உடல் நலத்தோடு உள்ள நலத்தையும் பெறிறிருத்தல் இன்றியமையாதது. இரண்டில் எது குறைந்தாலும் இடர்ப்பாடே மிகும். "உளநலத்திற்கான அடிப்படைகளை அமைத்துத்தர இறுதியான சிறந்த வாய்ப்பாக விளங்குவது குழந்தைப் பருவமே. ஒருவரது ஆளுமையினைக் குழந்தைப் பருவம் பெருமளவிற்குத் தீர்மானிக்க முடியும் என்பதை உளவியலார் அனைவருமே இன்று ஏற்றுக் கொள்கின்றனர்!" [1]

"வளரும் குழந்தையின் ஆளுமை வளர்ச்சியில் முக்கிய பங்கு பெறும் காரணியாக அமைவது பெற்றோர்-குழந்தை உறவு முறையாகும். உளவியலாளர்கள் இவ் உறவிற்கு அதிக அளவு முக்கியத்துவம் அளிக்கின்றனர்." [2] பெற்றோர்களுக்கும் அவர்களது குழந்தைகட்கும் இடையே நிலவும் உளவியலடிப்படையிலான உறவே பெற்றோர்-குழந்தை உறவு முறை எனப்படுகிறது. "இவ் உறவு உளவியல் நியதிகளின் அடிப்படையில் உரிய முறையில் அமையின் குழந்தை வாழ்நாள் முழுவதும் உளநலம் பெற்றுத் திகழ வாய்ப்பு அதிகரிக்கிறது. ஆனால், இத்தகைய உளவியல் நியதிகள் புறக்கணிக்கப்படும் வேளைகளில் குழந்தை வாழ்நாள் முழுவதும் உளநலம் குன்றியதாக வருந்த வேண்டிய நிலை ஏற்படுவதுண்டு" [3] என்கிறார் உளவியலறிஞர் தா.ஏ. சண்முகம்.

## உளநலமற்ற பெற்றோர்-குழந்தை உறவு முறைகள்

உளவியல் நியதிகளின் அடிப்படையில் அமையாத பெற்றோர்-குழந்தை உறவு முறையே, உளநலமற்ற பெற்றோர்- குழந்தை உறவு முறை என இங்குச் சுட்டப்படுகிறது. "இத்தகைய உறவு முறைகள் 19 வகைகளில் அமைவதாக உளவியலறிஞர்கள் கண்டுள்ளனர். இந்த 19 வகையான உறவு முறைகளையும் நான்கு பிரிவுகளாகப் பிரிக்க இயலும்.

1. புறக்கணித்தல் (Rejection).
2. மிகையாகப் பாதுகாத்தல் (Over protection).

3. ஆதிக்கம் செலுத்தலும் அதிகமாகக் கட்டுப்படுத்தலும் (Domination and over protection).

4. அடிபணிதல், செல்லம் கொடுத்தல் (Submissiveness and indulgence).

இவ்வகை உறவு முறைகள் சில வேளைகளில் கலந்து காணப்படுதலுமுண்டு"[4]

மேற்கூறப்பட்ட நான்கு வகையான உறவு முறைகளையும் சிவசங்கரி நாவல்களில் (முதல் கோணல், அவன், பிராயச்சித்தம்) இனங்காண முடிகிறது. அவற்றுள் முதலிரண்டு உறவுமுறைகளை இக்கட்டுரை எடுத்துரைக்க முற்படுகிறது.

## புறக்கணித்தல்

"நம் இல்லங்களில் உள்ள குழந்தைகளில் நான்கில் ஒரு பங்கினர் புறக்கணிக்கப்பட்டவர்களாக இருக்கின்றனர் என்று பொதுவாக உளவியலறிஞர்களால் நம்பப்படுகிறது."[5] தாம் பெற்ற குழந்தையிடம் தாய், தந்தையர் அன்பு செலுத்துவதும், பாசத்தை மழையாகப் பொழிவதும் உலகில் காணப்படக்கூடிய இயல்பான நிகழ்ச்சிகளே. அன்போடு, ஆதரவோடு வளர்க்கப்படும் குழந்தை நல்ல குடிமகனாக உருவாக வாய்ப்புண்டு. அனால் அன்பைப் பெற முடியாத சூழலில், புறக்கணிக்கப்பட்ட நிலையில் வளரும் குழந்தைகள் வளர்ந்த நிலையில் தாமும் கெட்டு, சமுதாயத்தையும் சீரழிக்கின்றன. இதற்குத் தக்க எடுத்துக்காட்டுக்களாகப் பாண்டியனும், (முதல் கோணல்) பரத்தும் (அவன்) அமைகின்றனர். இருவருமே குழந்தைப் பருவத்தில் தூய்மையான அன்பைப் பெறாதவர்கள்; புறக்கணிக்கப்பட்டவர்கள்; பிறருடைய கடுமொழிகளையும் சுடுபார்வைகளையுமே பெற்றவர்கள்.

பாண்டியன் மாருதி படத் தயாரிப்பு நிறுவன உரிமையாளர் தணிகாசலத்தின் ஒரே மகன். "எனக்கு அம்மா இல்ல சம்பத்... நான் பொறந்த அன்னிக்கே செத்துட்டாங்களாம்...... அப்பா? அ இருக்காரு! ஆனா அவருக்கு படம் எடுக்கவும், லாபகரமா அவைகளை விநியோகிக்கவும், பணத்தைப் பெருக்கவும்தான் நேரம் இருக்கே தவிர, என்னைப் பாத்து ரெண்டு நிமிஷம் 'என்ன பாண்டியா- எப்படி இருக்கே?'னு கேட்க அவகாசமே இல்லைடா"[6] என்று பாண்டியன் தன்

நண்பன் சம்பத்திடம் கூறும் கூற்றால், புறக்கணிக்கப்பட்ட சூழலில் அவன் மனம் வெம்பி வாடுவதை உணர முடிகிறது.

பள்ளிக்கூடத்திலும் பாண்டியன் ஆசிரியர்களால் புறக்கணிக்கப் படுகிறான். ஏழாம் வகுப்பிலிருந்து எட்டாம் வகுப்பிற்குச் சென்ற அன்று ஆசிரியர், "கடவுளே நீ மறுபடி வந்து விட்டாயா? உன்னை உன் அப்பா கொடைக்கானல் அல்லது ஊட்டி கான்வெண்டில் சேர்க்க நினைத்திருக்கிறார் என்று கேள்விப்பட்டேனே? அந்த மாதிரி உயர்ந்த பள்ளிகளுக்குப் போவதை விட்டு விட்டு இங்கு ஏன் வந்தாய் பாண்டியா? எங்கள் கழுத்தைத் தொடர்ந்து அறுக்கவா"[7] எனச் சாடுகிறார். அதனைக் கேட்டுச் சில மாணவர்கள் சிரிக்கிறார்கள். ஆசிரியரின் வெறுப்புக் கலந்த புறக்கணிப்பும், உடன் பயிலும் மாணவர்களின் எள்ளற் சிரிப்பும் பாண்டியனைக் காயப்படுத்துகின்றன.

ஈஸ்வரும், நளினியும் காதல் திருமணம் புரிந்தவர்கள். எனினும் மகன் பரத்திற்கு இரண்டரை வயதாகும் போது, நளினி கணவனையும், குழந்தையையும் விட்டுப் பிரிந்து இன்னொருவனுடன் சென்று விடுகிறாள். சமுதாயத்தில் 'ஓடிப் போதல்' எனக் கேவலமாக முத்திரை குத்தப்படும் இந்நிகழ்ச்சி ஈஸ்வரை மிகவும் பாதிக்கிறது. அப்பாதிப்பு தாய் புறக்கணித்த குழந்தையைத் தந்தையாகிய தான் சிறப்பாக வளர்க்க வேண்டும் என்ற எண்ணத்தைச் சுத்தமாக துடைத்துவிடுகிறது. எனவே அவனும் குழந்தையைப் புறக்கணிக்கிறான். குழந்தையைத் தன் பெற்றோரிடம் ஒப்படைத்துவிட்டு வெளிநாடு செல்கிறான்; பரத்திற்கு உரிய பணத்தை அனுப்புவதோடு தன் கடமை முடிந்தது என்ற வட்டத்தைத் தன்னைச் சுற்றி உருவாக்கிக் கொள்கிறான். 'அம்மா இல்லையே' என்ற ஏக்கத்திலும், 'அம்மா பேச்சை எடுத்தால் அப்பா ஏன் ருத்ர தாண்டவமாடுகிறார்' என்ற வினாவிலும் வளர்கிறான் பரத்; தன்னை வளர்க்கும் தாத்தா, பாட்டியிடமும் அன்பைப் பெறாது தவித்துப் போகிறான். ஈஸ்வரின் பெற்றோர் தம்முடைய பிற பேரக் குழந்தைகளைக் கொஞ்சுகிறார்கள்; பரத்தின் மீது கோபப்படுகிறார்கள்.

"மேல வந்து விழாதடா, எருமை மாடு"[8]

"முழிக்கிறதைப் பாரு திருடனாட்டம்? சரியான முண்டக்கண் அந்த ஓடுகாலி மாதிரியே"[9]

என்று 'ஊசி ஊசியாய்' வார்த்தைகளையும், 'வலிக்க வலிக்கச்' செய்கைகளையும் அனுபவித்த அந்தப் பிஞ்சு உள்ளம் பேதலிக்கிறது.

"பெற்றோர் தங்கள் குழந்தைகளை வெளிப்படையாக வெறுக்க வேண்டுமென்று கருதாமலேயே தம்மையும் அறியாமல் வெறுக்கலாம்."[10] மாதவன்-ரேவதி தம்பதியர் (அவன்) செய்வது இத்தகு தவறினைத்தான். இவர்கட்கு இரண்டு பிள்ளைகள். மூத்தவள் ஸ்ந்த்யா, அடுத்தவன் ப்ரேம். ரேவதி எப்போதும் ஸ்ந்த்யாவையும், ப்ரேமையும் ஒப்பிட்டுப் பேசி, ஸந்த்யாவைப் புகழ்ந்து, ப்ரேமின் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டுகிறாள், பெற்றோர் தம் குழந்தையை இன்னொரு குழந்தையோடு (அதுவும் தம்முடைய குழந்தையாக இருந்தாலும்) ஒப்பிட்டு ஒன்றை உயர்த்தியும். இற்றொன்றைத் தாழ்த்தியும் பேசுவது மிகவும் தீங்கு பயப்பதாகும். தாழ்த்திப் பேசப்படும் குழந்தை, பெற்றோர் தன்னைப் புறக்கணிப்பதாகவே எண்ணி வருந்துகிறது.

"ஓ! ஸ்டாப் இட் மா...... கம்பேர் பண்ணாதீங்க, எனக்குப் பிடிக்காதுனு சொல்லிட்டே இருக்கிறது காதுல விழலியா"[11] எனக் கண்கள் கலங்கப் ப்ரேம் பேசுவது மேற்கூறப்பட்ட கருத்தை அரண் செய்கிறது.

"மற்ற குழந்தைகளோடு ஒப்பு நோக்கி அதைத் தாழ்த்திப் பேசுவதும், குற்றத்திற்காகக் கடுமையான தண்டனை விதிப்பதும் ஒரு சிலருடைய பழக்கமாக இருக்கின்றன. இவையெல்லாம் குழந்தைக்குப் பாதகமாகவே முடியும்"[12] என்ற கூற்று இவண் கருதத் தக்கது.

பணத்தாலும், பொருளாலும் எந்தக் குறையுமின்றித் தம் குழந்தைகளை அன்புடன் வளர்க்கும் பெற்றோரும், சில விஷயங்களில் அவர்களைப் புறக்கணிக்கின்றனர். பிள்ளைகளின் விருப்பு, வெறுப்புகளை கருத்துக்களை உணர முற்படாது தமது விருப்பு. வெறுப்புகளை, கருத்துக்களை அவர்கள் மீது திணிக்கின்றனர். பிள்ளைகளின் நிறைகளையும் திறமைகளையும் பாராட்டாது, குறைகளையும் திறமையின்மைகளையுமே பெரிதாக்கிப் பேசுகின்றனர். இதுவும் ஒருவகையான புறக்கணிப்பேயாகும். இத்தகைய புறக்கணிப்பிற்கு உள்ளான ப்ரேம்,

"என்னுடைய ப்ளஸ் பாயிண்ட் என்ன என்று புரிந்து தட்டிக் கொடுக்காமல், அவள் மாதிரியே நீயும் இரு என்றால் என்ன அர்த்தம்?"[13] என நினைத்து வருந்துகிறான்.

"நம்முடைய குழந்தையை நாம் பாராட்டும்போது, அதற்கு ஒரு பெருமிதமும் நிறைவும் ஏற்படுகிறது. மேலும் மேலும் நாம் பாராட்டு பெற வேண்டும் என்ற உந்துதல் குழந்தைக்கு ஏற்படும். இந்த வகையான நேரடி அணுகு முறையை (Positive approach) மேற்கொண்டால் பலன் அதிகம் இருக்கும்" [14] என்ற கருத்து நோக்கத்தக்கது.

புறக்கணிப்பின் விளைவுகள் பற்றி அறிவது இன்றியமையாதது. "புறக்கணிப்புவகையமைப்பிற்கு ஏற்ப, அமைதியான முறையிலோ (passive) அன்றி ஆக்கிரமிப்பு முறையிலே (aggressive) குழந்தைகள் எதிர்வினை செய்கின்றன" [15] என்று உளவியலார் கூறுகின்றனர். "புறக்கணிக்கப்படும் குழந்தைகள் சில தங்கள் பெற்றோரிடம் வெறுப்பும் பகைமையும் கொள்கின்றன" [16] என்றும் உளவியலார் உரைக்கின்றனர். இத்தகைய தீய விளைவுகளைப் பாண்டியன், ப்ரேம் ஆகியோரிடமும் காணமுடிகிறது.

பெற்றவளின் அணைப்போ, தந்தையின் கவனிப்போ இன்றி ஆதரவற்ற சூழலில் வளர்ந்த பாண்டியனிடம் முரட்டுக் குணமும், பிடிவாதமும் மலிந்து கிடந்தன. "முரட்டு குணம் உண்டு, அடாவடி உண்டு, அடுத்தவர்களை மதிக்காத அலட்சியம் உண்டு" [17] என்கிறார் ஆசிரியர். பாண்டியன் வகுப்பறையில் தன்னைத் திட்டும் ஆசிரியர்களைப் பழிவாங்குகிறான்; தன்னை ஆசிரியர் திட்டும்போது சிரித்த மாணவர்களையும் பழிவாங்குகிறான். கொடைக்கானலில் குறிஞ்சியாண்டவர் கோவிலுக்கு வழி கேட்ட மூதாட்டிக்குத் தவறான வழியைச் சொல்கிறன், வளர்ந்து பெரியவனான பின்னரும் முரட்டுக் குணம் கொண்டவனாகவே இருக்கிறான், தன் நண்பன் சம்பத்தின் உதவியால் வேலையில் சேர்ந்து ரூ.38,000த்தோடு தலை மறைவாகிறான். முதல் கோணல் முற்றும் கோணல் என்பதைப் பாண்டியன் வளர்ப்பில் சிவசங்கரி புலப்படுத்துகிறார்.

ஓடிப்போன தாயை, அன்பு செலுத்தாத தந்தையை, அலட்சியப்படுத்தும் தாத்தா பாட்டியை வெறுத்த பரத், இறுதியில் இந்தச் சமுதாயத்தையே வெறுக்கிறான், தனித் தீவாகவே மாறி விடுகிறான், போதைமருந்துக்கு அடிமையாகி மன நோய்க்கு உள்ளாகிறான்.

ப்ரேமும் போதை மருந்துப் பழக்கத்திற்கு ஆளாகிப் பெற்றோரை வெறுத்து வீட்டை விட்டுச் செல்கிறான்.

## மிகையாகப் பாதுகாத்தல்

சிவசங்கரி நாவல்களில் மிகையாகப் பாதுகாக்கப்பட்ட குழந்தையாகச் சத்யாவைக் கூறலாம். "இத்தகைய நிலைகளில் தந்தையைக் காட்டிலும் தாயே பெரிதும் ஈடுபடுகிறாள்" [18] என்று உளவியலார் கூறுவதற்கேற்பச் சத்யாவின் தாய் மதுரா அவனை மிகையாகப் பாதுகாப்பதனைப் பிராயச்சித்தம் நாவல் உணர்த்துகிறது. சத்யா பள்ளி செல்லும் பிள்ளையாக வளர்ந்த பின்னரும் அவனைக் கைக்குழந்தையாகவே கருதி வளர்க்கிறாள், மதுரா.

"அவள் சிந்தனை, அவள் கற்பனை, அவள் பேச்சு என்று அன்றாடம் செய்யும் காரியங்கள் கூட மகனைச் சுற்றித்தானே இருக்கின்றன" [19] என்கிறார் ஆசிரியர். சத்யா பள்ளிக்குச் செல்லத் தொடங்கிய ஆறு ஆண்டுகளாக அவனைப் பள்ளிக்குக் கொண்டு விடுவதையும் கூட்டி வருவதையும் தானே செய்கிறாள் மதுரா. "நீங்க எதுக்காக மம்மி தினமும் இரண்டு வேளையும் வந்து சிரமப்படறீங்க?" [20] எனச் சத்யா கேட்பதையும் அவள் பொருட்படுத்தவில்லை. "சத்யாவை பள்ளியில் கொண்டு விட்டு கூட்டி வருவதை விட அப்படி என்ன தலை போகிற வேலை?" [21] என்பது மதுராவின் எண்ணம். தன்னைத் தன் தாய் இவ்வாறு நடத்துவதைச் சத்யா விரும்பவில்லை. "இவைகள் தனித்திருப்பவையாக மகிழ்வற்றவையாக, பிறரிடமிருந்து விலகியவையாக வளருகின்றன" [22] என மிகையாகப் பாதுகாப்படும் குழந்தைகளைப் பற்றி உளவியலார் உரைக்கின்றனர். சத்யாவும் அவ்வாறே வளருவதை நாவலில் அறிகிறோம். ஆயினும் பிறரிடமிருந்து விலகி, தனித்து நிற்கும் சத்யாவின் குணநலத்திற்கு அவனது வளர்ப்பு மட்டுமே காரணமன்று. இயல்பாகவே அவனிடம் இக்குணங்கள் மலிந்து காணப்படுகின்றன. அவன் தன் தந்தையைப் போலவே உலக வாழ்வில் பிடிப்பின்றிச் சமுதாயத் தொண்டு ஆற்ற வேண்டும் என்ற எண்ணமுடையவன்.

## முடிவுரை

"குழந்தைப் பருவத்தில் உருவாகும் ஆளுமையினை ஏனைய பருவங்களில் வெகுவாகத் திருத்தியமைக்க இயலுவதில்லை என்பதை உளவியல் ஆராய்ச்சிகள் சில எடுத்துக் கூறுகின்றன." [23] குழந்தைகளைப் புறக்கணித்தலும், மிகையாகப் பாதுகாத்தலும் தீய விளைவுகளை ஏற்படுத்தும் என்பதை சிவசங்கரி நாவல்கள் உணர்த்துவதை அறிய முடிகிறது. குழந்தைப் பருவம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த பருவம்

என்பதும், குழந்தை வளர்ப்பு மிகவும் பொறுப்பான முறையில் நிறைவேற்றப்பட வேண்டிய கடமை என்பதும் தெளிவு.

**அடிக்குறிப்புகள் :**

1. தா.ஏ. சண்முகம், உளநலவியல், ப. 78
2. மேலது, ப. 121
3. மேலது, ப. 121
4. மேலது, ப. 122
5. மேலது, ப. 122
6. சிவசங்கரி, முதல் கோணல், ப. 47
7. மேலது, பக். 40-41
8. சிவசங்கரி, அவன், ப. 38
9. மேலது, ப. 38
10. தா.ஏ. சண்முகம், உளநலவியல், ப. 122
11. சிவசங்கரி, அவன், ப. 11
12. பெ. துரன், குழந்தை மனமும் அதன் மலர்ச்சியும், ப. 21
13. சிவசங்கரி, அவன், ப. 12
14. கலாவல்லி அருள், குழந்தை வளர்ப்பில் சில நுட்பங்கள், மங்கையர் மலர் : செப்டம்பர் - 2000, ப. 193
15. தா.ஏ. சண்முகம், உளநலவியல், ப. 123
16. மேலது, ப. 123
17. சிவசங்கரி, முதல் கோணல், ப. 105
18. தா.ஏ. சண்முகம், உளநலவியல், ப. 124
19. சிவசங்கரி, பிராயச்சித்தம், ப. 156
20. மேலது, ப. 147
21. மேலது, ப. 147
22. தா.ஏ. சண்முகம், உளநலவியல், ப. 124
23. மேலது, ப. 78

# தமிழில் குற்றவியல் நாவல்கள்

கி. லோகேஸ்வரி

மனித வாழ்வு என்பது அன்றில்இருந்து இன்றுவரை மாற்றத்துக்கு உட்படுவதாகும். மாற்றத்திற்கு உட்படும் மனிதவாழ்வின் உள்ளிலிருந்து இலக்கியப் படைப்புகள் எழுகின்றன. எனவே இலக்கியப் பொருளிலும் வடிவிலும் மாற்றம் இயல்பாகிறது. காலத்தின் கருத்திற்கு ஏற்ப சங்கப் பாடல்கள், அற இலக்கியங்கள், பக்திப் பனுவல்கள், காவியங்கள் சித்தாந்த இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள், புதுக்கவிதைகள், சிறுகதைகள் நாவல்கள் என இலக்கியம் பல்வேறு வடிவங்கள் தோன்றியுள்ளன. நாவல் இலக்கிய யாப்பில் காணப்படும் பலவகையில் குற்றவியல் நாவல்கள் ஒரு வகையாகும்.

## குற்றவியல் நாவல்-விளக்கம்

குற்றங்களின் தன்மைகள் பற்றிய தகவல்களின் தொகுதி 'குற்றவியல்' எனப்படுகிறது. குற்றவியல் என்ற சொல்லின் கீழ் அனைத்துவகைக் குற்றங்களும் அடங்குகின்றன. இக்குற்றங்களை மையமாகக் கொண்டு எழுதப்படும் நாவல்கள் குற்றவியல் நாவல்கள் (Crime Novels) என்ற பெயரைப் பெறுகின்றன. 'க்ரைம்' என்ற சொல்லுக்கு ஆக்சுபோர்டு ஆங்கில அகராதி "சட்டத்திற்குப் புறம்பான செயல்" [1] என்றும் "சட்டத்தினால் கடுமையாகத் தண்டிக்கப்படக் கூடிய செயல்" [2] என்றும் விளக்கம் தருகிறது.

குற்றங்கள் அவற்றின் தன்மைக்கு ஏற்பப் பலவகைகளாகப் பிரிக்கப்படுகின்றன. வன்முறைக் குற்றம் (Violent Crime) வன்முறையில்லாக் குற்றம் (Non-Violent Crime) எனக் குற்றங்களின் தன்மைகளை இருபெரும் பிரிவுக்குள் அடக்கலாம்.

"நாவல் என்பது மனித உறவுகள், எண்ணங்கள், செயல்கள் ஆகியவற்றை விளக்கிக் காட்டும் உரைநடையில் அமைந்த நீண்ட கதை என்று வெப்ஸ்டரின் இருபதாம் நூற்றாண்டு புதிய அகராதி விளக்கம் தருகிறது என டாக்டர். ந. பிச்சைமுத்து குறிப்பிடுகிறார்" [3] "உரைநடையில் கதை கூறும் பாங்கில் அமைந்த மனித வாழ்க்கையின் விளக்கமே நாவல்" [4] என்கிறார் எர்னஸ்ட் ஏ. பாக்கர் (Ernest A. Baker) நாவல் என்பது,

"வாழ்க்கையைப் பற்றிய தனி மனிதனின் எண்ணப் பதிவே"[5] என்பர் ஜேம்ஸ்.

பொதுவாகக் குற்றவியல் கதைகள் வாழ்க்கையைப் பற்றிய தனி மனிதனின் நேரடியான எண்ணப் பதிவாகக் கொள்ளவே மிகுதியும் இடமளிக்கின்றன.

## குற்றவியல் நாவல் - இலக்கிய வகை

மேலை நாட்டினர் இவ்வகை நாவல்களை "விதிமுறையிலான இலக்கியங்கள்" (Formula Literature) என்ற இலக்கிய வகைக்குள் அடக்குகின்றனர். அதன் துணை வகைகளாக,

1. துப்பறியும் நாவல்கள் (Detective Novels)

2. குற்றவியல் நாவல்கள் அல்லது மயிர்க்கூச்செரியச் செய்யும் "துணிகரச் செயல் நாவல்கள் (Hard boiled Novels)"[6]

என்ற இரு வகைகளைக் குறிப்பிடுகின்றனர்.

ந. பிச்சமூர்த்தி இவ்வகை நாவல்களை, 'பிக்காரி நாவல்கள்' என்று குறிப்பிடுகிறார். இவர், "பிக்கேரஸ் என்னும் சொல் வீணன் அல்லது போக்கிரி என்று பொருள்படும். இது Picaro என்னும் ஸ்பானிஷ் சொல்லடியாகப் பிறந்தது. 'பிக்கேரஸ்' என்பது தீய ஒழுக்கங்களில் ஈடுபடுகின்ற குற்றவாளிகளின் வாழ்க்கையின் எதார்த்தமான சித்தரிப்பு என்றும், அதில் குற்றவாளிகளின் ஏமாற்று வித்தைகளே ஆர்வமூட்டும் ஆதார மூலங்களாகும் (A novel of Adventure about men of bad characters) என்று நார்த்தோப்ரே கூறுவதாக குறிப்பிடுகிறார்."[7] மேலும் இவர் "பிக்காரி நாவல் ஒரு காலகட்டச் சமுதாயத்தில் வேரோடிக் கிடக்கும் ஒழுக்கக் கேடுகளையும், போலித் தன்மைகளையும் சித்திரிப்பது எனலாம்"[8] என்றும் கூறுகிறார். "பிக்கேரஸ் என்பது, போக்கிரிகள் அல்லது வீணர்களின் வீரதீரச்செயலை விவரிப்பதே ஆகும்"[9] என்று ஆக்ஸ்போர்டு அகராதி பொருள் கூறுகிறது.

குற்றவியல் நாவல்களை, காதிக் தன்மையுடைய நாவல்கள் எனக் குறிப்பிடலாம். க.நா.சு. 18ஆம் நூற்றாண்டின் மத்தியில் திகில் ஊட்டக் கூடிய காதிக் நாவல்கள் மேலை நாடுகளில் மிகுதியும் தோன்றின எனக்

குறிப்பிடுகிறார். ஆக்ஸ்போர்டு ஆங்கில அகராதி 'காதிக்' என்பதற்கு "அற்புதமும் வீரதீரமும் காதலும் இணைந்த, பதினெட்டாம் நூற்றாண்டில் நாவலில் கையாளப்பட்ட ஒருவகை நடை"[10] என்று விளக்கம் கூறுகிறது.

இக்குற்றவியல் நாவல்களை 'நிகழ்ச்சிநாவல்' (Episodic Novel) என்ற வகையிலும் அடக்கலாம். சுப. சேதுப்பிள்ளைக் "கதைக் கட்டமைப்பில் முக்கியமானது ஆச்சரியக் குறி அல்லது மர்மம். இதைத் துப்பறியும் கூறு என்றும் அழைக்கலாம். 'நிகழ்ச்சி நாவல்களில் செயற்பாடுதான் முக்கியம்.' பாத்திரங்கள் கதையமைப்பிற்குத் துணை செய்கின்றனவே"[11] என நிகழ்ச்சி நாவல் இலக்கியத்தன்மை பற்றிக் கூறுகிறார். இவ்விளக்கம் குற்றவியல் நாவல்களுக்கும் பொருந்தி வருவதைக் காணலாம்.

**குற்றவியல் நாவல் - வரலாறு**

இன்றைய தமிழ் நாவல் இலக்கியம் பல மேல்நாட்டு இலக்கியக் கோட்பாடுகளுக்கு உதாரணமாகத் திகழந்து பல்வேறு விதங்களில் வடிவம் கொண்டன. குற்றவியல் நாவல்களுக்கு முன்னோடியாகத் துப்பறி நாவல்களும், அதற்கும் முன்னோடியாக மர்ம நாவல்களும் தோன்றியுள்ளன.

**ஆங்கிலம்**

நவீன துப்பறி கதைகளின் வரலாறு 1841 ஆம் ஆண்டு எட்கர் ஆலன் போ எழுதிய "The Murders in the Rue Margue" என்ற நாவலிலிருந்து தொடங்குகிறது. இந்நாவல் தோன்றுவதற்குச் சில பத்தாண்டுகளுக்கு முன்தான் துப்பறியும் செயல் ஒரு பணியாக்கப்பட்டு, முதல் துப்பறி நிறுவனம் (Detective Bureau) 1817ல் Francois - Eugene என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. அதன் பாதிப்பு 1828லிருந்தே ஆலன் போ வின் மனத்தில் வேரூன்றியது. அதன் தாக்கத்தால் இவர் 1845 ஆம் ஆண்டு எழுதிய "The Mystery of Marie Raget" " The Purtoined Letter" என்ற இரண்டு நாவல்களிலும் அகஸ்டி - டீயூபின் என்ற துப்பறிவாளரைப் படைத்துள்ளார்.

1887-ஆம் ஆண்டு ஆர்தர் கானான்டாயில் எழுதிய "A Study in Scarlet" என்ற படைப்பில் ஷெர்லாக் கோம்ஸ் என்ற துப்பறிவாளர் இடம் பெறுகிறார். ஷெர்லாக் கோம்ஸ் என்ற பாத்திரப் படைப்பு இவருக்குப் பெரும் புகழைத் தேடித்தந்தது. இப்படைப்பிற்கு முன்பு இவர் எழுதிய

முதல் படைப்பு "The Firm of Girdlestone" 1889ல் "The sigh of Four" என்ற இவரது கதை வெளிவந்து அதன்பின் இவரது கதைகள் "Memories of Sherlock Homes" (1894) "Adventure of Sherlock Homes" என்ற தொகுப்புகளாக வெளிவந்தன. "The Hound of the Baskerviller" (1902) படைப்பும் அவருடையதுதான்.

20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் குறிப்பிடத்தக்க பல துப்பறி நாவல்கள் இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் வெளிவந்தன. காட்டாக, செஸ்டர்டன் எழுதிய "Innocence of Father - Brown" (1911) மேரி ராபர்ட் எழுதிய "Rinchart's Circular Stair case" (1908) போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

'ரேய்மண்ட் சாண்டலர்', 'லெஸ.லிஃபோர்ட', 'எட்வர்டு டீ.ஹோக்', 'கோமல் வோல்ரிச்', 'பிலிப் வைலி' போன்றவர்கள் 20ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த குறிப்பிடத்தக்க மர்ம துப்பறி நாவலாசிரியர்கள் ஆவர்.

இத்துப்பறி கதைகளின் தொடர்ச்சியாகக் குற்றவியல் கதைகள் தோன்றாலாயின. குற்றவியல் படைப்பாளர்களுக்குச் சான்றாக 'ஏரல் ஸ்டேன்டீ கார்டர்' அவர்களின் "Ferry Masson Series" மேலும் அகஸ்தா கிறிஸ்டி, ஜேம்ஸ் கார்டி சேஷ் போன்றவர்களின் படைப்புகளைக் குறிப்பிடலாம். ஆங்கில மொழியில் தோன்றி வளர்ந்த இவ்வகைப்படைப்புகளின் தாக்கம் தமிழ் மொழியிலும் இவ்வகைப் படைப்புகள் எழுவதற்கு அடிகோலின.

## தமிழ்

தமிழில் 'நடேச சாஸ்திரி' 1894ஆம் ஆண்டு எழுதிய 'தானவன்' என்ற துப்பறி நாவல் தமிழில் தோன்றிய முதல் துப்பறி நாவல் எனலாம். இவர் தீன தயாளு (1908) என்ற துப்பறி நாவலையும் எழுதியுள்ளார். நடேச சாஸ்திரிக்கு அடுத்து தி.ம. பொன்னுச்சாமி பிள்ளையின் 'கமலாஷி', (1913) என்ற நாவலைக் குறிப்பிடலாம். இவரது 'சிவஞானம்', 'ஞானப் பிரகாசம்', 'விஜய சுந்தரம்', 'ஞானாம்பிகை' ஆகிய நாவல்களும் துப்பறியும் கூறுகள் கொண்டவைகளாக உள்ளன.

ம.கொ.விஜயராகவ முதலியார் 1904ஆம் ஆண்டில் துப்பறியும் கூறுகள் நிறைந்த "ஒரு பெண் வேலை" என்ற நாவலை எழுதியுள்ளார். ஜே. ஆர். ரங்கராஜு அவர்களின் நாவல்களில் துப்பறியும் கோவிந்தன்

படைக்கப்பட்டுள்ளான். 1906இல் வெளியான 'இராஜாம்பாள்' என்றும் இவரது நாவல் "இருபத்தொன்பது பதிப்புகள் வெளிவந்தது."[12] இவர் 'இராஜேந்திரன்', 'சந்திரகாந்தா', 'மோகன சுந்தரம்', 'ஆனந்த கிருஷ்ணன்', 'வரதராஜன்', 'ஜெயரங்கன்' போன்ற துப்பறி நாவல்களைப் படைத்துள்ளார். இவ்வனைத்து நாவல்களிலும் துப்பறிவாளன் கோவிந்தனே. தமிழ்த் துப்பறி நாவல் வரிசையில் குறிப்பிடத்தக்கவர் ரெங்கராஜு ஆவார்.

'குப்புச்சாமி முதலியார்' அவர்களின் நாவல்கள் பெரும்பாலும் ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டவையாகவே இருக்கும். அடுத்து 'வடுவூர் துரைசாமி ஐயங்கார்', 'கோதை நாயகி' அம்மாள் இவர்களைக் குறிப்பிடலாம். விடுதலைக்குப் பின் பத்திரிக்கைத் துறையின் வளர்ச்சியால் வாசகர் எண்ணிக்கை அதிகரித்தது. படைப்பாளர்களும் பெருகினர். 'துப்பறியும் சாம்புவைப்' படைத்த தேவன்., வேலவன்.பி.டி.சாமி போன்றோர் குறிப்பிடத்தக்கவர். இந்நிலையில் தமிழ்வாணன் வரவு தமிழ் துப்பறி நாவல் வளர்ச்சியில் ஒருதிருப்பு முனையாக அமைந்தது எனலாம். தமிழ்வாணன் மொத்தம் 126 நாவல்கள் எழுதியுள்ளார். 'சுஜாதா' என்ற புனை பெயரைக் கொண்ட ரங்கராஜன் தமிழ்வாணனைத் தொடர்ந்து துப்பறி கதைகள் எழுதியவர்களுள் குறிப்பிடத்தக்கவர். துப்பறி கதையின் நடையில் தனிப் பாணியைக் கையாண்டவர்.

சுஜாதாவைத் தொடர்ந்து வரும் 'ராஜேந்திர குமார்', 'ராஜேஷ் குமார்', 'பட்டுக்கோட்டை பிரபாகர்' போன்றோர் துப்பறி கதை அமைப்பில் மிகுந்த மாற்றத்தை உண்டு பண்ணி துப்பறி நாவல்களைக் குற்றவியல் நாவல்கள் ஆக்கிவிட்டார்கள். ராஜேஷ் குமாருக்கு முன்பே ராஜேந்திர குமார், புஷ்பா-தங்கதுரை போன்றோர் 'க்ரைம் நாவல்' எழுதியிருந்த போதும் முதன் முதலில் 'க்ரைம் நாவல்' என்ற பெயரில் எழுதியவரும், 'க்ரைம் நாவல்' என்ற வகையினைத் தோற்றுவித்தவரும் ராஜேஸ்குமார் ஆவார். 'க்ரைம் மன்னன்', 'க்ரைம் சக்கரவர்த்தி' என்ற பெருமைகளைப் பெறுபவரும் அவரே, இவர் ஆயிரத்துக்கும் மேற்பட்ட க்ரைம் நாவல்கள் எழுதியுள்ளார்.

இன்று எண்ணற்ற எழுத்தாளர்கள் 'க்ரைம்' கதைகள் எழுதுகின்றனர். 'சுபா', 'தேவிபாலா', 'ஹம்சாதனகோபால்', 'மதுப்பிரதா', 'பிரபு', 'யோகேஷ்', 'சாரு ப்ரபா சுந்தர்', 'ஆர்னிகா நாசர்', 'இந்திரா

சௌந்திரராஜன்', 'படுதலம் சுகுமாரன்' ஆகியோர் இவ்வகை நாவல்கள் எழுதிவருகின்றனர்.

சமுதாய நாவல்கள் எழுதிக் கொண்டிருந்த 'தாமரை மணாளன்' சரித்திரக் கதையில் புகழ் பெற்ற 'கோவி மணிசேகரன்' ஆகியோர் கூட 'க்ரைம் நாவல்' எழுதியுள்ளனர். இக்குற்றவியல் நாவல்களை மட்டுமே வெளியிடுவதற்காக 'க்ரைம் நாவல்', 'எ நாவல் டைம்', 'பாக்கெட் நாவல்', 'சூப்பர் சுபா', 'உங்கள் ஜூனியர்', 'சஸ்பென்ஸ்', 'கிரேட் நாவல்', 'ஸ்டார்நாவல்', 'எவரெஸ்ட் நாவல்', 'நாவல் நேரம்' முதலிய பத்திரிக்கைகள் வெளிவருகின்றன.

மேற்குறிப்பிட்ட பத்திரிக்கைகள் மட்டுமன்றி 'ராணிமுத்து', 'மாலைமதி', 'சத்யா', 'சுஜாதா', 'மணியன்', 'நவரத்தினம்' போன்ற வெளியீடுகளும் இவ்வகைக் கதைகளை வெளியிடுகின்றன. இவை மட்டுமன்றி வார இதழ்களான 'குமுதம்', 'விகடன்', 'குங்குமம்', 'சாவி', 'இதயம்', 'தாய்', 'ராணி' ஆகியவற்றிலும் இவ்வகை நாவல்கள் தொடர்கதைகளாய் வெளிவருகின்றன. சுருக்கமாகச் சொன்னால் இன்று பிற நாவல்களைவிட (சரித்திர, சமூக, அறிவியல்) குற்றவியல் நாவல்களே மிகுதியும்வெளிவருகின்றன. இளம் வாசகர்களை எளிதில் ஈர்க்கின்றன. கட்டுக்கடங்காத இவற்றின் வளர்ச்சி நிலை ஆய்விற்குரியதாகும்.

## குற்றவியல் நாவல்கள்-கதையமைப்பு

குற்றவியல் நாவல்களின் கதையமைப்பிற்கும் துப்பறி நாவல்களின் கதையமைப்பிற்கும் இடையே சில ஒற்றுமைகளும் அதே சமயம் வேற்றுமைகளும் காணப்படுகின்றன. இரண்டிலும் குற்றமும், குற்றம் கண்டு பிடிக்கப்படும் முறையும் கூறப்படுகின்றன. டாக்டா மா, இராமலிங்கம் தமது 'நோக்கு நிலை' என்ற நூலில் நுவல் பொருள் - பாடு பொருள்பற்றிக் கீழ்கண்டவாறு விளக்கம் தருகிறார்கள். நுவல் பொருளாவது பேசப்படும் பொருள். பாடு பெருளாவது அப்பொருள் பற்றிப் படைப் பாளன் தனி நோக்குச் சிந்தனை. நுவல் பொருள் - (Subject) பாடுபொருள் - Them இக்கருத்தின்படி துப்பறி நாவல்கள் 'குற்றம்' என்ற செயலை நுவல் பொருளாக்கியுள்ளன. குற்றவியல் நாவல்கள் 'குற்றம்' என்ற செயலைப் பாடு பொருளாக்கியுள்ளன.

## நாவல் தொடக்கம்

குற்றவியல் நாவல்களின் தொடக்கம் ஆர்வம் ஊட்டக்கூடிய நிலையில் அமைகின்றன. கதை தொடங்கியவுடனோ தொடங்கிய சில நிமிடங்களோ 'கொலை' அல்லது 'குற்றம்' நடந்துவிடுகிறது அல்லது குற்றம் நிகழ்த்துவதற்கான திட்டம் தொடங்கிவிடுகிறது.

இந்நாவல்கள் சில அறிமுகப்படுத்தலுடனும், சில வருணனைகளுடனும், சில குடும்பப்பாங்குடனும், சில வன்முறைச் செயல்களுடனும், சில உரையாடல் முறையிலும், சில நகைச்சுவையுடனும் தொடங்குகின்றன.

## கதைப் பின்னல் அல்லது உத்தி

குற்றவியல் நாவல்களில் விறுவிறுப்பு உத்தியே கதைப் பின்னல் ஆகிறது. அதாவது பிற நாவல்களில் கதைப்பின்னலில் விறுவிறுப்பு என்பது உத்தியாகக் கையாளப்பட குற்றவியல் நாவல்களில் இவ்வுத்தியே கதைப் பின்னலாகிறது. எனவே கதைப் பின்னல், கதை உத்தி, இரண்டும் தனித் தனியே பிரிக்க முடியாது ஒன்றோடு ஒன்று இணைந்து செல்கிறது.

குற்றவியல் நாவல்கள் பலவற்றில் துப்பறியும் கூறு இடம் பெற்றிருக்கும், சிலவற்றில் துப்பறியும் முறை இடம் பெற்றிருக்காது, குற்றவியல் நாவல் கதைப்பின்னலில் துப்பறியும் நாவல்கள் போன்று குற்றவாளி யார் என்பது தெரியாமல் இருந்து இறுதியில் குற்றவாளி யார் என்பது புலனாகும். சில குற்றவியல் நாவல்களில் குற்றவாளி யார் என்பது தொடக்கத்திலேயே புலனாகிவிடும். ஆனால் அவன் அகப்படுவானா? எப்படி அகப்படுவான் என அறியும் ஆவலைத் தூண்டும் வகையில் கதை அமைந்திருக்கும்.

## நடை

குற்றவியல் கதைகள் சிறுசிறு தொடர்களில் அமைந்திருக்கும். இவ்வகைத் தொடர் அமைப்பினையே நடை என்கிறோம். குறிப்பாகச்சொன்னால் இவை 'வெட்டி-வெட்டிப் பேசுதல்' அல்லது 'வெடுக் வெடுக்' எனப் பேசுதல் போன்ற (Crips cut style) நடையில் அமைந்து இருக்கும். சில குறும்புத்தனமான சொற்றொடர்களும் இடம் பெறுதல் உண்டு. குற்றவியல் நாவல் நடையமைப்பு குற்றம் புரிதலில் ஒருவித ரசனையை ஏற்படுத்துவதுபோல் உள்ளது எனலாம்.

### பாத்திரங்கள்

இவ்வகைக் கதைகளில் குற்றம் செய்யும் பாத்திரங்கள், குற்றம் புரிவோரைக் கண்டுபிடிக்கும் துப்பறிவாளர் என்ற நிலையில் பாத்திரப்படைப்பு அமைந்துள்ளது. சில நாவல்களில் ஒரு துப்பறிவாளர் மட்டுமே இடம் பெறுவர். சில ஆசிரியரது நாவல்களில் ஆண், பெண், (காதலர்கள்) இருவரும் துப்பறிவாளர்களாக இருப்பது போல் படைக்கப்பட்டிருக்கும். சான்று, ராஜேஷ்குமாரின் நாவல்களில் துப்பறியும் விவேக், பட்டுக்கோட்டை பிரபாகரின் நாவல்களில் துப்பறிவாளர்கள் பரத்-சுசிலா ஆவர். இத்துப்பறிவாளர் வீரதீரச் சாகசச் செயல்கள் செய்பவர்களாகப் படைக்கப்பட்டிருப்பர்.

### கதை முடிவு

பொதுவாகப் பிறவகை நாவல்களின் முடிவு துன்பியல் அல்லது இன்பியல் என்ற முறையில் அமைகிறது. ஆனால் குற்றவியல் நாவல்களின் முடிவைத் துன்பியல் அல்லது இன்பியல் என்ற கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவது அரிது. இவ்வகைக் கதைகள் குற்றவாளி பிடிபடுதல் அல்லது இயற்கையே அவனுக்குத் தண்டனை கொடுத்தல் அல்லது குற்றவாளி பிடிபடும் சூழலில் தன்னைத்தானே மாய்த்துக் கொள்ளுதல் அல்லது ஆசிரியரால் குற்றவாளியின் செயல் நியாயப்படுத்தப்படலுடன் முடிகின்றன. இவ்வகை நாவல்களில் கதையின் உச்ச நிலையும் கதை முடிவும் ஒன்றாகவே உள்ளன.

ஒவ்வொரு சமுதாயப் படைப்பும் சமுதாயத்தில் ஒரு பாதிப்பினை ஏற்படுத்தும் (Every action there is a reaction) இது தவிர்க்க முடியாததும், இயல்பும் ஆகும். குற்றவியல் நாவல்களின் கவர்ச்சியும், விறுவிறுப்பான தன்மையும் வாசகரின எண்ணிக்கையைப் பெருக்குகின்றன. வாசகர்களுக்கு இவ்வகைக் கதைகள் ஒருவகைப் போதைப் பொருள் போன்று அமைகின்றன. எனவே இளைஞர்களின் மனம் இவ்வகைக் கதைகளைப் படிக்க ஈடுபாடு கொள்கின்றது. குற்றவியல் நாவல்கள் குற்றச் செயல்களைப் படிப்படியாக (Step by Step) விளக்குவதும், எண்ணற்ற குற்றவியல் நாவல்கள் மிகுதியாக வெளியிடப்படுவதும் இளைஞர்களின் மனத்திலும், சமுதாயத்திலும் ஏற்படுத்தும் பாதிப்புக்கள் ஆரோக்கியமானவையா? இக்கேள்வி ஆய்விற்குரியதே.

### எண் குறிப்புகள் :

1. "Something against Law" Oxford Advanced Learner's Dictionary of Current English p,203.
2. "Offence for which there is several punishment by low" Ibid, p,203
3. டாக்டர் நா. பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும் பக்.213.
4. Earnest A Baker, The History of English NOvel (Volume 1) p.15.
5. Ibid (Curted by R.F. Deitrich, R.H. Sundal, The Art of Fiction) p.5.
6. Saverberg, Lora Ole, Secret Agents in Fiction (Ina Fleming, John be carre and hen Delighton) Macmillon, Studies in Twentieth Century Literature - Pre face.
7. டாக்டர் நா. பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும் பக். 226
8. மேலது பக். 226
9. "A study of fiction dealing with the adventures of rogues and vegbods". Oxford Advanced Learner's Dictionary of Current English
10. "An 18th Century Style of fantastic, romantic, literature novels" Ibid, p. 374.
11. டாக்டர் வே. சீதாலட்சுமி எழுத்தாண்டுள்ள மேற்கோள், தமிழ் நாவல்கள் (அகரவரிசை) பக். XXIX
12. 27வது பதிப்பு (Edition) வெளிவந்த ஆண்டு 1936.
13. டாக்டர் மா. இராமலிங்கம், நோக்கு நிலை, பக். 148.

### துணை நூற்பட்டியல் :

### தமிழ் :


1. இராமலிங்கம், டாக்டர், மா : நோக்கு நிலை, கும்பகோணம், இராசி பதிப்பகம், 1985.
2. சீதாலட்சுமி, டாக்டர். வே: (தொ. ஆ) தமிழ் நாவல்கள் அகர வரிசை, சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1985 (முதற் பதிப்பு)

3. சுப்பிரமணியம், க. நா. **நாவல் கலை**, சென்னை, கலைக்கண்ண்ன பதிப்பகம், 1985 (முதல் பதிப்பு)

4. பிச்சமுத்து, ந., **திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்** சென்னை, பெரியார் அச்சிடுவோர் வெளியிடுவோர் குழுமம், 1986 (முதல் பதிப்பு)

5. ராசு, த., **புதிய நோக்கில் படைப்பிலக்கியம்**, சிதம்பரம், மணிவாசகர் பதிப்பகம் 1985 (முதற் பதிப்பு)

**ஆங்கிலம் :**

1. Baker Ernest, A. : The Art of Fiction - Volume I

2. Saverberg, Lors Ole : Secret Agents in Fiction; (Ian Fleming, John be carre and hen Deighton) Macmillon, Studies in Twentieth Century Literture, London; 1984

**Dictionary :**

Oxford Advanced Learner's Dictionary of Current English

(Hornby, A.S. with Cewie, A.P. (ad) oxford University Press, Delhi; 18th Impression, 1988.

# எம்.எஸ். உதயமூர்த்தியின் தன் முன்னேற்றச் சிந்தனைகள்

- மி. ஆரோக்கியமேரி

## முன்னுரை

உலகில் வாழும் உயிரினங்களில் உயர்வானது மேலானது மனித இனம். அதுமட்டுமல்ல, அது கிடைத்தற்கு அரியதாகும். அதனால்தான், 'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது' என்று ஔவை மூதாட்டியும் "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மகிழ்ந்திடுமின்" என்று தாயுமான அடிகளும் மனிதப்பிறப்பின் பெருமையைப் போற்றிப் பாடியுள்ளனர். அரிதாய்க்கிடைத்த மனிதப்பிறவியைப் போற்றி அதனைப் பயனுடையதாய் ஆக்க வேண்டியது ஒவ்வொரு மனிதனின் கடமையாக உள்ளது. மனித நாகரிகம் தொடங்கிய காலந்தொட்டு முன்னேறுதல் என்பதும் தொடங்கி விட்டது. ஒவ்வொருவரும் தன்னை எவ்வகையிலாவது முன்னேற்றிக் கொள்வதையே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டுள்ளோம். அத்தகைய மனித முன்னேற்றத்தைத் திட்ட மிட்டு, ஒழுங்குபடுத்தி, புத்தகவடிவில் தந்தது முதன் முதலில் மேலை நாடுகள் தாம் என்றாலும் தன்முன்னேற்றம் பற்றிய தெளிவான சிந்தனைகளும், நெறிகளும் நமக்குச் சொந்த மானவைகளே எனக் கருதலாம்.

## சான்றாதாரங்கள்

நம் நாட்டில் வாழ்ந்த ஞானிகளும் சான்றோர்களும் புலவர்களும், கவிஞர்களும், நம்மீது பெருங்கருணைகொண்டு யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் எனும் உயர் நோக்கத்தில் இதிகாச புராணங்களையும் எண்ணற்ற இலக்கிய நூல்களையும் நமக்குத்தந்து போயுள்ளனர், நம் காலத்தில் வாழ்ந்த அறிஞர் பெருமக்களோ, இளைய சமுதாயத்தினர் ஏற்றம் பெறத் தங்கள் பேச்சை, எழுத்தைப் பயன்படுத்திப் பெருந்கொண்டாற்றியுள்ளனர்.

தமிழ்த்தென்றல் திரு. வி. கா.வின் கட்டுரைகள் இளைஞர்களுக்கு இனித்திடும் தெள்ளமுது. டாக்டர். மு. வ. வின் நாவல்களும் கட்டுரைகளும் நல்ல இளைஞர்கள் உருவாக வேண்டும் எனும் பெரு

வேட்கையால் எழுதப் பெற்றவை, தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் சமயம் சார்ந்த திருமடத்தின் தலைவர் எனினும் இளைஞர்களை 'எழுமின், விழிமின்' எனத் தம் பேச்சாலும், எழுத்தாலும் தட்டி எழுப்பிய சான்றோர், நம்பிக்கை நரம்பிழந்து நடுங்கிக்கொண்டிருக்கும் சமூகத்தில் நம்பிக்கை விதைவிதைத்து முன்னேற்ற, விழுதுகள் படர வாய்ப்பளித்த இலக்கிய ஆசிரியர்கள் பலராவர் அத்தகைய சான்றோர்கள்வழி வாழையடி வாழையாக வந்தவர் டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி.

## உதயமூர்த்தி ஓர் அறிமுகம்

எம்.எஸ். உதயமூர்த்தி முதலில் ஒரு சிறந்த ஆசிரியர். ஆசிரியத் தொழிலால் தம்மைப் பெரிதும் வளர்த்துக் கொண்டவர், அறிவு, அனுபவம், கல்வி என்று எல்லாவிதத்திலும் தம்மை தயார் செய்து தன் தகுதிகளை உயர்த்திக் கொண்டவர், மாணவர்களைப் புரிந்து கொண்ட அளவு மனித சமூகத்தையும் புரிந்து கொண்டவர். தன் அறிவுத்திறத்தால் லட்சோப லட்சம் தமிழ் மக்களால் தலைசிறந்த சிந்தனாவாதி என்று போற்றப்படுபவர்.

1976 முதல் எம்.எஸ் உதயமூர்த்தியின் படைப்புகள் நூல்களாக வெளிவரத் தொடங்கின என்றாலும் அதற்கு முன்னரே பத்திரிக்கைகள், இதழ்கள் மூலம் உதயமூர்த்தியின் கட்டுரைகள் வெளிவரத் தொடங்கிவிட்டன. ஆன்மீகம், அறிவியல், சமூகவியல், பொருளாதாரம் என்ற பலதுறைகள் வழி இளைஞர் சமூகத்தை ஊக்கமூட்டி வழிநடத்துபவைகள் அவரது படைப்புகள். இதுவரை மொத்தம் இருபத்தி இரண்டு நூல்கள் புத்தக வடிவில் வெளிவந்துவிட்டன. அவற்றில் மொத்தம் பதினான்கு நூல்கள் மனவியல் அடிப்படையில் எழுதப்பட்டவையாகும் எம்.எஸ். உதயமூர்த்தி சுமார் 20 ஆண்டுகட்கு மேலாக மனவியலைப் பற்றி தொடர்ந்து எழுதிவருகிறார். அவரது நூல்களில் காணலாகும் தன் மன்னேற்றச் சிநதனைகள் யாவை என்பதை இனி காணலாம்.

## தன் முன்னேற்றச் சிந்தனைகள்

வாழ்க்கை ஒரு நீரோட்டம் அதை இழுத்துச் செல்கின்ற வழியினியே நாமும் செல்வோம் என்ற நிலையிலுள்ள மனிதர்களைத்தான் தினமும் நாம் சந்தித்துக் கொண்டிருக்கின்றோம். தன்மீதே நம்பிக்கையில்லாத மனித சமூகம், முன்னேற்றம் காண்பதும் அரிதே. "எவனொருவனுக்குத்

தன்மீது நம்பிக்கை இல்லையோ அவனே நாத்திகன்" என்கிறார் விவேகானந்தர். "ஊழையும் உப்பக்கம் காண்பர்" என்று உற்சாகம் ஊட்டுகிறார் வள்ளுவர், இவர்களைப் போல "குடிப்பது கூழானாலும், பெருக்குவது தெருவானாலும் நாம் நமது எண்ணங்களால், மனோநிலையால் அரசனாக உலவவேண்டும்". நம் எண்ணம் உயரும்போது நம் சூழ்நிலை உயருகிறது. நாம் உயர்கிறோம் என்ற ஊட்டச்சத்தளித்து நலிந்த சமூகத்திற்குப் புத்தணர்வு தருபவர் எம்.எஸ். உதயமூர்த்தி. மனித முன்னேற்றத்தின் ஆணிவேர், ஜீவநாடி தன்னம்பிக்கைதான் என்பது அவரது எண்ணம் அதனால்தான் அவரது நூல்களில் தன் முன்னேற்றச் சிந்தனைகள் இழையோடிச் செல்கின்றன எனலாம்.

## நம்பிக்கையும் எண்ணங்களும்

வாழ்வே நம்பிக்கையின் அடிப்படையில்தான் இயங்குகிறது என்பது உலக நியதி. அத்தகைய தன்னம்பிக்கை பற்றியும் அதன் வலிமை பற்றியும், அதனைப் பெறும் வழிமுறை பற்றியும், தன்னம்பிக்கை யின்மையால் ஏற்படும் தீமைகள் பற்றியும் உதயமூர்த்தியின் நூல்கள் குறிப்பிடுகின்றன. வாழ்வின் ஜிவத்துடிப்பு இருக்கிறதே அதன் ஆணிவேர் தன்னம்பிக்கைதான் என்பது அவரது ஆழமான கருத்து. அதுபோல "ஒருமுகப்படுத்தாத எண்ணமும் நெறிப்படுத்தாத மனமும் எதையும் சாதிப்பதில்லை என்று எண்ணங்கள் பற்றிக்குறிப்பிடுகிறார்" எண்ணங்கள் சுதந்திரச் சிந்தனைகள் ஆக வேண்டும் என்பதால் ஒவ்வொருவருக்கும் சுதந்திர மனோபாவம் வேண்டும், அப்போதுதான் மகத்தான சாதனைகள் புரிய முடியும் என்கிறார். எண்ணங்களைத்தாங்க நம்பிக்கை இருக்க வேண்டும். எண்ணம் நம்பிக்கையாக மாறும்போது அது பல அதிசயங்களை நிகழ்த்துகிறது என நம்புகிறார் எம்.எஸ். உதயமூர்த்தி. "உண்மை எண்ணங்கள் என்பது வீட்டுக்கு ஓடு போடுவது போல. ஓட்டைத்தாங்க சாரங்கள் இருப்பதுபோல எண்ணங்களைத் தாங்க நம்பிக்கை இருக்க வேண்டும். நம்பிக்கையில்லாவிட்டால் வாழ்வுஎன்ற கூரை விழுந்து விடும்" எனக்கூறி எண்ணங்களும், நம்பிக்கைகளும் தான் நம் முன்னேற்றத்தின் ஆணிவேர் என்கிறார்.

## தனித்துவமும் சுதந்திரமும்

'சுயமாகச் சிந்தியுங்கள் தனித்து நில்லுங்கள்' என்று சுய சிந்தனைக்கான வழிமுறைகள் அவரது நூல்களில் காணப்படுகின்றன.

"ஒருவனை வாழவைப்பது (Self esteem) எனப்படும். சுய கௌரவம் தான்" என்பது மனவியல் அறிஞர்களின் கருத்து. தனித்துவத்தையும் சுதந்திரத்தையும் பறிகொடுத்துவிட்டு செயல்படுவது ஆன்மாவிற்குச் செய்யும் இழுக்காகும் என்கிறார் உதயமூர்த்தி. மனவியலார் கருத்துப்படி தன்னைப்பற்றிய நம்பிக்கை, தன்னைப்பற்றிய உணர்வுதான் காலப்போக்கில் மனிதனை உயர்த்துகிறது. என்ற அடிப்படையில் நம் விதியை நாம்தான் நிர்ணயிக்கிறோம். நாம் எடுக்கும் முடிவுதான் நம் வாழ்வை நிர்ணயிக்கிறது. எனவே மனிதனின் வாழ்வும் தாழ்வும் அவன் கையிலே தான் இருகிறது என்று கூறி தனிமனித சிந்தனைக்கு, தனிமனித உரிமைக்கு வழிவகுக்கின்றார்.

## லட்சியமும் முயற்சியும்

எண்ணங்களைப் போலவே லட்சியங்களையும் வலிமை யுள்ளதாகச் சித்தரிக்கிறார். தன்னம்பிக்கை எவ்வளவு அவசியமோ அதுபோல் லட்சியத்தையும் ஒரு மகத்தான சக்தியாகக் கருதுகிறார். நம்மில் பலர் லட்சியங்களைப் பற்றி ஆசைப்படுகிற அளவிற்குக் காரியம் செய்வதில்லை என்ற குறையும் எம்.எஸ். உதயமூர்த்திக்கு உண்டு. "பிறருக்காக வாழ வேண்டும் என்கிற அதிமனிதப் பண்பினை அடைவதே நமது சொந்த வாழ்க்கையின் லட்சியமாக, தர்மமாக அமைய வேண்டும்" என விரும்புகிறார். நம்மை லட்சியப் பாதைக்கு அழைத்துச் செல்லக் கல்வி மிக மிக அவசியமானதாகக் கருதுகிறார்.

முடியும் என்ற எண்ணம் கொண்ட மனிதன் நாளடைவில் சாதனைகள் நிறைந்த பெரும் மனிதனாய் மலர்கிறான் என்பதால் "முடியும், முடியாத காரியமும் முடியும்" என்பது உதயமூர்த்தியின் தாரக மந்திரமாக இருந்து வருகிறது. விடாமுயறிசியுடன் கிடைத்ததை விடாது பிடித்துக் கொண்டு முன்னேறியவர்கள் பலர் உழைப்பினாலும் விடாமுயற்சி யினாலும்தான் ஒருவனது அனுபவங்கள் பலம் பெறுகின்றன எனக் கூறுகிறார். முடியும் என்ற ஓர் உற்சாக மனோபாவத்துடன் சதாசெயல்பட வேண்டியது அவரது வேண்டுதல்.

## இறை உணர்வு

தன்பலம் மட்டும் வாழ்க்கையை நடத்தி விடாது. "ஆண்டவன் என்னுடன் துணைக்கு இருக்கிறான் என்பது நம் பலகீனமான

மனிதசக்திக்குப் பன்படங்கு உரம் அளித்து நம் கைகளை உறுதிப்படுத்துகிறது" என்கிறார். "எண்ணம் என்கிற சக்தி பிரார்த்தனையின் மூலம் கூட்டு வழிபாட்டின் மூலம்தான் நன்மை விளைவிக்கின்றது." "சில சமயம் நமக்கு எது நல்லது என்று நம்மைவிடக்கடவுளுக்குத்தான் அதிகம் தெரிகிறது" என்ற கூற்றில் முன்னேற்றம் காணும் மனிதன் தனது பெருமுயற்சியால் மட்டுமே இதுவிளைந்ததென எண்ணாது, இறைவனையும் துணைக்கழைக்கும் ஆன்மீகச் சிந்தனையும் காணப்படுகிறது.

## அச்சமும் கவலையும்

மனிதனின் இரண்டு எதிரிகள் என்று பயத்தையும், கவலையையும், குறிப்பிடுகின்றார். இவை இரண்டாலும் மனிதன் தன் வாழ்வை நரகமாக்கிக் கொள்கிறான், சூழ்ந்துள்ளோர் வாழ்வையும் கெடுக்கிறான் என்று நினைக்கிறார். "எதைக் கண்டு பயப்படுகிறீர்களோ அதைச் செய்யத் துவங்குங்கள் பயம் செத்துப் போவதைக் காண்பீர்கள்" என்று எமர்சன் தைரிய மூட்டுவதைப் போல நமக்கு நம் கொள்கைகளில் உறுதியும், பிறர் கண்டனத்தைக் கண்டு கலங்காத உள்ளமும் வேண்டும், கடல்பூராவும் தண்ணீர் இருந்தாலும் கடல் நீர் கப்பலுக்குள் புகாதவரை கப்பல் அமிழப் போவதில்லை. அதே போலத்தான் பயமும் பயம் என்ற ஓட்டை ஏற்படாதவரை எந்த உலகப் பிரச்சினைகளும் நம்மை அசைக்க முடியாது என்ற நம்பிக்கையும் வேண்டும் எனத் தைரியமூட்டுகிறார்.

## முடிவுரை

சமுதாயத்தில் தானும் ஒரு கூறு. "சமுதாயத்தில் இருந்து ஊட்டம் பெறத்தனக்கு உரிமை இருப்பது போல சமுதாயத்திற்குத் தன்னாலான ஊட்டத்தை வழங்க வேண்டியதும் தன்னுடைய கடமை என்று உணர்கின்றவனுடைய வாழ்வே சிறந்த வாழ்வாக அமைகிறது" என்பதற்கேற்பத்தான் பெற்ற வாய்ப்பு மற்றவர்களுக்கும் சென்று சேர வேண்டும் என்பதில் அக்கறை கொண்டவர் எம்.எஸ். உதயமூர்த்தி தனது கடின உழைப்பால் முயற்சியல் வெற்றியின் விளிம்பைத் தொட்டவர். சாதனையின் பாதையில் தானும் ஒரு சுவடு படைத்தவர். நம்முடன் வாழ்ந்தும் வருபவர். இவருடைய எண்ணங்கள் என்ற நூல் மதுரை பல்கலைக் கழகத்தில் மூன்றாண்டுகள் பாடப்புத்தகமாக இருந்துள்ளது. இத்தகைய வாய்ப்பு எல்லோர்க்கும் வாய்க்கக் கூடியதல்ல.

அமெரிக்காவில்தனது பெரும்பான்மையான நாட்களைக் கழித்தவர், சிறந்த தொழிலதிபர் என்றாலும், தன்னைச் சுற்றியிருக்கும் உலக நிலைகளை, வாழ்க்கைப் பிரச்சினைகளை லட்சியத் தொலைவுகளை மதிக்கத் தவறியதில்லை தன்னைப்போல தன்னம்பிக்கை நாயகனாய் ஒவ்வொரு வரும்திகழ அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகள் தாம், அவரது படைப்புகள். ஒரு சில நூல்களில் மட்டும் காணப்படும் தன் முன்னேற்றச் சிந்தனைகள் மட்டுமே சுட்டிக் காட்டப்பட்டுள்ளன என்றாலும் அவரது நூல்கள் முழுவதும் தன்னம்பிக்கை தந்து ஒவ்வொரு வரையும் முன்னேற்றப்பாதைக்கு இட்டுச் செல்லும் வழிகாட்டியாகத் திகழ்கின்றன.

# வாழ்க்கைப் பயணச் சடங்குகளின் வகைப்பாடுகள் - மதிப்பீடு

பு. சித்திரைவேல்

## 1-0 முன்னுரை :

பண்பாடுகளின் வளர்ச்சி நிலையில் சடங்குகளின் செயல்பாடுகள் முக்கிய பங்காற்றுகின்றன. அச்சடங்குகள் மனித வாழ்வில் பிறப்பு முதல் இறப்புவரை நம்பிக்கையின் அடிப்படையில் நிகழ்த்தப்படுகின்றன. இது குறித்துக் கலைக் களஞ்சியம் "மனிதன் கருவுயிர்ப்பது முதல் இறப்பது வரை பல கட்டங்களைக் கடக்கின்றான். ஒவ்வொரு கட்டத்தில் புகும் போதும் அந்த நிகழ்ச்சியைக் குறிப்பதற்காகவும் அதன் சிறப்பையும் பண்பையும் பலனையும் நினைவூட்டுவதற்காகவும் சிறப்புச் செயல்கள் செய்யுமாறு ஒவ்வொரு இனத்தாரும் விதிகள் உண்டாக்கியிருக்கிறார்கள் என்று கூறுகின்றது (1956, தொகுதி2. 392) இவ்வாறு ஒவ்வொரு கட்டத்திலும் (பிறப்பு, பூப்பு, திருமணம், இறப்பு) நிகழ்த்தப்படும் சடங்குகளை வாழ்க்கைப் பயணச் சடங்குகள் எனக் கூறலாம்.

இக்கட்டுரையில் தமிழ் நாட்டுப்புறவியல் அறிஞர்களின் வகைப்பாடு அறிமுகம் செய்யப்பட்டு, அவர்களுடைய கருத்துக்கள் மதிப்பீடு செய்யப்படுகின்றன. அதே நேரத்தில் வான் கென்னப் சுட்டிக்காட்டும் பிற ஐரோப்பிய அறிஞர்களின் வகைப்பாடுகளும், அவ்வகைப்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு வான் கென்னப் உருவாக்கிய வகைப்பாடுகளும் அறிமுகப்படுத்தப்படுகின்றன.

## 1-1-1 தமிழ் நாட்டுப்புறவியல் அறிஞர்களின் வகைப்பாடு :

ஆறு. இராமநாதன் தம்முடைய "நாட்டுப்புறப்பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல்" எனும் நூலில் பழக்க வழக்கங்கள் சடங்குகள் முதலியவற்றை வாழ்வு தொடர்பானவை, சாவு தொடர்பானவை (1982:193) என இரண்டாகப் பிரித்துள்ளார். வாழ்வு தொடர்பானவற்றைத் தொட்டிலிடுதல், காதணிவிழா, பூப்புச் சடங்குகள், திருமணம், வளைகாப்பு என மேலும் உட்பிரிவாகப் பகுத்துள்ளார். சாவு தொடர்பான சடங்குகளை

வகைப்படுத்தி விரிவாகவும் விளக்கியிருக்கின்றார். இறந்தவரின் ஆவி மேலுலகம் செல்வதற்காக வீட்டைத் தூய்மைப்படுத்தி "கொடவிளக்கு ஏற்றுதல்," 'கற்பூரம் ஏற்றுதல்' போன்றவற்றை வழியனுப்பும் சடங்குகளாகக் கருதலாம் (1982:203) எனவும் 'பால்தெளி', 'எட்டாந்துக்கம்,' கருமாதி ஆகியவை ஆய்வு மேற்கொண்ட பாடல்களில் இடம் பெறவில்லை எனவும் (1982: 204) குறிப்பிடுகின்றார்.

தே. ஞானசேகரன் தன்னுடைய "மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள்" என்ற நூலில் செய்வினைச் சடங்குகள், வழிபாட்டுச் சடங்குகள், வளமைச் சடங்குகள், வாழ்வியல் சடங்குகள், மருத்துவ மந்திரச் சடங்குகள் என ஐந்து வகையான சடங்குகளை விளக்குகிறார். மேலும் செய்வினைச் சடங்குகளாக நள்ளிரவுச் சடங்குகள், பலிச்சோறு எறிதல், ஆகாய பூஜை பாவனை, மனிதப் பலிகள் ஆகியவற்றையும் ; வளமைச் சடங்குகளாக விதைப்புச் சடங்குகள், முளைப்பாரி எடுத்தல், குழந்தை வளம் வேண்டுதல், தாந்தரீக பூஜை மழைச் சடங்குகள், கொடும்பாவி எறிப்பு, மழைக்கஞ்சி காய்ச்சுதல் ஆகியவற்றையும், வாழ்வியல் சடங்குகளாகப் பிறப்புச் சடங்குகள், நேர்த்திக் கடன் சடங்குகள், தீச்சட்டி எடுத்தல் சடங்குகள் ஆகியவற்றையும் ; மருத்துவ மந்திரச் சடங்குகளாக மந்திரித்தல், சீரடித்தல், கண்ணேறு கழித்தல், நோயைத் தோற்றுவித்தல், மாற்றீட்டுச் சடங்குகள் ஆகியவற்றையும் உட்பிரிவுகளாகப் பகுத்துள்ளார் :- (1987: 13-15)

கலைக்களஞ்சியப் பதிப்பாசிரியர்கள் மக்களிடம் நன்கு அறிமுகமான சடங்குகளைப் பிரவேசச் சடங்குகள் ( Rites of Passage), வலிமைச் சடங்குகள் (Rites of Intensification) என இரண்டாக வகைப்படுத்தியுள்ளனர். பிரவேசச் சடங்குகளாகப் பிறப்பு பருவமடைதல், மணம், இறப்பு ஆகியவை தொடர்பான சடங்குகளையும்; வலிமைச் சடங்குகளாகக் குரங்கு வேட்டைச் சடங்கு, அறுவடைக் காலச் சடங்கு, விதைப்புக் காலச் சடங்கு ஆகியவற்றையும் உட்பிரிவுகளாகப் பகுத்துள்ளனர் (1956 ; தொகுதி 2 : 393)

சு. சண்முக சுந்தரம் தன்னுடைய "திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு" எனும் நூலில் மங்களச்

சடங்குகள் அமங்களச் சடங்குகள் (1986:276) என இரண்டாகப் பிரித்துள்ளார். இவற்றுள் மங்களச் சடங்குகளாகப் பிறப்பு, பூப்பு, சீமந்தம் ஆகியவை தொடர்பான சடங்குகளையும் ; அமங்களச் சடங்குகளாக இறப்புச் சடங்குகளையும் விளக்குகிறார்.

அக்கினிபுத்திரன் தன்னுடைய 'சடங்குகள்' எனும் முனைவர் பட்ட ஆய்வேட்டில் சடங்குகளைச் சமூகச் சடங்குகள், வழிபாட்டுச் சடங்குகள் என இரண்டாகப் பிரித்துள்ளார். சமூகச் சடங்குகளாக வாழ்வுச் சடங்குகளையும், இறப்புச் சடங்குகளையும் குறிப்பிடுகிறார் (1991 : 218)

ம. வேலுச்சாமி தன்னுடைய "மதுரை மாவட்டக் கிராம சமுதாயங்கள் சிலவற்றுள் காணப்படும் நாட்டுப்புறச் சமயம் - ஒப்பாய்வு" என்ற முனைவர் பட்ட ஆய்வேட்டில் சடங்குகளைச் சமயச் சடங்குகள், சமயச் சார்பற்ற சடங்குகள், சமயம், சமயச் சார்பின்மை இரண்டும் கலந்த சடங்குகள் என மூன்று பிரிவாக்கியுள்ளார். முற்றிலும் தெய்வ அடிப்படையில் நிகழ்த்தும் சடங்குகளைச் சமயச் சடங்குகளாகவும் ; நாட்டின் தலைவர் பதவி ஏற்பு, விடுதலை நாளில் கொடியேற்றும் முறை, ஆகிய நிகழ்வுகளில் மேற்கொள்ளப்படும் செயல் முறைகளைச் சமயச் சார்பற்ற சடங்குகளாகவும், திருமணச் சடங்கு, பெண்கள் பூப்புச் சடங்கு, இறப்புச் சடங்கு ஆகிய வாழ்க்கைச் சுழற்சிச் சடங்குகளைச் (Life Cycle rituals) சமயம், சமயச் சார்பின்மை ஆகிய இரண்டும் கலந்த சடங்குகளாகவும் கூறுகின்றார். (1983 : 76)

க. மலைச்சாமி தன்னுடைய "வலையர் வாழ்வியல் - மதுரை மாவட்டம்" என்னும் முனைவர் பட்ட ஆய்வேட்டில் வாழ்வு சார்ந்த சடங்குகளாகக் குழந்தைப் பேற்றுச் சடங்குகள், திருமணச் சடங்குகள், பூப்பெய்தல் சடங்குகள், இறப்புச் சடங்குகள் ஆகியவற்றை விரிவாக விளக்குகின்றார் (1993 : 54)

இவ்வாறு மேற்குறிப்பிட்ட தமிழ் நாட்டுப்புறவியல் அறிஞர்களின் சடங்குகள் வகைப்பாட்டினை நோக்குகின்றபொழுது பிறப்பு, பூப்பு, திருமணம், இறப்பு தொடர்பான சடங்குகளை இணைத்தும், தனித்தனியாகப் பிரித்தும் கூறியுள்ளதை அறியலாம். இதனைக் கீழ் வரும் அட்டவணை மூலம் புரிந்து கொள்ளலாம்

| அறிஞர்கள் | சடங்குகள் | பெயரிடுதல் |
|---|---|---|
| கலைக்களஞ்சியப் பதிப்பாசிரியர்கள் | பிறப்பு, பூப்பு, திருமணம், இறப்பு | பிரவேசச் சடங்குகள் |
| தே. ஞான சேகரன் | பிறப்பு, பூப்பு, திருமணம், இறப்பு | வாழ்வியல் சடங்குகள் |
| ம. வேலுச்சாமி | பிறப்பு, பூப்பு, திருமணம், இறப்பு | வாழ்வு சுழற்சி சடங்குகள் |
| க. மலைச்சாமி | பிறப்பு, பூப்பு, திருமணம், இறப்பு | வாழ்வு சார்ந்த சடங்குகள் |

இவ்வாறு இணைத்துக் கூறியுள்ளனர்.

| அறிஞர்கள் | சடங்குகள் | பெயரிடுதல் |
|---|---|---|
| ஆறு. இராமநாதன் | பிறப்பு, பூப்பு, திருமணம்<br>இறப்பு மட்டும் தனியாக | வாழ்வு தொடர்பானவை<br>சாவு தொடர்பானவை |
| சு. சண்முகசுந்தரம் | பிறப்பு, பூப்பு, திருமணம்<br>இறப்பு மட்டும் தனியாக | மங்களச் சடங்குகள்<br>அமங்களச் சடங்குகள் |
| அக்கினி புத்திரன் | பிறப்பு, பூப்பு, திருமணம்<br>இறப்பு மட்டும் தனியாக | வாழ்வுச் சடங்குகள்<br>சாவுச் சடங்குகள் |

இவ்வாறு இறப்பினைத் தனியாகவும் கூறியுள்ளனர்.

## 1-1-2 மதிப்பீடு :

ஆறு. இராமநாதன் சடங்குகளை வகைப்படுத்துவதற்குப் பயன்படுத்திய அணுகுமுறை பற்றியோ, வகைப்படுத்தியதற்கான காரணம் பற்றியோ விளக்கவில்லை. மேலும் பல சடங்குகள் இவரது வகைப்பாட்டிலிருந்து விலக்கப் பட்டுள்ளதையும் அறியலாம். பிறப்புத் தொடர்பான சடங்குகள் பற்றிக் கூறுவதற்கு முன்பே "தொட்டிலிடுதல், காதணிவிழா, பூப்புச் சடங்கு, திருமணம், வளைகாப்பு" என்ற வாழ்வு தொடர்பான சடங்குகள் பற்றிய செய்திகள் இவருடைய ஆய்வில் இடம் பெற்றுள்ளன. இதிலிருந்து வாழ்வு தொடர்பான சடங்குகள் அனைத்தையும் தொகுத்து வகைப்படுத்துவதில் சில சிக்கல்கள் இருப்பதை உணர முடிகிறது.

தே. ஞானசேகரன் அவர்களும் சடங்குகளை வகைப் படுத்துவதற்குப் பயன்படுத்திய முறை பற்றியோ காரணங்கள் பற்றியோ விளக்கவில்லை. இவர் கூறும் வளமைச் சடங்குகளில் தாந்தரீக பூஜை பற்றிக் குறிப்பிடும் போது "குழந்தை வரம் வேண்டும் பெண்கள் மந்திரவாதியின் முன்பு பிறந்த மேனியுடன் அமர்ந்து பூஜை செய்ய வேண்டும்" என்றும் "நிர்வாணம் முழுமையின் அடையாளம்" என்றும் (1987 : 15) கூறுகின்றார். வளமை வேண்டுவோர் முளைப்பாரி சடங்கிலும், மழைச் சடங்குகளிலும் நேரடியாகப் பங்கேற்கிறார்கள். ஆனால் இவர் கூறும் தாந்தரீக பூஜையில் மந்திரவாதியே நேரடியாக ஈடுபடுகிறார். இவ்வேறுபாடுகளைக் கவனத்தில் கொண்டு வளமைச் சடங்குகளையும் உட்பிரிவுகளாகப் பிரிப்பதற்கு வாய்ப்பு உள்ளது. ஆனால் தே. ஞான சேகரன் இவ்வாறு உட்பிரிவுகளில் கவனம் செலுத்தவில்லை. வகைப்படுத்தலுக்கும் ஏதேனும் சில அடிப்படைகளை அல்லது அணுகுமுறைகளைப் பயன்படுத்தியிருந்தால் இப்படிப்பட்ட பிரச்சினைகள் எழாமல் தடுத்திருக்கலாம்.

மேலும் மானிடவியலாளரின் பகுப்பான 1. மந்திரச் சடங்குகள் (Magical Rituals) 2. சமயச் சடங்குகள் (Religious Retuals) மந்திரமும் சமயமும் கலந்த சடங்குகள் (Magico Religious Retuals) (1987 : 6) போன்றவற்றைக் கூறும் இவர் இச்சடங்குகள் பற்றி விமர்சனம் செய்யவோ, விளக்கவோ முயற்சி மேற்கொள்ளவில்லை இதனால் மானிடவியலாளரின் பகுப்பினைக் குறிப்பிட்டதின் நோக்கம் நிறைவேறவில்லை எனலாம்.

கலைக்களஞ்சியம் குறிப்பிடும் நான்கு வகையான பிரவேசச் சடங்குகளை (பிறப்பு, பருவமடைதல், மணம், இறப்பு) ஏன் பிரவேசச் சடங்குகள் எனக் குறிப்பிடுகிறார்கள் என்பதற்கான விளக்கத்தினைப் பதிப்பாசிரியர்கள் கூறவில்லை. மேலும் பதிப்பாசிரியர்கள் "Rites of Passage" என்ற சொல்லுக்குப் பிரவேசச் சடங்குகள் எனக் கூறுவது பொருத்தமான மொழி பெயர்ப்பாகத் தோன்றவில்லை அதாவது 'பிரவேசச் சடங்கு' என்பது 'உடல் பருவ மாற்றங்கள் தொடர்பானது என்ற கருத்தாக்கத்தில் பதிப்பாசிரியர்கள் மொழி பெயர்த்துள்ளனர். ஆனால் இதன் அடிப்படையில் மட்டும் பிரவேசச் சடங்குகள் என்று கூறுவது சரியாக அமையாது. ஏனென்றால் "உடல் பருவ மாற்றங்கள் தொடர்பானவை" மட்டுமே பிரவேசம் அன்று பிரவேசம் என்பது பரந்த பொருளுடையது ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் போவதும்

ஒரு வீட்டிலிருந்து ஒரு குடும்பம் புதிய வீட்டில் குடி புகுவதும், ஓர் அரசன் இன்னொரு நாட்டை கைப்பற்றுவதற்காகப் படையெடுப்பதும் கூட பிரவேசம்தான். எனவே பிரவேசச் சடங்குகள் என்று மொழிபெயர்த்தலைக் காட்டிலும் "வாழ்க்கைப் பயணச் சடங்குகள்" எனக் கூறுவதுதான் பொருத்தமாக அமைகிறது எனலாம்.

சு. சண்முகசுந்தரத்தின் வகைப்பாடு, உணர்வுகளை அடிப்படையாகக் கொண்டதாக உள்ளது. அதாவது சில சடங்குகள் மகிழ்ச்சியான சூழலில் மகிழ்ச்சியான உணர்வில் செய்யப்படுவதையும், சில துக்கமான சூழலில் துக்க உணர்வுடன் செய்யப்படுவதையும் கவனத்தில் கொண்டு அவற்றை மங்களச் சடங்குகள், அமங்களச் சடங்குகள் என வகைப்படுத்தியிருக்கின்றார். இத்தகைய வகைப்பாட்டில் அனைத்துச் சடங்குகளையும் உள்ளடக்க இயலாது. நோய் நீக்கம் தொடர்பான சில சடங்குகளை மங்களம், அமங்களம் என்ற வகைப்பாட்டிற்குள் அடக்கவியலாது. நன்மைக்காகச் செய்யப்படுகின்ற பலிச்சடங்குகளையோ, நள்ளிரவில் செய்யப்படும் கப்பரைச் சடங்குகளையோ மங்களம், அமங்களம் என்ற பகுப்பிற்குள் அடக்குவது பொருத்தமாக இருக்காது.

மங்களச் சடங்குகளின் உட்பிரிவாகப் பிறப்பு, பூப்பு, சீமந்தம் போன்ற சடங்குகளை மட்டும்தான் கூறியிருக்கின்றார். ஆனால் இன்னும் பல மங்களச் சடங்குகள் உள்ளன. எடுத்துக்காட்டாக, புதுமனை புகுவிழா என்பதும் ஒரு மங்களகரமான நிகழ்வாகும். அதற்கெனப் பல சடங்குகள் நிகழ்த்தப் படுகின்றன. இவை போன்ற சடங்குகளையும் கவனத்தில் கொண்டு விளக்கியிருக்கலாம். மேலும் வழிபாட்டுச் சடங்குகளையும் வளமைச் சடங்குகளையும் தனித்தனியாகத் தான் விளக்கியுள்ளாரே தவிர இவற்றை மங்களச் சடங்கு அமங்களச் சடங்கு என்ற வகைப்பாட்டிற்குள் உட்படுத்தவில்லை.

அமங்களச் சடங்குகளைக் குறிப்பிடும்போது இறப்பையும் அதனோடு தொடர்புடைய சடங்குகளை மட்டுமே கூறியுள்ளார். இறப்பும் அது தொடர்பான சடங்குகள் மட்டுமே அமங்களமானவை என்பது அவருடைய கருத்தாகிறது. இவை தவிர சமூகத்தில் இன்னும் பல அமங்களச் சடங்குகள் காணப்படுகின்றன. எனவே மங்களச் சடங்கு, அமங்களச் சடங்கு என்ற வகைப்பாடு முழுமையற்றது என்று கூறுவதில் தவறில்லை.

அக்கினிபுத்திரன் சடங்குகளை வாழ்வுச் சடங்குகள் சாவுச்சடங்குகள் என வகைப்படுத்தியிருக்கிறார். இவ்வகைப் பாட்டிற்கான அடிப்படைக் காரணங்களைப் புரிந்து கொள்ளமுடிகிறது. மனிதர்கள் உயிருடன் வாழ்க்கையைத் தொடரும்போது அவர்களுடைய வாழ்க்கை வளமைக்காகவும் உடல் நலனுக்காகவும் செய்யப்படுகின்ற சடங்குகளை வாழ்வுச் சடங்கு என்ற பகுப்பிற்குள் அடக்கியிருப்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் இவற்றிற்கு எடுத்துக்காட்டுகளாகப் பூப்புச் சடங்குகள், திருமணச் சடங்குகள் ஆகியவற்றை மட்டும் குறிப்பிட்டுள்ளார். இறப்பு தொடர்பான சடங்குகள் தவிர மற்ற எல்லாச் சடங்குகளையுமே, இவருடைய கருத்துப்படி வாழ்வுச் சடங்கு என்ற பகுப்பிற்குள் அடக்கலாம். ஆனால் அக்கினிபுத்திரனுக்கு இத்தகைய கருத்து இருப்பதாகத் தெரியவில்லை.

ம. வேலுச்சாமி அவர்கள் பிறப்பு, பூப்பு, திருமணம், இறப்பு ஆகிய சடங்குகளை "வாழ்க்கைச் சுழற்சிச் சடங்குகள்" என்ற வகைப்பாட்டிற்குள் அடக்கி விளக்கியுள்ளார். மனிதனின் வாழ்க்கையில் இச்சடங்குகள் மீண்டும் மீண்டும் சுழற்சி முறையில் செய்யப்பட்டு வருவதால் அவற்றை "வாழ்க்கைச் சுழற்சிச் சடங்குகளாகக் (Life Cycle ritual)" குறிப்பிட்டுள்ளார் என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் நேர்த்திக் கடன், தீச்சட்டி எடுத்தல் போன்ற சடங்குகளைச் சமயத்தோடு தொடர்படுத்திக் கூறியிருப்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. இவையும் வாழ்க்கையில் மீண்டும் மீண்டும் சுழற்சிமுறையில் செய்யப்படுபவை தானே பின்னர் ஏன் இவற்றைச் சமயத்தோடு தொடர்புபடுத்திக் கூறினார்? இக்கேள்விக்கான விளக்கத்தைத் தந்திருந்தால் அவருடைய வகைப்பாட்டின் தாக்கத்தைப் புரிந்துகொள்ள முடிந்திருக்கும்.

க. மலைச்சாமி அவர்கள் வாழ்வு சார்ந்த சடங்குகள் என்ற பகுப்பிற்குள் பிறப்பு, பூப்பு, திருமணம், இறப்பு ஆகிய சடங்குகளை உள்ளடக்கியிருக்கின்றார். அக்கினிபுத்திரன் அவர்களைப் போன்றே இவரும் வகைப்படுத்தியிருப்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் அக்கினிபுத்திரன் அவர்கள் இறப்புச் சடங்குகளைத் தனியே பிரித்துச் சாவுச் சடங்குகள் என்ற வகைப் பாட்டிற்குள் அடக்கியிருக்கிறார். ஆனால் க. மலைச்சாமி அவர்களோ இறப்புச் சடங்குகளையும் வாழ்வுச் சடங்குகளாகக் குறிப்பிட்டியிருக்கின்றார். இதற்கான காரணத்தை அவருடைய விளக்கத்தின் மூலமாகப் புரிந்து கொள்ள இயலவில்லை.

ஒருவேளை வாழ்வியல் சடங்குகள் என்ற பகுப்பினை நினைவில் கொண்டு வாழ்வுசார்ந்த சடங்கு என்ற பகுப்பினை அமைத்திருக்கலாம். இதனை அனுமானிக்கத்தான் முடிகிறதே தவிர மலைச்சாமி அவர்களின் விளக்கத்திலிருந்து தெளிவாகப் பெற இயலவில்லை.

இம்மதிப்பீட்டினால் பொதுவாகத் தமிழ் நாட்டுப் புறவியல் அறிஞர்கள் தங்களுடைய வகைப்பாட்டிற்குரிய அடிப்படையை விளக்கவில்லை என்பதை அறியலாம். ஆனால் பிரெஞ்சு நாட்டைச் சார்ந்த அர்னால்டு வான் கென்னப் என்பவர் (Arnold van Jennep) சடங்குகளின் வகைப்பாட்டிற்குரிய அடிப்படையை விளக்குகிறார். அவர் எவ்வாறு விளக்குகிறார் என்பதைப் பின்வரும் பகுதியில் புரிந்து கொள்ளலாம்.

**1-2-1 வான் கென்னப் அறிமுகம் செய்யும் சடங்குகளின் வகைப்பாடு:**

வான் கென்னப் தனக்கே உரிய சடங்குகளின் வகைப்பாட்டை முன் வைப்பதற்கு முன்னர்த் தனக்கு முன்பு சடங்குகளை வகைப்படுத்திய ஆய்வாளர்களின் கருத்துகளை எடுத்துக்காட்டி அறிமுகம் செய்கிறார்.

டெய்லர் (Tylor), பிரேசர் (Frazer), கூபர்ட் (Hubort), கேடன் (Hadden), கிளேட் (Clodd), ஹாட்லேண்ட் (Hartland), லேங் (Lang) அடால்ப் பாஸ்டியன் (Adalf Bastian) ஸ்மித் (Smith), மாரட் (Marett) கேவிட் (Hewitt) ஆகிய அறிஞர்கள் சடங்குகளை வகைப்படுதியுள்ள முறைகளை எடுத்துக்காட்டி அறிமுகம் செய்கிறார். இவ்வறிஞர்களின் வகைப்பாட்டினை அடிப்படையாகக் கொண்டே வான்கென்னப் தன்னுடைய வகைப்பாட்டை விளக்குகிறார்.

டெய்லர் சடங்குகளைப் பாவனைச் சடங்குகள் (Sympathetic) தொத்து மந்திரச் சடங்குகள் (Centagious) என வகைப்படுத்தி யிருப்பதைச் சுட்டிக்காட்டுகிறார். (1960 : 5) மேலும் இவ்வகைப்பாடு அடால்ப் பாஸ்டியன் என்ற ஆய்வாளரின் வகைப்பாட்டின் தாக்கத்தைப் பெற்றுள்ளதாகவும் குறிப்பிடுகின்றார் ஆனால் இவ்வகைப்பாட்டின் வன்மை, மென்மை குறித்து வான் கென்னப் எவ்விதக் கருத்தும் தெரிவிக்கவில்லை.

டெய்லரின் வகைப்பாட்டை எடுத்துக்காட்டிய பின்னர் பிரிட்டன் நாட்டைச் சார்ந்த லேங் (Lang), கிளேட் (Cladd) ஹாட்லேண்ட் (Hart land) ஆகிய அறிஞர்களும் அடால்ப் பாஸ்டியன் என்பவரின்

தாக்கத்தைப் பெற்றுச் சடங்குகளைப் பாவனைச் சடங்குகள், தொத்து மந்திரச் சடங்குகள் என வகைப்படுத்தியுள்ளதை எடுத்துக் காட்டுகிறார் (1960 : 4)

அடுத்து மேற்குறிப்பிட்ட அறிஞர்களிடமிருந்து வேறுபடுகின்ற முறையில், அடால்ப் பாஸ்டியனின் பாதிப்பைப் பெறாத நிலையில் மேன் ஹார்ட்ஸ் (Manhardts), பிரேசர் (Frazer) ஸ்மித் (Smith) ஆகிய அறிஞர்கள் புதிய கண்ணோட்டத்தில் (New Lime of Approach) சடங்குகளை வகைப்படுத்தியிருப்பதைச் சுட்டிக்காட்டுகிறார். அதாவது இவ்வறிஞர்கள் சடங்குகளைத் தூய்மை - தூய்மையற்றவை, புனிதம் - தீட்டு என எதிர்மறை நிலையில் வகைப்படுத்தியிருப்பதை வான் கென்னப் எடுத்துக்காட்டுகிறார். (1960 : 6) இவ்வறிஞர்களின் கருத்துகளோடு இங்கிலாந்து நாட்டைச் சார்ந்த மேரிட் (Marett), அமெரிக்காவைச் சார்ந்த கேவிட் (Hewett) ஆகிய அறிஞர்கள் இயக்கச் சடங்குகள் (dynamistic Rituals) என்ற ஒரு வகைப்பாட்டினைப் புதிதாக முன் வைத்திருப்பதை வான் கென்னப் சுட்டிக் காட்டுகிறார் (1960 : 7) இவ்வகைப்பாடு இயக்கவியல் கோட்பாட்டின் வெளிச்சத்தில் உருவாக்கப்பட்டுள்ளதாகவும் சுட்டிக் காட்டுகிறார். இவ்வாறு சுட்டிக்காட்டும் வான் கென்னப், டெய்லரின் வகைப்பாட்டில் காணப்படும் பாவனைச் சடங்கு என்ற வகைப்பாட்டினுள் இயக்கச் சடங்குகளை அடக்கிக் கூறலாம் என்று கருத்துரைக்கின்றார். ஆனால் ஆவி சார்ந்த சடங்குகளைத் தனி வகைப்பாடாகக் கருத வேண்டும் என்று குறிப்பிடுகின்றார். (1960 : ப1)

முன்னரே குறிப்பிட்டுள்ளபடி இத்தகைய அறிஞர்களின் சடங்கு வகைப்பாடு குறித்த கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு ஒரு புதிய வகைப்பாட்டினை வான் கென்னப் முன் வைக்கின்றார். அதனை மூன்று நிலைகளில் வகைப்படுத்தியுள்ளார். அவை கீழ் வருமாறு -

| | | |
|---|---|---|
| I | **பாவனைச் சடங்குகள் (Sympathetic Rites)** | **தொகுத்து மந்திரச் சடங்குகள் (Contagious Rites)** |
| II | **நேரடியான விளைவுதரும் சடங்குகள் (Direct Rites)** | **மறைமுகமான விளைவு தரும் சடங்குகள் (Indirect Rites)** |
| III | **உடன்பாட்டு நிலைச் சடங்குகள் (Positive Rites)** | **எதிர்மறை நிலைச் சடங்குகள் (Negative Rites)** |

இவ்வகைப்பாட்டில் அடங்கியுள்ள மூன்று ஜோடி சடங்குகளும் இயக்கவியல் சடங்குகள் (dynamistic Rites) எனக் கருத்துரைக்கின்றார் (1960 : 10-12) பின்னர் இவ்வகைகள் அனைத்தையும் இணைத்து ஒரு சிறப்பு வகைப்பாட்டினை முன்வைக்கின்றார் அது கீழே தரப்பட்டுள்ளது.

1. பிரிவு சார்ந்த சடங்குகள் (Rites of Separation)
2. மாற்று நிலைச் சடங்குகள் (Rites of bransition)
3. மீளச் சேர்தல் சடங்குகள் (Rites of incerporation)

இச்சிறப்பு வகைப்பாட்டோடு வான் கென்னப் மேலும் சில வகைப் பாடுகளை முன்வைக்கின்றார். அதாவது நாட்டுப்புறச் சமயம் குறித்த கோட்பாடுகளைத் துணையாகக் கொண்டு சடங்குகளைக் கீழ்க்கண்ட வாறு வகைப்படுத்துகின்றார்.

கோட்பாடு - மதம் சமயம்
(Theory - Religion)

- இயக்க ஆற்றல் மூலக் கோட்பாடு (Dynamism)
- ஆவியுலகக் கோட்பாடு (Animism)
  - இனமரபு குறியீட்டியல் கோட்பாடு (Totenism)
  - ஆவியுலகக் கோட்பாடு (Spirition)
  - பல்பூதவியல் கோட்பாடு (Polydenomism)
  - இறைமைக் கோட்பாடு (Theism)

இடைப்பட்ட நிலைகள் (With Inremidiate Stage)

இத்தகைய வகைப்பாட்டோடு மந்திரம் என்ற நம்பிக்கைச் சார்ந்த செயல்பாட்டின் அடிப்படையிலும் வகைப்படுத்திக் காட்டுகிறார் அவை கீழ் வருமாறு -




ஒட்டுமொத்தத்தில் வான்கென்னப் சடங்குகளை நான்கு வெவ்வேறு கண்ணோட்டங்களில் வகைப்படுத்திக் காட்டியிருக்கின்றார். இருப்பினும் இவை எல்லாவற்றையும் மூன்று முக்கியமான வகைகளுக்குள் அதாவது

1. பிரிவுச் சடங்குகள் (Rites of Separation)
2. மாற்று நிலைச் சடங்குகள் (Rites of transition)
3. மீளச் சேர்தல் சடங்குகள் (Rites of incorporation)

என்ற வகைக்களுக்குள் அடக்கிவிடலாம் என்ற வான்கென்னடிப்பின் கருத்துக்களை அவருடைய பல்வேறு ஆய்வுகளிலிருந்து புரிந்து கொள்ள முடிகிறது.

**முடிவுரை :**

தமிழக நாட்டுப்புறவியல் அறிஞர்கள் சடங்குகளை வகைப்படுத்தியிருப்பது சுட்டிக் காட்டப்பட்டு அவ்வகைப்பாடு மதிப்பீட்டிற்கு உட்படுத்தப்பட்டதிலிருந்து சில முடிவுகளைப் பெற முடிகிறது. இவை கீழ் வருமாறு :

1) தமிழ்ச் சூழலில் நாட்டுப்புறவியல் ஆய்வுகள் தொடக்க நிலையைக் கடந்து கொண்டிருப்பதாலும், வகைப்பாடு பற்றிய சிந்தனைகள் வளர்ச்சியடையாத நிலையில் இருப்பதாலும், அவரவர் தங்களுக்குக் கிடைத்த சடங்கு தொடர்பான தகவல்களை அடிப்படையாகக் கொண்டு சடங்குகளின் செயல்பாடு, அவை மக்கள் வாழ்க்கையில் உருவாக்கும் விளைவுகள், அவை பற்றிய நம்பிக்கைகள், அவை ஏற்படுத்தும் உணர்வுகள், எனப் பல்வேறு பண்புகளின் அடிப்படையில் வகைப்படுத்துவதற்கு முயற்சி செய்திருப்பதை உணர்ந்து கொள்ள முடிகிறது.

2) தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வாளர் எவரும் தங்கள் பகுதியில் வழக்கிலிருக்கும் அனைத்துச் சடங்குகளையும் அல்லது பெரும்பாலான சடங்குகளையாவது உள்ளடக்கக் கூடிய பொதுவான வகைப்பாட்டினை உருவாக்குவதற்கு முயற்சி மேற்கொள்ளவில்லை என்பதனை அவர்களுடைய சடங்கு வகைப்பாட்டிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது.

இவ்வாறு தமிழக நாட்டுப்புறவியல் அறிஞர்களின் வகைப்பாட்டினை மதிப்பீடு செய்ததால் பெற்ற சில முடிவுகளைத் தொடர்ந்து வெளிநாட்டு அறிஞர்களின் சடங்கு வகைப்பாடுகளைக் குறிப்பாக, பிரெஞ்சு நாட்டு அறிஞரான வான் கென்னப் என்ற அறிஞரின் வகைப்பாடுகளை எடுத்துக் கூறும் முயற்சி இக்கட்டுரையில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## துணை நின்றவை

### I நூல்கள்


| | | |
|---|---|---|
| 1. | இராமநாதன், ஆறு<br>1982 | நாட்டுப்புறப்பாடல்கள் காட்டும்<br>தமிழர் வாழ்வியல்,<br>மணிவாசகர் நூலகம்,<br>சிதம்பரம். |
| 2. | சண்முக சுந்தரம். க<br>1986 | திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப்<br>பாடல்களில் சமுதாய அமைப்பு,<br>காவ்யா வெளியீடு,<br>பெங்களூர். |

3. பதிப்பாசிரியர்கள் 1956 — கலைக் களஞ்சியம் தொகுதி 2 தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை

4. Van Gennep, Arnold — Rites of Passage Routledge and Kegen Paul, Londen

## II ஆய்வேடு

1. அக்கினி புத்திரன் 1983 — "சடங்குகள்" முனைவர் பட்டத்திற்கு அளிக்கப் பெற்ற ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக் கழகம் மதுரை

2. மலைச்சாமி. க — 'வலையர் வாழ்வியல்' (மதுரை மாவட்டம்) முனைவர் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு மதுரை காமராசர் பல்கலைக் கழகம் மதுரை.

3. வேலுசாமி. ம — 'மதுரை மாவட்டக் கிராம சமுதாயங்கள்' சிலவற்றுள் காணப்படும் நாட்டுப்புறச் சமயம் - ஒப்பாய்வு முனைவர் பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு மதுரை காமராசர் பல்கலைக் கழகம் மதுரை.

